'இல்லம்' ஒன்றிற்கு மேற்பார்வையாளராக (Superintendent) அமர்த்தப்பட்டார். இதனுலும் அவருடைய ஆராய்ச்சிக்கு வாய்ப்புக் கிடைத்தது. அவருடைய ஆராய்ச்சிகளின் முடிவு வருமாறு:—

அம்மையாரின் பயிற்சி முறையில் (Teaching methods) மூன்று முக்கியமானவையாகக் கருதப்பட வேண்டும். அவை யாவன :— குழந்தைகளின் தசை வளர்ச்சி, ஐம்புலப் பயிற்சி, சுதந்திரம். தசை வளர்ச்சிக்காக அவர் சிறுவர்களுக்கு உரிய சில உடற்பயிற்சிகள் கண்டுபிடித்து உள்ளார்கள். ஐம்புலப் பயிற்சி கொடுப்பதற்காகச் சில உதவி கருவிகள் அவர்களே உண்டாக்கி இருக்கின்றூர்கள். மூன்ருவது, அவர்கள் பள்ளியில் குழந்தைகளுக்கு முழுச் சுதந்திரம் உண்டு. சுருங்கச் சொல்லு மளவில், தசைகளுக்கும், பின்னர் நரம்புகளுக்கும் தகுந்த உடற் பயிற்சி மூலம் கல்வி புகட்டி, பின்னர் ஐம்புலன்களுக்குப் பயிற்சி கொடுத்து, இவற்றின் மூலம் குழந்தைகள் புற உலகிலுள்ள பொருள்களைப் பற்றிய பொதுக் கருத்துக்களைப் பெறும்படிச் செய்வது, பின்னர் அக்கருத்துக்களைக் கொண்டு குழந்தைகளின் உள்ளங்களில் நுணுகிய எண்ணங்கள் எழும்படிச் செய்வது, பின்னர் அவ்வெண்ணங்களை உலகியலில் புகுத்தி, குழந்தை களையே ஒழுக்க முறை, நீதி இவற்ருேடு நடக்கும்படிச் செய்தல். குழந்தைகள் இவற்றையெல்லாம் செய்யும்பொழுது அவர்கள் ஆசிரியர்களால் அடக்கப்படக் கூடாது. அவர்களுக்கு முழுச் சுதந்திரம் உண்டு.

மாண்டிசாரி பள்ளிக்கூடத்தில், சாதாரணப் பள்ளிக்கூடங் களில் இருப்பதைப் போன்று கால அட்டவணை இல்லை. எல்லாக் குழந்தைகளும், விருப்பம் உள்ளவற்றையும் இல்லாதவற்றையும் சேர்த்தாற்போல் விழுங்க வேண்டியது இல்லை. அங்கே ஆசிரியை இருக்கமாட்டார்; வழிகாட்டிதான் இருப்பாள். அவள் குழந்தை களை மேற்பார்த்துக்கொண்டு இருப்பாள்; குழந்தைகள் தவறும்பொழுது அவள் திருத்துவாள். அவ்வளவுதான் அவள் வேலை. குழந்தைகளுக்குத் தண்டனை கிடையாது. ஒரு குழந்தை தனக்குக் கொடுக்கப்பட்ட வேலைகளைச் சரிவரச் செய்து முடிக்க வில்லை என்ருல் அக்குழந்தைக்கு அதைச் செய்ய அவ்வளவு திறமையில்லையாகையால், வழிகாட்டி அக்குழந்தைக்கு இன்னும் சுலபமான பயிற்சிகளைக் கொடுப்பாள். அப்பள்ளியில் உள்ள ஆசனங்கள் முதலியவை கனம் இல்லாமல் இருக்கும். ஆகையால் குழந்தைகள் வேண்டிய இடங்களுக்கு அவற்றைத் தூக்கிச்

சென்று உட்கார்ந்துகொண்டு வேலை செய்யலாம். குழந்தைகள் தாங்களாகப் பெருக்கவும், தோட்ட வேலைகள் செய்யவும், செடிகளைப் பாதுகாக்கவும், உடைகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ளவும், சிற்றுண்டி பரிமாறவும், மண்ணால் சட்டிகளையும் செங்கல்களையும் செய்யவும், அழகாக அணிவகுத்துச் செல்லவும் வழிகாட்டப்படுகின்றார்கள்; இவையெல்லாம் செய்கின்ற பொழுது தங்களுக்குத் தாங்களே ஒழுங்கு, கட்டுப்பாடு, அழகு உணர்ச்சி முதலிய அருங்குணங்களை அவர்கள் கற்றுக்கொள்ளு கின்றார்கள். அவைகளை யாரும் வெளியிலிருந்து திணிப்ப தில்லை.

மாண்டிசாரிப் பள்ளியில் குழந்தைகளுக்குக் கொடுக்கும் ஐம்புலப் பயிற்சிகள் மிக அழகும் ஆச்சரியமும் வாய்ந்தவை. ஒரு குழந்தை 3-7-வயதுக்குள்தான் தன் ஐம்புலன்கள் வழி யாகப் பிற உலகைப் பற்றிய அறிவைக் கிரகிக்கின்றது. மாண்டி சாரிப் பள்ளியிலுள்ள குழந்தைகளுக்கு, ஐம்புலன்களுக்கும் தனித்தனியே மாற்றி மாற்றிப் பயிற்சி கொடுத்துப் பொருள் களின் தன்மையைக் குழந்தைகள் புரிந்துகொள்ளும்படிச் செய்கின்றார்கள். உதாரணமாக, அங்குள்ள வழிகாட்டி ஒரு பச்சைக் குச்சி அல்லது எழுதுகோலைக் குழந்தையிடம் காட்டு கின்றாள். "இதன் நிறம் பச்சை" என்று சொல்லுகின்றாள். அக் குச்சியை அக் குழந்தை எடுத்துப் பார்க்கின்றது. பின்னர் இன் னொரு பச்சைப் பேனாவைக் காட்டி "இதன் நிறம் என்ன?" என்று அக் குழந்தையைக் கேட்கிறாள். அது "இதன் நிறம் பச்சை" என்று சொல்லுகின்றது. பின்னர்ப் பல வர்ணப் பேனாக்களை ஒன்றாகக் கலந்து, "இவற்றில் பச்சைப் பேனாக்கள் எல்லாவற்றையும் பொறுக்கு" என்கின்றாள். உடனே பச்சை வர்ணம் இன்னது என்பதை அறிந்துள்ள குழந்தை வெகு சுலபமாகப் பச்சை பேனாக்கள் எல்லாவற்றையும் பொறுக்கித் தனியாக வைக்கின்றது. இங்ஙனமே மாண்டிசாரிப் பள்ளிக் கூடங்களிலுள்ள குழந்தைகள், பலவித உபகரணங்களால், காது, மெய் (உடல் உணர்ச்சி) முதலிய புலன்களுக்குப் பயிற்சி கொடுக்கப்படுகின்றார்கள். இப் பயிற்சிகளால் பொருள்களின் அகலம், நீளம், கனம், உயரம், தண்மை, வெப்பம், பலவகைச் சப்தங்கள், பாட்டுக்களின் வித்தியாசங்கள் ஆகியவற்றைக் குழந் தைகள் தாமாகவே கற்றுக் கொள்ளுகின்றன. மாண்டிசாரி அம்மையார் தம்முடைய உபகரணங்களைக் கொண்டே குழந் தைகளுக்கு வாசித்தல், எழுதுதல், கணிதம் முதலியவற்றைக்

கற்றுக் கொடுத்தார்கள். தாய்மொழி கற்பதிலும் உரிய இடங்களில் இம்முறையை அனுசரிக்கலாம்.

மாண்டிசாரி அம்மையார் இந்திய நாட்டிற்கு வந்து கல்வித் தொண்டு ஆற்றியபொழுது சென்னைக்கருகிலுள்ள அடையாற்றில் தமது முறைப்படிச் சொல்லிக் கொடுக்க ஒரு பள்ளிக்கூடம் நிறுவினர்கள். அப்பள்ளி இன்றும் திறம்பட நடந்து வருகின்றது.

கிண்டர்கார்ட்டன் முறை

இம்முறையை ஏற்படுத்தியவர் ஜெர்மன் நாட்டுப் பேரறிஞர் பிராபெல் என்பவர். "கிண்டர்கார்ட்டன்" என்ற சொற்றொடர்க்குக் "குழந்தைகளின் தோட்டம்" எனப் பொருள். இவர் குழந்தைகள் விளையாட்டு முறையில்தான் கல்வி கற்கவேண்டும்; அப்பொழுதுதான் அவர்களிடமுள்ள ஆண்மை (Personality) வெளிப்பட்டு வளரும்; பள்ளிகளில் குழந்தைகளுக்குச் சுதந்திரம், விளையாட்டு, மகிழ்ச்சி ஆகியவை இருக்கவேண்டும்; அப்பொழுதுதான் குழந்தைகளின் இயல்பு ஊக்கங்கள் வெளிப்படும் என்பனவற்றை வற்புறுத்தினர். இவர் பள்ளிக்கூடத்தில் புத்தகங்கள் இல்லை. அவற்றிற்குப் பதிலாகக் குழந்தைகளுக்குக் கதைப் பாட்டுக்கள் சொல்லிக் கொடுத்தல்; அக் கதைகளை நடிக்கும்படிப் பழக்குதல்; பின்னர் அக் கதையை ஓவியம் மூலம் தீட்டப் பழக்குதல் உண்டு. அவர் இருபது வகை அட்டைகள் உருண்டைகளைக் கொண்டு கதைப் பாட்டுக்களைச் சொல்லிக் கொடுத்தார். இவற்றிற்கு, "பிராபெலின் நன்கொடைகள்" எனப் பெயர். அவர் பாடத்திட்டத்தில் கைத்தொழிலுக்கு முக்கியத்துவம் இருந்தது. அதோடு இயற்கைப் பாடம், சமயக் கல்வி, கணிதம், ஓவியம், மொழி ஆகியவையும் இடம் பெற்றிருந்தன. அவருடைய முறையால் குழந்தைகள் உற்சாகத்துடனும், ஊக்கத்துடனும் விளையாட்டு மூலம் நன்கு கல்வி கற்று வந்தன. இம் முறையையும் தாய்மொழிப் பயிற்சியில் வேண்டிய அளவில் ஆசிரியர்கள் கையாளலாம்.

## 1 முதல் 4 வகுப்புக்கள் முடிய

(1) படம் பார்த்துச் சொல்லுதல்

பல விதமான மிருகங்கள், பறவைகள், பல வேலைகளைச் செய்தல், மரம் செடிகொடிகள் முதலியவை நிரம்பிய ஏராள மான படங்களை இவ்வகுப்புக்களில் ஆசிரியர்கள் உபயோகிக்க வேண்டும். ஒவ்வொரு படத்தையும் காட்டி அதிலுள்ள படத்





தில் காணப்படும் பொருள்களின் பெயர்களை வாய்மொழி மூலம் நன்கு சொல்லும்படிச் செய்யலாம்; எழுதும்படியும் செய்ய லாம்.

அப் படங்களைப் பார்த்து 'அ'வில் ஆரம்பிக்கும் மிருகங்கள், பறவைகளின் பெயர்களைத் தனித்தனியே சொல்லும்படி



யும், எழுதும்படியும் செய்யலாம். இங்ஙனமே பல விதமான பயிற்சிகள் கொடுக்கலாம்.



கதைகளை விளக்கும் படங்களைப் பார்த்து மாணவர்கள் கதைகளைச் சொல்லும்படிச் செய்யவேண்டும். படம் பார்த்துச் சொல்லும் முறைகளைக் கீழ் வகுப்பு நான்கிலும் கையாளலாம்.

(2) அட்டைத் துண்டுகளை உபயோகித்தல்

ஒரு பெட்டியில் தமிழ் எழுத்துக்களை எழுதிப் போட்டு மாணவர்களைத் தனித்தனியே விட்டு உயிர் எழுத்துக்கள், மெய்

எழுத்துக்கள், உயிர் மெய் எழுத்துக்கள் எழுதிய அட்டைகளோடு என்று சொல்லலாம்.

இன்னொரு பெட்டியில் மிருகங்கள், பறவைகள், மரம் செடி கொடிகளின் பெயர்கள் தனித்தனியே எழுதிய துண்டு அட்டைகளைப் போட்டு வைக்கலாம்; வகுப்புக் கரும்பலகையில் ஒவ்வொரு மிருகத்தின் பெயரை எழுதி, அம் மிருகத்தின் பெயர் எழுதியுள்ள அட்டையை மாணவர்களை விட்டு எடுத்து அதற்கு நேராகக் கீழே வைக்கும்படிச் செய்யலாம். ஆசிரியர் இங்ஙனமே படத்தைக் கரும்பலகையில் வைத்துக் காட்டி அவற்றின் பெயரைச் சொல்லவோ எழுதவோ செய்யலாம்.

மாணவர்களுக்குக் கதைகளில் ஆவல் அதிகம். உதாரணமாக, "காக்கையும் நரியும்" என்ற கதையைச் சொல்லிவிட்டு, அக் கதைக்குத் தகுந்தாற்போல் உரிய பல வார்த்தைகளை எழுதி ஒரு பெட்டியில் போடலாம். மாணவர்களைக் கொண்டு அவ் வார்த்தைகளை எடுத்து வரிசையான வாக்கியங்களாகப் பொருத்தி மேஜைமீது வைக்கும்படிச் செய்யலாம். இன்னொரு மாணவனை விட்டுப் படிக்கும்படிச் செய்யலாம்.

மேலும் படத்தில் கொடுத்துள்ளபடி ஒரு செருகு அட்டை செய்து, எழுதியுள்ள துண்டு அட்டைகளை எடுத்துப் பொருள் கொடுக்கும் முறையில் பொருத்தும்படிச் சொல்லலாம். ஆசிரியர் அடிக்கடி அட்டைகளை மாற்றி மாணவர்களுக்குள் அதிக ஆர்வத்தை உண்டாக்க வேண்டும்.

மாணவர்களுக்குள் இருக்கும் குழுக்களுக்குள் போட்டி உணர்ச்சி கீழ்க்கண்ட முறையில் ஏற்படுத்திச் சில தமிழ்ப் பாடங்களையும், எழுத்துக்களின் உச்சரிப்பையும் கற்றுக்கொடுக்கலாம். ஒரு குழுவை நிறுத்தி வைத்து அதற்கு எதிராக இன்னொரு குழுவை நிற்க வைக்கவேண்டும். இரண்டு குழுக்களிலும் சமமான எண் உள்ள மாணவர்கள் இருக்க வேண்டும். 3, 4-ஆம் வகுப்புக்களுக்குக் கீழ்க்கண்ட விளையாட்டு முறைகளில் பெயர்ச் சொல், வினைச் சொற்களைப் பற்றியும், பன்மை, ஒருமைச் சொற்களைப் பற்றியும் சொல்லிக் கொடுக்கலாம். இச் சொற்களைத் துண்டுக் கடிதத்தில் எழுதி ஒரு பெட்டியில் கலந்து போட வேண்டும். ஒரு குழுவிலுள்ள மாணவன் பெட்டியில் உள்ள ஒரு துண்டுக் கடிதத்தை எடுத்துத் தனக்கு நேராகப்

பிடித்து, அடுத்த குழுவிலுள்ள மாணவனைச் சுட்டிக் காட்டி என்ன சொல் என்று கேட்க வேண்டும். கேட்கப்பட்ட பையன் சரியாகச் சொல்லிவிட்டால், அப் பையன் வென்று விட்டதாக ஒரு தேர்வுக் குறி அக் குழுவிற்குக் கொடுக்க வேண் டும். இங்ஙனமே இரண்டு குழுக்களில் உள்ளவர்களையும் மாறி மாறிக் கேட்கும்படிச் செய்து அதிகத் தேர்வுக் குறிகள் வாங்கிய குழுவை வெற்றி பெற்றதாக ஆசிரியர் நிர்ணயிக்கலாம். இந்த முறையிலேயே 4-ஆம் வகுப்புக்கு வினைச் சொற்களின் முக் காலங்களையும் சொல்லிக் கொடுக்கலாம்.

இவ்வித முறையிலேயே 1, 2-ஆம் வகுப்பு மாணவர்களி டையே ழ, ள, ல இவற்றின் ஒலி வித்தியாசங்களையும் ற, ர இவற்றின் ஒலி வித்தியாசங்களையும், ண், ன் வித்தியாசங்களையும் கண்டு போதிக்கலாம். தற்காலத்தில் மேல் வகுப்புக்களி லுள்ள மாணவர்களில் அநேகர் மேற்கண்ட எழுத்துக்களின் வித்தியாசங்கள் தெரியாமலே தவறுதலாக உச்சரிக்கின்றனர்கள். இத்தவறுதல்களை மேற்கண்ட விளையாட்டு முறையிலேயே கீழ் வகுப்புக்களிலேயே திருத்திவிட்டால், உச்சரிப்புக்களின் வித்தியாசங்களை மாணவர்கள் நன்கு பழகிக்கொள்ளுவார்கள்.

(3) "இது என்ன?" என்று கேள்வி கேட்டல்

வகுப்பிலுள்ள மாணவர்கள் அனைவரும் வட்டமாக உட் கார்ந்துகொள்ள வேண்டும். ஒரு மாணவனை நடுவில் உட்கார வைக்க வேண்டும். சுற்றி உட்கார்ந்திருக்கும் ஒவ்வொரு மாணவனும் தன்னுடைய எழுது பலகையில் (Slate) ஏதாவது ஒரு வார்த்தையை எழுதி வைத்துக்கொண்டு கீழே வைத்து விடவேண்டும். நடுவிலுள்ள மாணவன் உட்கார்ந்திருக்கும் ஒவ்வொரு மாணவனிடமும் செல்லும்பொழுது, உட்கார்ந்துள்ள மாணவன் தன் கரும்பலகையை எடுத்துக் காட்டவேண்டும். நிற்கும் மாணவன் அதைச் சரியாகப் படித்துவிட்டால் அந்த மாணவன் அடுத்த மாணவனிடம் சென்று அங்ஙனமே செய்ய வேண்டும். நிற்கும் மாணவன் அவ்வார்த்தையைப் படிக்கா விட்டாலோ, நீண்ட நேரம் தயங்கிக் கொண்டிருந்தாலோ அம் மாணவன் தோற்றுவிட்டதாகக் கருதப்பட்டு, அவன் உட்கார்ந்து கொள்ள வேண்டும். உட்கார்ந்துள்ள மாணவன் எழுந்து நடுவில் வந்து முன்பு செய்த மாதிரியே செய்யவேண்டும். இம் முறையிலேயே உட்கார்ந்துள்ள மாணவர்கள் தங்கள் கரும்

பலகைகளில் ஒரு பதத்தை எழுதலாம். நிற்கும் மாணவனை அதற்கு எதிர்ப்பதம் சொல்லும்படிச் செய்யலாம். உட்கார்ந்திருக்கும் மாணவன் ஒருமை பெயர்ச் சொல், வினைச் சொற்களை எழுதலாம்; நடுவிலுள்ள மாணவனை அதற்குப் பன்மைகளைச் சொல்லச் செய்யலாம். உட்கார்ந்திருக்கும் மாணவர்கள் நிகழ்காலத்தை எழுதலாம்; அதற்குரிய இறந்தகால, எதிர்கால வினைகளைச் சொல்லும்படிச் செய்யலாம். இம்முறையில் போட்டி உணர்ச்சி தூண்டப்பட்டுப் பாடங்களை நன்கு கற்றுக் கொள்ளுவார்கள் என்பது திண்ணம்.

(4) கண்டுபிடித்தல் முறை

ஆசிரியர் ஒரு கதை சொல்லிக்கொடுத்த பிறகோ, அல்லது ஒரு பாடம் நடத்தி முடித்த பின்னரோ கீழ்க்கண்ட முறையைக் கையாளலாம். ஒவ்வோர் அட்டைத் துண்டிலும் ஒரு கேள்வியை எழுதி வகுப்பிலுள்ள ஒவ்வொரு மாணவனிடமும் கொடுக்க வேண்டும். அக்கேள்விகளுக்குச் சரியான விடைகளைத் தனித் தனி அட்டைகளில் எழுதி, வகுப்பறையில் பல இடங்களில் ஆசிரியர் முன்னரே ஒளித்து வைத்துவிட வேண்டும். மாணவர்கள் தங்களுக்குக் கொடுத்த கேள்விகளுக்குத் தகுந்த பதில் உள்ள அட்டைகளைத் தேடி எடுத்துக்கொண்டு வருதல் வேண்டும். இம்முறையிலேயே ஆசிரியர் பாதியாக எழுதப் பட்ட அட்டைகளைக் கொடுத்து, அடுத்த பாதி விடை உள்ள அட்டைகளைக் கண்டுபிடித்து வரும்படிச் சொல்லலாம். எதிர்ப் பதங்களையும் இங்ஙனமே சொல்லிக் கொடுக்கலாம். இம்முறையில் ஆசிரியர்கள் மிகுந்த சிரமத்துடனும், கவனத்துடனும் அட்டைகளைத் தயார் செய்து அவற்றில் எழுதுகின்றவற்றைப் பிழையின்றி எழுத வேண்டும்.

(5) உத்தரவிடுதல்

மாணவர்களை வட்டமாக உட்காரும்படிச் செய்யலாம். ஆசிரியர், ஒரு மாணவனின் காதில் இரகசியமாக, ஏதாவது ஓர் உத்தரவிடலாம். அந்த மாணவன் அடுத்தவனிடம் இரகசியமாக அந்த உத்தரவையே சொல்லுவான். இங்ஙனமாக அடுத்து அடுத்துச் சொல்லிய பின் கடைசி மாணவன் உத்தரவுப்படி நடப்பான். அவ்வுத்தரவைப் புரிந்துகொள்ளாதவன் தோற்றவனாகக் கருதப்படுவான்.

(6) வார்த்தைகள் உண்டாக்குதல் (Word-building)

ஒரு மாணவன் ஓர் எழுத்தை ஆரம்பிக்கலாம்; அடுத்த மாணவன் இன்னோர் எழுத்தைச் சொல்லலாம். இங்ஙனமாக எழுத்துக்களை அடுக்கிப் பொருள் கொடுக்கக்கூடிய ஒரு வார்த்தையை உண்டாக்கலாம். கடைசியாக முடிக்கின்ற மாணவன் ஒரு தோல்விக் குறியைப் (Black mark) பெறுவான். முடிக்கத் தெரியாது திணறுகின்ற மாணவனும் தோற்றவனாகக் கருதப்படுவான். இங்ஙனம் வினைச் சொல், பெயர்ச் சொல் முதலியவற்றையும், 3, 4-ஆம் வகுப்பு மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கலாம். இவ்விளையாட்டு முறையை ஆரம்பிக்கும் முன்னர், இதிலுள்ள விதிகள், வழிகள் அனைத்தையும் மாணவர்களுக்கு எடுத்துச் சொல்லிவிட வேண்டும்.

(7) இணைப்புப் பயிற்சிகள் (Matching Exercises): இதில் பல வகைகள் உண்டு.

(அ) சரியாகப் பொருத்துக

ஆசிரியர் ஒரு வாக்கியத்தைக் கரும்பலகையில் எழுதிப் போடலாம். உதாரணமாக, "இராமன் கந்தனைத் தடியால் அடித்தான்." உடனே இந்த நான்கு வார்த்தைகளையும் நான்கு அட்டைத் துண்டுகளில் தனித் தனியாக எழுதி ஒரு குழுவைச் சார்ந்த மாணவர்களிடம் கொடுக்கவேண்டும். இம்மாதிரியே இன்னொரு வாக்கியத்தை எழுதிப்போட்டு, அவ்வார்த்தைகளை இன்னொரு குழு மாணவர்களிடம் கொடுக்க வேண்டும். இரண்டு குழுவில் இருக்கும் மாணவர்களும், மேற்கண்டபடி வாக்கியங்கள் வரும்படியாக வந்து, உரிய அட்டைகளுடன் வரிசையாக நிற்க வேண்டும். எந்தக் குழு விரைவில் சரியாக நிற்கின்றதோ அந்தக் குழுதான் வென்றதாகக் கருதப்படும். இம்மாதிரியே வாக்கியங்களை அட்டைகளில் தனித்தனியே இரண்டு குழு மாணவர்களுக்குக் கொடுத்துச் சரியாக நிற்கும்படிச் செய்து ஒரு கதையே பூர்த்தி செய்யும்படிச் செய்யலாம்.

(ஆ) கீழே கண்டவாறும் ஆசிரியர் கரும்பலகையில் எழுதிப்போட்டுப் பொருத்தமானவற்றோடு இணைத்துக் காட்டும்படிச் சொல்லலாம்.

| | |
|---|---|
| (1) காதில் அணிவது | செருப்பு |
| (2) கழுத்தில் ,, | ஒட்டியாணம் |
| (3) தலையில் ,, | வளையல்கள் |
| (4) இடுப்பில் ,, | குல்லாய் |
| (5) கையில் ,, | சங்கிலி |
| (6) பாதத்தில் ,, | தோடு |

(இ)

| | |
|---|---|
| நாய் | கத்துகின்றது |
| பன்றி | அலறுகின்றது |
| நரி | கூவுகின்றது |
| யானை | கர்ஜிக்கின்றது |
| கழுதை | பிளிறுகின்றது |
| சிங்கம் | உறுமுகின்றது |
| கோட்டான் | ஊளையிடுகின்றது |
| ஆந்தை | குரைக்கின்றது |

(ஈ) இங்ஙனமே இலக்கணத்தில் ஆண்பால் பெண்பால் சொற்களையும், எதிர்ச் சொற்களையும் பொருத்திக் காட்டும்படிச் சொல்லலாம்.

(8) கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய்க

(அ) ஒரு பாடத்தை மாணவர்களுக்குச் சொல்லிக்கொடுத்த பின்னர்,கீழ்க்கண்டவாறு பயிற்சிகள் கொடுக்கலாம். உதாரணம், "நரியும் காக்கையும்" என்ற கதையைச் சொல்லிக்கொடுத்த பின்பு கீழ்க்கண்ட பயிற்சியைக் கொடுக்கலாம்.

(1) பாட்டி———சுட்டுக் கொண்டிருந்தாள்.

(2) ——— அதைத் தூக்கிச் சென்றது.

(3) ——— மேல் உட்கார்ந்தது.

(4) மரத்தின் அடியில்——— வந்தது.

(5) "ஒரு——— பாடு" என்று நரி கேட்டது.

(6) காகம்——— திறந்ததும்——— விழுந்தது.

(7) நரி——— ஓடிவிட்டது.

(8) காகம்———விட்டது.

(ஆ) இங்ஙனமே வாக்கியங்களைக் கொடுத்து, பக்கத்தில் அடைப்புக் குறியில் சில வார்த்தைகளையும் கொடுத்து அவற்றி லிருந்து பொருத்தமானவற்றை எடுத்து எழுதும்படியும் சொல் லலாம்.

(உ-ம்)

(1) வீணை——— (தோற்கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவி.)

(2) சீதை——— (ஆண்பால், பெண்பால், பலர்பால், பலவின்பால், ஒன்றன்பால்.

(3) காந்தி———(தேசபக்தர், கவி, படைத்தலைவர்.)

(9) சரியாகத் திருத்தி எழுதுக :—

அ. பிழையான வாக்கியங்களை எழுதித் திருத்தச் சொல்லலாம்.

(1) கழுதை வந்தன.
(2) பத்து மனிதர்கள் வந்தது.
(3) எலி ஓடிற்று.
(4) ஒலி இல்லாவிட்டால் படிக்க முடியாது.

ஆ. (1) பசிள்ருச்ராளிதிப் (திருச்சிராப்பள்ளி)
(2) டம்கு (குடம்)
(3) ன்வதாந் (வந்தான்)

இ. (1) ஓடிற்று நாய் எலும்பைக் பாலத்தின் மேல் ஒரு கௌவிக்கொண்டு
(2) மகனைப் இறந்த போர்க்களத்தில் சென்றுள் தாய் ஒரு தன் தேடிச்
(3) பெருகிற்று காற்று மழை அடித்து.

(10) சரி தப்பு (Yes or No)

கீழ்க்கண்டவற்றில் சரி என்றால் √ இங்ஙனமும், பிழை என்றால் X இங்ஙனமும் குறியிட்டுக் காட்டுக.

அ. (1) பாரத நாட்டில் வசிப்பவர்களுக்குச் செவ்விந்தியர்கள் எனப் பெயர்.
(2) பொருள்களின் பெயர்களுக்கு எல்லாம் வினைச் சொல் எனப் பெயர்.
(3) நமக்குச் சுதந்திரம் வாங்கிக் கொடுத்தவர் காந்தி.
(4) இமாசலம் என்பது ஒரு மலைத் தொடர்.
(5) ஐசன்ஹோவர் இரஷிய நாட்டுத் தலைவர்.
(6) செவ்வாய்க் கிழமைக்கு அடுத்தது புதன்கிழமை.
(7) நான் விளையாட்டு மைதானத்திற்குப் படிக்கப் போகின்றேன்.

ஆ. ஒவ்வொரு வரிசையிலும் உள்ளவற்றில் இனத்தைச் சேராதவற்றை அடித்துவிடு.

(1) இராமன், கந்தன், பச்சையப்பன், கழுகு, சாத்தன்.

(2) அடித்தான், வென்றான், தின்றான், நாய், குடித்தான்.

(3) கழுதை, குதிரை, பன்றி, யானை, அடித்தான்.

(4) பல், நகம், முகம், காது, கண், மரம்.

(5) கொல்லர், தட்டார், தச்சர், கன்னார், மிராசுதார்.

5, 6, 7, 8 வகுப்புக்களுக்கும் நடுத்தரப் பள்ளி வகுப்புக்களுக்கும் விளையாட்டு முறையில் பயிற்றல்

*1, 2, 3, 4*-வகுப்புக்களுக்குக் கொடுக்கப்பட்ட முறைகளை இவ் வகுப்புக்களுக்கும் பாடங்களுக்குத் தக்கபடி கையாளுவதோடு இன்னும் சில புதிய முறைகளையும் கையாளலாம். உதாரணமாக, உரைநடைப் பாடங்களையும், துணைப் பாடங்களையும் நடத்தும் பொழுது ஆசிரியர் வகுப்பிலுள்ள ஒரு குழு மாணவர்களை, அப்பாடத்திலுள்ள கடின பதங்களையெல்லாம் பொறுக்கும் படிச் சொல்லலாம். அடுத்த குழுவை அவற்றிற்கு எதிர்ப் பதங்களைச் சொல்லும்படிச் செய்யலாம். இவ்வேலைகளை மாற்றி மாற்றிக் கொடுத்தால், போட்டி உணர்ச்சியால் வேலைகளை மாணவர்கள் வெகு ஊக்கத்துடன் செய்வார்கள்.

துணைப் பாடங்களை நடத்தும்பொழுது ஒரு பத்தியை, மாணவர்கள் மௌனமாகக் கொடுக்கப்பட்ட காலத்திற்குள் படிக்கவேண்டும். கால வரையறை முடிந்தவுடன் ஒரு குழுவி லுள்ள மாணவர்கள் இன்னொரு குழுவிலுள்ள மாணவர் களைக் கேள்வி கேட்கும்படிச் செய்யலாம். எந்தக் குழு மாண வர்கள் அதிகமான கேள்விகளுக்குப் பதில் சொல்லவில்லையோ அவர்கள் தோற்றுவிட்டதாகக் கருதப்படுவார்கள்.

மாணவர்கள் அனைவருக்கும் கதை கேட்பதிலும், கதை சொல்லுவதிலும் பிரியம் அதிகம். ஆசிரியர் ஒரு கதை யின் ஆரம்பத்தையோ, நடுப்பாகத்தையோ, கடைசிப் பாகத் தையோ கொடுத்து மற்றப் பாகத்தை முடிக்கும்படிச் சொல்ல லாம். மற்றும் ஒரு கதையைப் பற்றிய குறிப்புக்கள் கொடுத்து அக் குறிப்புக்களை விவரித்துச் சொல்லும்படிச் செய்யலாம். இங்கும் குழுக்கள் மூலம் இம் முறையைக் கையாளலாம்.

மற்றும் ஒரு கதையை ஆசிரியர் கரும்பலகையில் எழுதிப் போட்டு அதில் சில முக்கியமான வார்த்தைகளோ, சொற் றொடர்களோ இருக்கும் இடத்தை விட்டு வைக்கலாம். கதை யின் முடிவில் அவ்விடுபட்ட வார்த்தைகளையும், சொற்றொடர்

களையும் கலந்து எழுதி அவற்றிலிருந்து பொருத்தமானதை எடுத்துக் கோடிட்ட இடங்களில் எழுதும்படிச் செய்யலாம்.

பல விதமான கடிதம் எழுதும் முறைகளைச் சொல்லிக் கொடுக்கும் பொழுது ஆசிரியர் ஆரம்பங்களையும், முடிவுகளையும் மாற்றிக் கொடுத்து மாணவர்களை அவற்றைத் திருத்தி எழுதும்படிச் செய்யலாம். உதாரணம், வியாபார முறையில் எழுதும் கடிதத்தின் ஆரம்பத்தை, உறவு முறையில் எழுதும் கடிதத்திற்குக் கொடுத்து, முடிவுகளையும் இங்ஙனமே மாற்றிக் கொடுக்கலாம்.

5, 6, 7-ஆம் வகுப்புக்களுக்கு இலக்கணம் கீழ்க்கண்ட விளையாட்டு முறையில் போதிக்கலாம். ஒரு பத்தியிலுள்ள பெயர்ச் சொற்களை ஒரே சமயத்தில் இரண்டு குழுக்களைப் பொறுக்கி எழுதும்படிச் செய்யலாம். எந்தக் குழு முதலில் சரியாகச் செய்கின்றதோ அந்தக் குழு வென்றதாகக் கருதப்படும். இங்ஙனமே வினை, இடை, உரிச்சொற்களைக் கற்பிக்கலாம்.

ஒரு வகுப்பை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு குழுவுக்கும் நிகழ்காலம், இறந்த காலம், எதிர்காலம் என்று பெயர்கள் கொடுக்கலாம். ஒரு பத்தியிலுள்ள ஒரு வினைச் சொல் எந்தக் குழுவின் பெயருக்குப் பொருத்தமாக உளதோ அதிலுள்ள மாணவன் ஒருவன் சொல்லலாம்; உடனே அடுத்த குழுக்களிலுள்ள மாணவர்கள் தங்களுக்குரிய பெயருக்குத் தகுந்தாற்போல் அவ்வார்த்தையின் காலத்தைச் சொல்லவேண்டும். உதாரணம், இறந்த காலக் குழுவிலுள்ள மாணவன் 'இறந்தான்' என ஒரு வார்த்தையை எடுத்துச் சொன்னல், நிகழ்காலக் குழுவிலுள்ள மாணவர்கள் 'இறக்கின்ருன்' என்றும், எதிர்காலக் குழுவிலுள்ள மாணவர்கள் 'இறப்பான்' என்றும் சொல்ல வேண்டும். இம்முறையில் ஆசிரியர் மாணவர்களிடையே குழப்பம் இன்றி, அவ்வப்பொழுது ஒழுங்கு முறையைப் பார்த்துக்கொள்ள வேண்டும். இங்ஙனமே உடன்பாடு, எதிர்மறை, செய்வினை, செயப்பாட்டு வினைகளையும் கற்பிக்கலாம்.

மேற் சொல்லப்பட்ட விளையாட்டு முறைகளைக் கையாளும் பொழுது ஆசிரியர் முன்கூட்டியே தாம் நடத்தப் போகும் முறைகளுக்குத் தகுந்தாற்போல் பாடங்களையும், பாட உதவிகளையும் தயார் செய்துகொள்ள வேண்டும்; சுறுசுறுப்பாகவும் சமயோசிதமாகவும் நடந்து கொள்ள வேண்டும். ஒவ்வொரு

பாடமும் எந்த விளையாட்டு முறையில் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்பதை முன்னரே ஆலோசித்துத் தயாராக வகுப்பிற்குச் செல்லவேண்டும். அங்ஙனமின்றி வகுப்பில் சென்று யோசித்துக்கொண்டிருந்தால் வீண் காலம் ஆவதோடு மாணவர்களின் நன்மதிப்பையும் பெற முடியாது. மேலும் எல்லாப் பாடங்களையும் இம் முறையில் சொல்லிக் கொடுக்க முடியுமா என்ற ஓர் ஐயம் யாருக்கும் எழுவது இயற்கையே. சில பாடங்களை ஆசிரியரே எடுத்துக் கற்பிக்க வேண்டி நேரிடும்; உதாரணமாக, நன்னூல் சூத்திரங்கள், சில கடினமான குறட்பாக்கள், நாலடி வெண்பாக்கள், இதர செய்யுள்கள் முதலியவற்றை ஆசிரியரே சொல்லிக் கொடுத்து மாணவர்களை மனனம் செய்யத்தான் சொல்ல வேண்டும்.

நடிப்பு முறை

இம் முறையில் (Dramatization) அநேக பாடங்களைக் கற்பித்தால் அநேக மாணவர்கள் நல்ல முறையில் கற்றுக்கொள்வார்கள். இதில் மாணவர்களின் சிந்தனை சக்தி, உணர்ச்சி, சந்தர்ப்பத்திற்குத் தகுந்தாற்போல் தொனியை உயர்த்தல், தாழ்த்தல் முதலியவற்றைப் பெறுகின்றார்கள். அச்சம், கூச்சம் முதலியன நீக்கப் பெறுகின்றார்கள். மாணவர்கள் பேசும்பொழுது சொற்களை விழுங்குதல், மெல்லுதல், கடை எழுத்துக்களை விடுதல் முதலிய கெட்ட பழக்கங்களை இயற்கையாகவே விட்டு விடச் சந்தர்ப்பம் இருக்கின்றது. இம் முறையில் இயல், இசை, நாடகம் என்ற மூன்று வகையான தமிழையும் மாணவர்கள் விளையாட்டு முறையில் கற்க இடம் உண்டு.

குறிப்புக்கள்

இம்முறையை 1-ஆம் வகுப்பிலிருந்து 8-ஆம் வகுப்பு வரையும் அதற்கு மேலும் எல்லா வகுப்புக்களிலும் கையாளலாம்; இம் முறையைக் கையாளும்பொழுது கீழ்க்கண்ட விதிகள் அனுசரிக்கப்படல் வேண்டும். (1) வகுப்புக்களுக்குத் தகுந்தாற் போலும், மாணவர்களின் தேர்ச்சித் திறனுக்குத் தகுந்தாற் போலும் நாடகத்தின் பொருளும் நடையும் இருக்கவேண்டும். (2) நாடகம் என்றால் பெரிய நாடகமாக இருக்கக் கூடாது. சிறு நாடகங்களாக வகுப்பில் ஒரு காலத்திற்குள் (Period) நடித்துக் காண்பிக்கும்படியாக இருக்க வேண்டும். வேண்டுமானால் மாணவர்கள் இலக்கியக் கழகத் தொடக்க விழா, இறுதி விழா முதலிய காலங்களில் பெரிய நாடகங்களை நடிக்க

லாம். (3) கீழ் வகுப்புக்களுக்குச் சிறு நாடகங்களை ஆசிரியர்களே எழுதிக் கொடுக்க வேண்டும். (4) மேல் வகுப்புக்களுக்கு மாணவர்களையே விட்டு எழுதச் சொல்லலாம். (5) அங்ஙனம் மாணவர்கள் சிறு நாடகங்களை எழுதும்பொழுது ஊடே அடிக்கடி ஆசிரியர் சென்று பிழை காணக்கூடாது. அப்பொழுது மாணவர்களுக்கு ஊக்கம் குன்றிப்போகும். முதலிலேயே மாணவர்களுக்கு ஆசிரியர் வழிகாட்டியாக இருந்துவிட்டுக் கடைசியில் ஒத்திகை வைக்கும்பொழுது ஆசிரியர், வேண்டிய பிழைகளை மட்டும் திருத்திக் கொடுக்க வேண்டும். (6) மாணவர்கள் ஒரு நாடகத்தை நடிப்பதில் ஆர்வம் காட்டுவதற்கு முன்னால், அதற்குரிய உடைகள், வேடப் பொருள்கள், திரை முதலியன தேடுவதில் அதிக ஊக்கம் காண்பிப்பார்கள். இவற்றில் மாணவர்களை அதிகமாக ஊக்குவிக்க வேண்டும். (7) மேலும் மாணவர்களுக்குரிய நாடகங்கள் அர்த்தமற்ற பேச்சுக்களாக இருக்கக் கூடாது. அவர்களுக்கு விளங்காத,கடினமான பதங்கள் இருக்கக் கூடாது; பொருள்கள் மிக நுணுக்கமானவையாக(Abstract) இருக்கக் கூடாது. மாணவர்களின் அனுபவங்களுக்கு அடங்கிய உவமைகளைக் கொண்டிருத்தல் வேண்டும். (8) மாணவர்களின் நாடகங்களைப் பார்க்கின்றவர்கள் பெரும்பாலும் அதை எழுதியவர்கள், நடிப்பவர்களின் வயதோடு சரிசமமானவர்களாக இருக்க வேண்டும். இன்றேல் பெரியவர்களாக இருந்தால், சிறு மாணவர்களின் நடிப்பைக் கண்டு எள்ளி நகைக்கலாம். அப்பொழுது மாணவர்கள் நடிப்பு முறையில் பாடங் கற்பதில் ஊக்கம் குறைந்துவிடும். (9) விழாக் காலங்களில் நடத்தப்படும் நாடகங்களுக்குப் பெரிய நாடகங்களைத் தயார் செய்து, பெரிய மாணவர்களைக் கொண்டு அவர்களுக்கு நல்ல பயிற்சி கொடுத்து அவற்றை வயதானவர்களுக்கு முன்னால் நடிக்கச் செய்யலாம். இதற்கு நீண்ட நாள் பயிற்சி கொடுக்கப்படுவதாலும் முன்கூட்டியே பல முறை ஒத்திகைகள் ஒத்த வயதுடைய மாணவர்களின் முன்னிலையிலேயே வைக்கப்படுவதாலும், பின்னால் பெரியோர்களின் முன்னிலையில் நடிக்கப்படும்பொழுதும் அவர்களுடைய ஊக்கம் ஒரு சிறிதும் குறையாது. (10) சிறு நாடகங்களை வகுப்புக்களில் நடத்தும் பொழுது திரைகளும், வேடங்களும் தேவையில்லை. (11) உணர்ச்சி ததும்பக் கூடிய பாட்டுக்கள் ஒன்று இரண்டை நாடகத்தின் இடையே உரிய இடங்களில் சேர்த்துக் கொள்ளலாம். ஆனால் இம்முறை மூலம் 1, 2, 3, 4-வகுப்புக்

களுக்குக் கதையும், பாட்டும் சொல்லிக் கொடுக்கும்பொழுது மாணவர்களையே அக் கதைகளை நாடகங்களாக நடிக்கும்படிச் செய்யலாம். உதாரணமாக, 'ஓநாயும் ஆட்டுக் குட்டியும்', 'சிங்கமும் முயலும்', 'காகமும் நரியும்' என்பன போன்ற கதைப் பாட்டுக்களை மாணவர்களையே நடிக்கும்படிச் செய்யலாம். 'கட்டபொம்மன் கதை', 'தேசிங்கு இராஜன் கதை' முதலியன நடிப்புக்கு உகந்த பகுதிகள். 5, 6, 7, 8-ஆம் வகுப்புக்களில் 'கண்ணகி வழக்குரை காதை' என்பன போன்றவற்றை மாணவர்களை நடிக்கும்படிச் செய்யலாம். கதைப் பாட்டுக்கள் நடிக்கப்படும் பொழுது இரண்டு முறைகளைக் கையாளலாம். அவையாவன: செய்யுள் மூலமாகவே நடித்தல், அல்லது செய்யுளின் கருத்தை வசனமுறையில் எழுதி நடித்தல். இவ்விரண்டு முறைகளிலும் நாடகத்தின் விறுவிறுப்பைத் தேக்குகின்ற முறையில் பாட்டுக்கள் அமைதல் கூடாது. (12) இதனால் பாடத் தெரிந்தவர்களைத்தான் நாடகத்தில் அங்கத்தினர்களாகச் சேர்க்கவேண்டும் என்ற கண்டிப்பு உண்டாக்கக் கூடாது. அங்ஙனம் செய்தால் பாடத் தெரியாத அநேக மாணவர்களுக்கு ஊக்கம் குன்றிப் போகும். அநேக மாணவர்களுக்கு இசையுடன் பாடும் திறமை இருக்காது; ஆனால் நடிப்புத் திறமை நன்றாக இருக்கும். அப்படிப்பட்ட மாணவர்களும் நாடகத்தில் உரிய பங்கு கொள்ளவேண்டும். ஆகையால், பள்ளிக்கூடங்களில் நடத்தப்படும் நாடகங்களில் இசை தெரிந்தவர்கள் சேர்க்கப்பட வேண்டும் என்ற கண்டிப்பு இருக்கக் கூடாது.

அந்த அந்தப் பாடங்களுக்குத் தகுந்தாற்போல் மொழிச் சுவை கெடாமல் நடிக்கவேண்டும். மேல் வகுப்புக்களில் மாணவர்களையே சிறு நாடகங்கள் எழுதும்படிச் செய்யலாம்.

நடிப்பு முறையில் எல்லாப் பாடங்களையும் சொல்லிக் கொடுப்பது கடினம். கதைகள், கதைப் பாட்டுக்கள், தேர்தல் சம்பவத்தைப் பற்றிய கட்டுரைகள், சில காவியப் பகுதிகள் இம் முறைக்குப் பொருந்தும். நுணுக்கமான பொருள்களைப் பற்றிக் கூறும் கட்டுரைகள், குறள், நாலடியார் செய்யுட்கள் இம் முறைக்குப் பொருந்தா. அவற்றை ஆசிரியர்கள் தாங்களே தாம் விரித்துச் சொல்லிக் கொடுத்தல் வேண்டும்.

# செயல்திட்ட முறை (Project Method)

**புதிய பாடத் திட்ட முறைகளின் நன்மைகள்**

பழங்காலத்தில் பாடங்கள் சொல்லிக் கொடுக்கப்பட்ட முறைகளில் நெட்டுருப் போடும் முறைதான் கையாளப்பட்டு வந்தது. மாணவர்களுக்கு ஒரு பாடத்தில் விருப்பம் இருந்ததோ இல்லேயோ, அப்பாடம் ஆசிரியர்களால் மாணவர்கள் மேல் திணிக்கப்பட்டது; மாணவர்கள் அதைத் துன்பப்பட்டு விழுங்க வேண்டும். இம்மாதிரியான முறையில் மாணவர்களின் சிந்தனைக் கும் ஆராய்ச்சிக்கும் இடமே இல்லே. புதிய முறைகள் மாணவர் களின் சிந்தனையைக் கிளறி ஆராய்ச்சித் திறனை அதிகப்படுத்த முயலுகின்றன.

மேலும் பழைய முறைகள், மாணவர்களுக்குப் பாடங்கள் முக்கியமாக அறிவு விருத்தி செய்வதற்காகவே சொல்லிக் கொடுக்கப்பட்டன. "ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவுமா?" என்ற பழமொழிப்படி பழைய முறைப்படி கல்வி பயின்ற மாணவர்கள் உலக விவகாரங்களுக்கு முற்றிலும் தகுதியில்லாத வர்களாக இருந்தார்கள் என்று சொல்லுவது மிகையாகாது. உதாரணமாக, ஒரு மாணவன் வளேகுடாவைப் பற்றி வகுப்பில் நன்ருகப் பயின்று இருப்பான்; அவனுடைய வாழ்க்கையில் பார்த்தே இருக்கமாட்டான். கொலம்பஸ் அமெரிக்கா கண்டு பிடித்ததைப் பற்றிப் பிரமாதமாகப் படித்திருப்பான்; ஆனல் அதே மாணவனுக்கு உள்ளூரில் இருக்கும் கணித ஆசிரியரின் வீட்டைக் கண்டுபிடிக்கத் தெரியாது. ஆகவேதான் புதிய முறைகள் மாணவர்களே வாழ்க்கைக்குத் தகுதியுள்ளவர்களாக ஆக்கவேண்டும் என்று வற்புறுத்துகின்றன. ஒரு மாணவனுக்கு அவன் கற்ற கல்வி, வாழ்க்கையில் உதவி செய்யவேண்டும்.

மூன்ருவதாக, புதிய முறை, மாணவர்கள் தாங்கள் கற்க வேண்டியனவற்றைத் தாங்களே தகுந்த சூழ்நிலேயில் கற்க வேண்டும் என வற்புறுத்துகின்றது. ஆப்பிள் பழத்தைப் பற்றியோ, மாம்பழத்தைப் பற்றியோ புத்தகத்தின் மூலம் வகுப்பில் சொல்லிக் கொடுப்பதில் பலன் இல்லே. மாணவர் களேத் தோட்டத்திற்கே அழைத்துச் சென்று அப்பழங்களே நேரில் பார்த்துச் சாப்பிடும்படிச் செய்தால் அவற்றைப்பற்றி ஒரு மாணவன் மிக நன்ருகத் தெரிந்துகொள்வான். சில சமயங்களில் வகுப்புக்களில் சொல்லிக்கொடுக்கும் பாடங்களுக்கும் வெளி

## மாணவரிடம் உள்ள ஒப்பந்த அட்டை

மாணவன் பெயர்.............................................................

| வரிசை நெ. | மாணவன் வாங்கிய தேதி | மாணவன் ஆசிரியரிடம் திருப்பிக் கொடுத்த தேதி | குறிகள் | ஆசிரியர் கையெழுத்தும் தேதியும் |
|---|---|---|---|---|
| | | | | |

## ஆசிரியரிடம் உள்ள ஒப்பந்த அட்டை

| மாணவன் பெயர் | ஒப்பந்தத்தின் வரிசை எண் | மாணவனிடம் கொடுத்த தேதி | மாணவன் திருப்பிக் கொடுத்த தேதி | குறிகள் | ஆசிரியர் கையெழுத்து |
| --- | --- | --- | --- | --- | --- |
| | | | | | |

உலகத்திற்கும் சம்பந்தமே இருக்காது. உதாரணமாக, கணித ஆசிரியர், "ஒரு சுவரைக் கட்டி முடிக்க எத்தனை ஆட்கள் தேவை?" என்று கொடுக்கும் கணக்கு ஒன்றுக்கு விடை கொடுக்கும்பொழுது மனிதன் பின்னமாகவும் வரலாம்; மேலும், "ஓர் ஆடு ரூ. 150 வீதம் 200 ஆடுகள் விற்ருல் எவ்வளவு தொகை கொடுக்கவேண்டும்?" என்று கேட்கும்பொழுது, வெளி உலகில் ஓர் ஆடு ஐம்பது ரூபாய்க்கு மேல் விலை பெருமல் இருக்கும்; இருநூறு ஆடுகளுக்கும் ஒரே விலை இருக்க முடியாது; ஆட்டுக்கு ஆடு விலையில் வித்தியாசம் இருக்கலாம். இதையெல்லாம் கண்ட மாணவர்கள் நகைப்பார்கள்.

மேலும் பழைய முறையில் முதலில் முடிவைச் சொல்லிவிட்டு அதன் பின்புதான் அதற்குரிய உதாரணங்கள் சொல்லிக் கொடுக்கப்பட்டன. உதாரணமாக, தமிழ் இலக்கணத்தில் எழுத்துக்களைப் பற்றிச் சொல்லிக் கொடுக்கும்பொழுது அதற்குரிய சூத்திரத்தை முதலில் சொல்லிக் கொடுத்துவிட்டு அதற்குப் பின்னர் அதற்கு உதாரணங்கள் சொல்லிக் கொடுக்கப்பட்டன. இம்முறையால் மாணவர்களுக்குத் தாங்களே முடிவுகளைக் கண்டு பிடித்துக்கொள்ளும் வாய்ப்பு இல்லை. உதாரணமாக, அநேக மெய் எழுத்துக்களைக் கரும்பலகையில் எழுதிப்போட்டு அவற்றைப் பார்க்கும்படி மாணவர்களுக்குச் சொல்லிப் பின்னர் அவர்களைக்கொண்டே மெய் எழுத்து என்ருல் இப்படி இருக்கும் என்று அவர்களிடமிருந்து வரவழைத்தால், மெய் எழுத்தைப் பற்றிய அறிவு மாணவர்களை விட்டு என்றும் அகலாது. ஏனென்ருல் மாணவர்கள் தாங்களே சிந்தித்துத் தங்கள் முயற்சிகளால் முடிவுகளைத் தெரிந்து கொள்ளுகின்ருர்கள். இங்ஙனம் சுய முயற்சியால் பயின்று தெரிந்து கொள்ளும் எந்த முடிவும் மாணவர்களின் மனத்தை விட்டு என்றும் அகலாது என்பது திண்ணம்.

### செயல் திட்டம் என்பது யாது?

மேற்கண்ட குறைகள் அனைத்தும் நீங்குவதற்காகவே செயல் திட்ட முறை (Project Method) கண்டுபிடிக்கப்பட்டது. இயற்கையான சூழ்நிலையில் முடிக்கப்படும் ஒரு சிக்கலான காரியத்திற்குத்தான் செயல் திட்டம் எனப் பெயர். (A project is a problamatic act carried to completion in its natural setting). இதில் மூன்று முக்கியமான அம்சங்கள் கவனிக்கப்படவேண்டும். முதலில் அச்செயல் திட்டம் ஒரு காரியமாகவும், இரண்டாவ

தாக அது சிக்கலானதாகவும், மூன்றாவது அது இயற்கைச் சூழ்நிலையில் முடிக்கக் கூடியதாகவும் இருக்கவேண்டும். இவ்வித அம்சங்கள் பொருந்திய செயல் திட்ட முறையில் மாணவர்கள் ஈடுபட்டிருக்கும் காலத்தில் அவர்கள் கற்க வேண்டியனவற்றை நெட்டுருப் போடவேண்டியதில்லை; ஆனால் அவற்றைத் தாங்களே தங்கள் முயற்சியின் மூலம் கற்றுக்கொள்ளுகின்றார்கள்.

ஒரு செயல் திட்டமானது (Project) மாணவர்களாலேயே அவர்களின் அவசியமான காரியங்களில் ஒன்றாக அவர்களாலேயே தேர்ந்து எடுக்கப்பட வேண்டும். அச்செயல் திட்டமானது வகுப்பு' மாணவர்கள் அனைவரும் சேர்ந்து தேர்ந்து எடுக்கக் கூடிய ஒன்றாக இருந்தாலும் இருக்கலாம்; அல்லது ஒரு வகுப்பை இரு பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொன்றாக இரு பிரிவு மாணவர்களுக்கும் இரண்டு செயல் திட்டங்களாகவும் இருக்கலாம். இரண்டிற்கு மேல் இருப்பது அவ்வளவு பொருத்தமல்ல. வகுப்பு மாணவர்கள் அனைவரும் ஒன்றாகக்கூடி இச் செயல் திட்டத்தைத் தேர்ந்தெடுப்பது பெரும்பாலும் நல்லது. ஆசிரியர் வழிகாட்டியாக இருக்கவேண்டுமே தவிர, தாம் நினைத்த எதையும் மாணவர்களிடம் திணிப்பவராக இருத்தல் கூடாது. அச்செயல்கள் ஒரு வாசகசாலை கட்டுவதாகவோ, அல்லது ஒரு கோழிப்பண்ணை ஆரம்பிப்பதாகவோ, பள்ளிக்கூடத்திற்கு வேண்டிய ஓர் அஞ்சல் நிலையம் (Post office) கட்டுவதாகவோ, மாணவர் கூட்டுறவுப் பண்டகசாலை திறப்பதாகவோ இருக்கலாம்.

இங்ஙனம் தேர்ந்து எடுக்கப்பட்ட திட்டம் ஓராண்டிற்கு நீடிக்கக்கூடியதாகவும், ஒரு மாதத்திற்கு நீடிக்கக்கூடியதாகவும், அல்லது ஒரு வாரத்திற்கு நீடிக்கக் கூடியதாகவும் இருக்கலாம். மேலும் பூகோளம், கணிதம், சரித்திரம், மொழிப் பயிற்சி, விஞ்ஞானம் ஆகிய எல்லாப் பாடங்களின் அறிவையும் ஒருங்கே மாணவர்களுக்குப் போதிக்கக்கூடிய செயல் திட்டங்களாகவும் இருக்கலாம்; அல்லது மேற்கண்ட பாடங்களில் ஒன்று அல்லது இரண்டின் அறிவை மட்டும் கற்பிக்கக்கூடிய செயல் திட்டங்களாகவும் இருக்கலாம். ஒரு செயல் திட்டம் சுமார் ஒரு மாத காலத்திற்காவது நீடிக்கக்கூடிய பாடத் திட்டமாகவும், மேற்கண்ட எல்லாப் பாடங்களின் அறிவையும் புகுத்தக் கூடியதாகவும் இருத்தல் நலம்.

ஆனால் இக்கருத்துக்களை மனத்தில் வைத்துக்கொண்டு ஆசிரியர்கள் மாணவர்களிடையே தமது திட்டங்களை ஒரு

பொழுதும் புகுத்தக்கூடாது. அங்ஙனம் செய்தால் செயல் திட்ட முறையின் (Project method) மூலம் மாணவர்கள் தாங்க ளாகவே கற்றுக்கொள்ளுவதன் முக்கிய அடிப்படை அம்சங் களே இல்லாமல் ஆகிவிடும். ஆகவே எல்லாப் பாடங்களின் அறிவையும் ஒருங்கே கற்பிக்கக்கூடிய செயல் திட்டங்களாக இல்லாமல் ஒன்று அல்லது இரண்டு பாடங்களின் அறிவை மட்டும் மாணவர்களுக்குக் கற்பிக்கும் செயல் திட்டங்களாக இருந்தாலும் பரவாயில்லை. இச்செயல் திட்டங்கள் மூலம் விடு பட்ட இதர பாடங்களை ஆசிரியர்கள் வழக்கமான முறையில் சொல்லிக் கொடுத்துவிடலாம். இச்செயல் திட்டங்களின் மூலம் பாடம் கற்பிக்கப்படும்போது முக்கியமாகக் கவனிக்கப்படவேண் டியன இரண்டு. அவையாவன, மாணவர்களின் பிரியம் ஒன்று; இரண்டாவது, அவர்களின் நோக்கம். இவை இரண்டும் ஒரு செயல் திட்டத்தில் காணப்படாவிட்டால் அத் திட்டத்தால் ஒருவிதப் பயனும் கிடைக்காது.

இத் திட்டப்படி சரித்திரம், பூகோளம், கணிதம், விஞ் ஞானம், தாய்மொழி அனைத்தையும் சொல்லிக் கொடுக்கலாம். இவற்றுள் தாய்மொழியை இத்திட்டப்படி எங்ஙனம் சொல்லிக் கொடுக்கலாம் என்பதைப் பார்ப்போம்.

மாணவர்கள் முதலில் எச்செயல் திட்டத்தைத் தேர்ந் தெடுக்கவேண்டும் என்று ஒவ்வொருவரும் அவரவர்களுடைய அபிப்பிராயங்களை எடுத்துச் சொல்லுவார்கள். அப்பொழுது அவர்கள் தமிழில்தான், எடுத்துச் சொல்லவேண்டும். இச் சமயம் அவர்களைத் தெளிவாகவும், பிழையின்றியும், வார்த்தைகளை மெல் லாமலும், கடைசி வார்த்தைகளை விழுங்காமலும் பேசப் பழக்க லாம். உதாரணமாக, தங்களுக்கென "மாணவர்கள் கூட்டுறவுப் பண்டகசாலை" ஏற்படுத்தும் செயல் திட்டத்தை (Project) ஆரம்பிக்கின்றார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். கூட் டுறவுப் பண்டகசாலைகளின் நோக்கம், அதன் அவசியம், பிற நாடுகளில் அதன் வளர்ச்சி ஆகியவற்றைப் பற்றி ஒவ்வொரு மாணவனையும் தனக்குத் தெரிந்த வரையில் பேசச் சொல்ல லாம். மாணவர்கள் பேசும்பொழுது அவர்கள் செய்யும் பிழைகளைத் திருத்தலாம். இதனால் மாணவர்களுக்குத் தாய் மொழியில் பேச நல்ல வாய்மொழிப் பயிற்சி ஏற்படுகின்றது.

மேலும் கூட்டுறவுப் பண்டகசாலையைப் பற்றி மாணவர்கள் அறிய விரும்புவார்கள். அப்பொழுது அவர்கள் புத்தக நிலை

யத்திற்குச் சென்று அதைப் பற்றிச் சொல்லும் புத்தகங்களைக் கண்டுபிடித்து, எடுத்துப் படிப்பார்கள். எடுக்கப்பட்ட புத்தகங்களை வகுப்பிற்குக் கொண்டு வந்து அவர்களை மௌன வாசிப்பு மூலமும் உரத்த வாசிப்பு மூலமும் அவற்றைப் படிக்கச் சொல்லலாம். இப்பொழுது மாணவர்களுக்கு வாசிப்பில் பயிற்சி ஏற்படுகின்றது.

அடுத்தபடியாக, மாணவர்கள் கூட்டுறவுப் பண்டகசாலை ஆரம்பிக்கும் செயலில் இறங்குவார்கள். அவர்கள் வேலையைத் தொடங்குவதிலிருந்து ஒவ்வொருவரும் என்ன செயல்கள் செய்தார்கள் என்பதை எழுதி வைக்கும்படிச் செய்யவேண்டும். குறிப்பாக எழுதி வைத்தவை அனைத்தையும் பின்பு பெரிய குறிப்புப் புத்தகத்தில் கோவையாகக் கட்டுரை வடிவத்தில் மாணவர்கள் எழுதுவார்கள். அப்பொழுது அவர்கள் எழுதியவற்றை ஆசிரியர்கள் திருத்தவேண்டும். இக் கட்டுரைகளை எழுதும்பொழுதும், ஆசிரியர்கள் திருத்திய பிழைகளை மாணவர்கள் மறுபடியும் திருத்தும் பொழுதும் அவர்களுக்கு எழுத்துப் பயிற்சி நன்கு ஏற்படுகின்றது. மேலும் கூட்டுறவுப் பண்டகசாலை ஆரம்பிக்க, மாவட்டக் கூட்டுறவுப் பதிவாளருக்கு (Registrar) விண்ணப்பம் செய்துகொள்ள வேண்டும். பண்டகசாலைக்கு வேண்டிய அறை, மேசை, நாற்காலி முதலிய சாமான்களைக் கொடுத்து உதவும்படி, தலைமை ஆசிரியருக்கு மாணவர்கள் விண்ணப்பம் எழுதும்படிச் செய்யலாம். இப்பொழுது மாணவர்கள் பலருக்கும் எம் முறையில் கடிதங்கள் எழுதவேண்டும் என்ற பயிற்சி ஏற்படுகின்றது. உள்ளூர்த் தபால் நிலையத்தில், பண்டகசாலைக்காகக் கணக்குத் திறக்க (Savings account) மனுச் செய்துகொள்ளும் பொழுதும், புத்தகங்கள் வரவழைப்பதற்காகக் கடைக்காரர்களுக்குக் கடிதங்கள் எழுதும்பொழுதும் மாணவர்களின் கடிதம் எழுதும் பயிற்சி மேலும் அதிகமாகின்றது.

### இத்திட்டத்தின் நிறைகள்

இவ்விதச் செயல் திட்ட முறையில் மாணவர்கள் இறங்கும் பொழுது அவர்களது ஆர்வம் தூண்டப்படுகின்றது. ஆகையால் ஆசிரியர்களின் கண்டிப்பு இல்லாமலே மாணவர்கள் தாங்களே உற்சாகத்துடனும், ஊக்கத்துடனும் செயல்களைச் செய்கின்றனர்கள். ஆசிரியர்கள் தங்கள் திறமையால் இவ்வூக்கத்தை மேலும் மேலும் வளர்ப்பதற்குரிய முயற்சிகளைச் செய்துகொண்டே போக

வேண்டும். அங்ஙனம இன்றி மாணவர்களுக்கு அவர்கள் முட்டுக்கட்டையாக இருத்தல் கூடாது. இத் திட்டத்தில் தாங்களே வேலை செய்து, பின்பு கற்க வேண்டியனவற்றைத் தாங்களே கற்றுக் கொள்ளுகின்றார்கள். ஆகையால் இங்ஙனம் கற்றுக் கொண்டது அவர்கள்பால் நீடித்து நிற்கும். மாணவர்களின் மன இயல்புக்குத் தகுந்தாற் போல் செயல்கள் அமைவதால் அவர்களிடம் அதிகமான ஊக்கம் காணப்படுகின்றது. அவர்களுடைய படிப்பிற்கும் நடத்தைக்கும் பெரிதும் பொருத்தம் இருக்கின்றது. மாணவர்களின் சிந்தனை சக்தியும், ஆராய்ச்சி அறிவும் அதிகப்படுகின்றன. இம் மாதிரியாகக் கற்கப்பட்ட மொழி அறிவு கண்டிப்பாக நீடித்து நிற்கும்.

## செயல் திட்டம்: உதாரணம்-மாணவர் கூட்டுறவுப் பண்டகசாலை

### வாசிப்பு

புத்தக நிலையத்திலிருந்து புத்தகங்களை எடுத்து அவற்றில் கூட்டுறவுப் பண்டகசாலையைப் பற்றிச் சொல்லி இருப்பதைப் படித்துப் பார்த்தல்; மாவட்டப் பதிவாளர், புத்தகக் கடைக்காரர்கள் ஆகியவர்கள் எழுதிய கடிதங்களைப் படித்தல்; வெளிநாட்டில் மாணவர் கூட்டுறவுப் பண்டகசாலைகள் எங்ஙனம் வேலை செய்கின்றன என்று சொல்லும் புத்தகங்களைப் படித்தல்.

### எழுத்துப் பயிற்சி

தாங்கள் படித்த புத்தகங்களினின்றும் குறிப்பு எடுத்து எழுதுதல், மாவட்டப் பதிவாளர், தலைமை ஆசிரியர் முதலியவர்களுக்கு விண்ணப்பம் எழுதுதல்; புத்தகக் கடைக்காரர்களுக்கு வேண்டிய பொருள்களுக்காகக் கடிதம் எழுதுதல்; தங்கள் கூட்டுறவுப் பண்டகசாலை ஆரம்பத்திலிருந்து எல்லாவித வசதிகளுடன் வேலை செய்ய ஆரம்பிக்கும்வரை நடந்த அனைத்தையும் கட்டுரை முறையில் எழுதுதல்; பண்டகசாலையின் நிர்வாகக் குழுக் கூட்டம் கூட்டி நிகழ்ச்சிகளைப் பிழையின்றி எழுதுதல் முதலியவை.

வாய்மொழிப் பயிற்சி

ஆரம்பத்தில் கூட்டுறவுப் பண்டகசாலையின் அவசியம், பிற நாட்டில் அவை நடத்தப்படும் முறை, தனியார் நடத்தும் வியா பார முறையில் இருக்கும் குறைகள் ஆகியவற்றைப் பற்றிப் பேசுதல்; நிர்வாகக் குழுக் கூட்டங்களில் பண்டகசாலையைப் பற்றிய இலாப நட்டங்களைப் பற்றியும் இதர நடைமுறைகளைப் பற்றியும் விவாதித்தல்; பண்டகசாலை வளருவதற்குரிய வழி வகைகளை எடுத்துச் சொல்லுதல்; ஒரு மாணவனை "நான் பண்டகசாலையின் செயலாளராக வந்தால் என்ன செய்வேன்?" என்பதைப் பற்றிப் பேசச் செய்தல்.

கைத்தொழில்

ஏற்கனவே ஓர் அறை இல்லாவிட்டால் கூட்டுறவுப் பண்டக சாலைக்கென ஒரு தனி அறை கட்டுதல்; இங்ஙனம் கட்டும் பொழுது மாணவர்களுக்குக் கட்டிடத் தொழிலிலும், அதன் உதவித் தொழில்களிலும் நல்ல பயிற்சி ஏற்படுகின்றது. பின்பு, பண்டகசாலையைத் தினசரி சுத்தமாக வைத்துக் கொள்ளுதல், புத்தக மூட்டைகளைத் தூக்கிக் கொண்டு வருதல், விற்காத புத்தகங்களை மீண்டும் விற்பனையாளர்களுக்குத் திருப்பி அனுப் புதல், புத்தகங்களை விற்றல் ஆகிய தொழில்களில் மாணவர் களுக்குப் பயிற்சி ஏற்படுகின்றது.

ஓவியம்

மாணவர் கூட்டுறவுப் பண்டகசாலையின் படத்தை வரையும் படிச் செய்தல்; புத்தகங்கள், குறிப்புப் புத்தகங்களைப் போன்று படம் வரையச் செய்தல்; மூட்டைகளைத் தூக்கி வருவதைப் பார்த்தும், புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருப்பதைப் போன்றும் படம் வரையச் செய்தல்.

கணிதம்

அறை கட்ட ஏற்படும் செலவை நிச்சயித்தல்; புத்தகங்கள் வாங்கி விற்கும் கணக்குகளைத் தினசரி எழுதி வைத்தல்; ஆண்டு முடிவில் இலாப நட்டத்தை நிச்சயித்தல்; பங்குதாரர்களுக்கு இலாபத்தில் ஒரு பங்கைப் பிரித்துக் கொடுத்தல்; பண்டக சாலையில் ஆண்டு முழுவதும் ஒவ்வொரு மாணவரும் வாங்கிய மொத்தத் தொகைக்குப் பேரேடு தயாரித்தல், அவர்கள் வாங் கிய தொகைக்குத் தக்க இலாபத்தைப் பிரித்துக் கொடுத்தல்;

புத்தகக் கடைக்காரர் ஒவ்வொருவருக்கும் எவ்வளவு கடன் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று கணக்கு எடுத்தல் ஆகிய நடைமுறைக் கணக்குகளில் மாணவர்கள் பயிற்சி பெறுதல்.

பூகோளம்

அமெரிக்கா, பிரிட்டன், சப்பான் போன்ற வெளிநாடுகளிலுள்ள கூட்டுறவுப் பண்டகசாலைகளைப் பற்றிப் படிக்கும்பொழுது அந்நாடுகளின் படங்களைப் பார்த்தல்; அங்குள்ள பண்டக சாலைகளைப் பற்றி மேலும் தெரிந்துகொள்ள வேண்டி, அங்கு உள்ளவர்களுக்குக் கடிதங்கள் எழுதும்பொழுது அக்கடிதங்கள் கப்பல் மூலமாகவும், ஆகாய மார்க்கமாகவும் செல்லும்பொழுது அம்மார்க்கங்களை எல்லாம் பூகோளப் படங்களில் பார்த்துத் தெரிந்து கொள்ளுதல் ஆகியவற்றை மாணவர்கள் அறிந்து கொள்ளுதல்.

சரித்திரம்

பல நாடுகளிலுமுள்ள கூட்டுறவுப் பண்டக சாலைகளின் தோற்றம், வளர்ச்சி ஆகியவற்றைப் பற்றிப் படித்து அறிந்து கொள்ளுதல்.

நீதிகள்

கூட்டுறவு மனப்பான்மையை வளர்த்தல் — சமூக மனப் பான்மையின் தேவை—பல நாடுகளுக்கு இடையே ஒற்றுமையை வளர்த்தல்—கடிதங்களுக்குச் சரியான தபால் பில்லைகள் ஒட்டுவதில் உள்ள நீதி—அதிக இலாபம் இல்லாமல் பொருள் களை விற்றலில் உள்ள சமூகக் கோட்பாடு ஆகிய நீதிகளை மாண வர்கள் கற்றுக்கொள்ளுதல்.

நான்காம் அத்தியாயம்

# தனி முறையில் கற்றல் (Individual work)

செயல் திட்ட முறைமூலம் கல்வி கற்கும்பொழுது மாண வர்கள் கூட்டுறவு முறையில் அறிவைப் பெறுகின்றார்கள். ஆனால் தனி முறை மூலம் மாணவர்கள் கற்கவேண்டியனவற்றைத் தனித் தனியாகக் கற்றுக்கொள்ளுகின்றார்கள். உலகத்தில் காணப்படும் எந்த இருவரும் தம்முடைய அறிவிலோ, ஆவல்களிலோ ஒரே தன்மையினராகக் காணப்படுவதில்லை. சில வித்தியாசங்கள் இருக்கத்தான் இருக்கின்றன. ஒரே குடும்பத்தில் பிறந்து ஒரே சூழ்நிலையில் வளரும் குழந்தைகள்கூட இயற்கை அறிவிலும், ஆவல்களிலும் பெரும்பாலும் வித்தியாசப்பட்டே காணப்படுகின்றன. இவ்வித்தியாசங்கள் பள்ளியில் பயிலும் மாணவர்களுக்கும் பொருந்தும். ஆசிரியர்கள் பெரும் பாலும் ஒரே பாடத்தை, ஒரு வகுப்பிலுள்ள மாணவர்கள் அனைவருக்கும் பொதுவாக ஒரே முறை மூலந்தான் தற்பொழுது சொல்லிக் கொடுக்கின்றார்கள். சில மாணவர்கள் வெகு விரை விலும், சில மாணவர்கள் மந்தமாகவும் ஒரு பாடத்தைக் கற்றுக்கொள்ளுகின்றார்கள். சில மாணவர்கள் இசையில் அதிக ஆர்வம் காட்டுகின்றார்கள்; இன்னும் சிலர் விளை யாட்டுக்களில் அதிக ஆர்வம் காட்டுகின்றார்கள்; வேறு சிலர் நடிப்பில் வித்தியாசம் காட்டுகின்றார்கள். இங்ஙனம் பல திறப் பட்ட மாணவர்கள் அடங்கிய ஒரு வகுப்பிற்கு ஆசிரியர் ஒரே மாதிரியாகப் பாடத்தைச் சொல்லிக் கொடுக்கும்பொழுது எல்லா மாணவர்களும் உண்மையான பயனைப் பெறுவதில்லை. மந்தகரமான மாணவர்கள் ஆசிரியரால் கவனிக்கப்படாமல் போய்விடுகின்றார்கள்; அதிகச் சுறுசுறுப்பான மாணவர்கள் இன்னும் அதிகமாகக் கற்றுக்கொள்ள இடம் இல்லாமல் தவிக் கின்றார்கள். நடுத்தரமான மாணவர்கள் இப்படியும் அப்படியும் இல்லாமல் திரிசங்கு சுவர்க்கமாகத் திண்டாடுகின்றார்கள். வகுப்பில் எல்லோருக்கும் ஒன்றாகச் சொல்லிக்கொடுக்கும் முறையைக் கையாளும்பொழுது, பள்ளிக்கு ஒரு வாரம் வராத மாணவன் விடுபட்ட பாடங்களைக் கற்றுக்கொள்ள முடியாமல் தவிக்கின்றான். மேலும் பலதிறப்பட்ட மாணவர்கள் அடங்கிய

சுமார் 40 பேர் கொண்ட ஒரு வகுப்பிற்கு ஒரே மாதிரியாகச் சொல்லிக்கொடுப்பதால் சில சமயம் மாணவர்களிடம் ஒழுங்கும் கட்டுப்பாடும் அமைதியும் இல்லாமற் போகின்றன. ஏனென்றால் எல்லோரும் ஆசிரியர் சொல்லிக்கொடுப்பதில் ஒரேமாதிரியான கவனம் வைப்பதில்லை. இதனால் அவர்களுடைய முன்னேற்றமும் ஓரளவு தடைப்படுகின்றது. ஆகவே கல்வியில் உண்மையான முன்னேற்றம் காண வேண்டுமானால் மாணவர்கள் தனி முறையில் கற்பதற்கு வேண்டிய சந்தர்ப்பமும் பயிற்சியும் அளிக்க வேண்டும்.

## ஒப்பந்தங்கள் (Assignments)

தமிழ்ப் பாடம் சொல்லிக்கொடுக்கும் ஆசிரியர்கள் ஓர் ஆண்டிற்குச் சொல்லிக் கொடுக்கவேண்டிய பாடங்களை மாத வாரியாகப் பிரித்து, மீண்டும் ஒவ்வொரு மாதத்திற்கு உரிய பாடங்களை ஒவ்வொரு வாரத்திற்கும் உரிய பாடப்பகுதிகளாகப் பிரித்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு வகுப்பிற்கும் ஒரு வாரத்தில் ஆறு காலங்கள் (Periods) தமிழுக்காக ஒதுக்கப்படுகின்றன என்று வைத்துக் கொள்ளுவோம். ஒவ்வொரு காலத்திற்கும் 40 நிமிடநேரம் என்று வைத்துக்கொள்ளுவோம். ஆகவே ஆறு காலங்களுக்கும் தமிழுக்காக ஒரு வாரத்தில் 4 மணி நேரம் கொடுக்கப்பட்டுள்ளது. அதோடு வகுப்பை விட்டு வெளியே வீட்டில் ஒரு வாரத்தில் தமிழுக்காகச் சுமார் 2 மணி 20 நிமிட நேரம் ஒதுக்கலாம். ஆக இரண்டும் சேர்ந்து, ஒரு வாரத்தில் 6 மணி நேரமும் 20 நிமிடநேரமும் ஆகின்றது. ஒரு வகுப்பிற்குச் செல்லும் தமிழ் ஆசிரியர் 6 மணி 20 நிமிட நேரத்திற்குப் பொருத்தமான ஒப்பந்தங்களைத் தயாரிக்க வேண்டும். ஆசிரியர்கள் முன்கூட்டியே பல புத்தகங்களையும் நன்கு படித்து ஒப்பந்தங்களைத் தயாரிக்க வேண்டும். ஒப்பந்தங்களை மாணவர்கள் அனைவருக்கும் கொடுக்கவேண்டும். ஆசிரியரிடம் ஒரு நீள அட்டையும், மாணவரிடம் ஓர் அட்டையும் இருக்க வேண்டும். அவற்றில், ஆசிரியர் ஒப்பந்தங்களை மாணவரிடம் கொடுத்த தேதியும், பின்னர் மாணவர்கள் ஆசிரியரிடம் திருப்பிக் கொடுத்த தேதியும் அனைத்தும் தவறாமல் அவ்வப்பொழுது எழுதப்பட வேண்டும்.

ஒப்பந்தங்களில் ஆசிரியர் கடினமான பதங்களுக்குப் பொருள் கொடுத்து இருத்தல் வேண்டும். வினாக்கள் பாட சம்பந்தமானவையாக இருக்க வேண்டும். வினாக்கள் பாடத்தில்

காணப்படும் பொருளைப் பற்றியவையாக இருக்கவேண்டும். ஆனால் சில சமயத்தில் வினக்கள் பாடப் புத்தகத்தில் காணப் படும் பொருளைப் பற்றி இல்லாமல், அதை ஒட்டிய வேறு பொருளைப்பற்றியும் இருக்கலாம். அம்மாதிரியான வினக்கள் கொடுக்கும்பொழுது, அவற்றிற்குரிய விடைகளை எந்தப் புத்தகத்தில் கண்டுபிடிக்கலாம் என்னும் குறிப்பையும் ஒப்பந்தத்திலேயே கொடுக்கவேண்டும்.

இம்மாதிரியான ஒப்பந்தங்களை மாணவர்கள் வாங்கிச் சென்றதும் அவரவர்கள் வகுப்புக்களில் உட்கார்ந்து வினக்களுக்கு விடை எழுத ஆரம்பிப்பார்கள். அவர்களுக்கு ஐயங்கள் எழும் பொழுது ஆசிரியர்கள் சென்று அவர்களுக்கு அவற்றைத் தீர்க்கலாம். மாணவர்கள் அடிக்கடி பார்க்கவேண்டிய புத்தகங்களை வகுப்பு அறையிலேயே வகுப்புப் புத்தக நிலையமாக வைக்க வேண்டும். வேண்டிய புத்தகங்களை மாணவர்கள் அங்கே சென்று எடுத்துப் படிக்கவேண்டும். அதற்குப் பொறுப்பான மாணவன் ஒருவனை அதன் பக்கலில் வைத்து, எடுத்த மாணவர்கள் திருப்பித் தருகின்றார்களா எனப் பார்க்க வேண்டும். ஒரே தரமான அறிவுடைய பல மாணவர்கள் வகுப்பிலேயே சேர்ந்து ஓர் ஒப்பந்தத்தைச் செய்து முடிக்கலாம். வகுப்பு நேரத்தில் முடிக்காவிட்டால் வீடுகளுக்கும் எடுத்துச் சென்று அவற்றை முடித்துக் கொண்டு வரலாம். ஆனால் அங்ஙனம் செய்யும் காலத்தில் மாணவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து 'ஈ அடித்தான் காப்பி' அடிக்கும்படி விடக்கூடாது. அங்ஙனம் செய்பவர்களுக்கு அதற்குரிய மதிப்புக் குறிகள் (Marks) கொடுக்கக்கூடாது.

கொடுக்கப்பட்ட ஒப்பந்தங்களை மாணவர்கள் ஆசிரியரிடம் திருப்பிக் கொடுத்தவுடன் அவற்றை ஆசிரியர் நன்றாகத் திருத்த வேண்டும். இவ்வேலையை ஆசிரியர் நன்கு செய்து உரிய மதிப்புக் குறிகள் கொடுக்காவிட்டால் மாணவர்களின் ஊக்கம் குறைந்து விடும். பின்னர் அடுத்தாற்போல் கொடுக்கப்படும் வேலைகளைச் செய்யவே மாட்டார்கள். ஆசிரியர் திருத்திக் கொடுத்த ஒப்பந்தங்களை மாணவர்கள் பெற்று உடனுக்குடன் அவற்றில் காணப் படும் பிழைகளைத் திருத்தவேண்டும். ஒப்பந்தங்களை எழுதுவதற்குக் குறிப்புப் புத்தகங்களின் வலப் பக்கங்களையும், பிழைகளைத் திருத்துவதற்கு இடப் பக்கங்களையும் ஒதுக்கிக்கொள்ளலாம். அங்ஙனம் மாணவர்கள் பிழைகளைத் திருத்திய பின்னர், அடுத்த ஒப்பந்தங்களை அம்மாணவர்களுக்கு ஆசிரியர் தம்

அட்டையில் முன்மாதிரி குறித்துக்கொண்டு கொடுக்க வேண்டும். மாணவர்கள் தங்களிடமுள்ள அட்டையிலும் குறித்துக்கொள்ள வேண்டும்.

ஒரு மாணவன் செய்து முடித்த ஒப்பந்தம் சரியாக இல்லையென்றால் அதை அவனிடமே திருப்பிக்கொடுத்து நன்றாகச் செய்துகொண்டு வரும்படிச் செய்ய வேண்டும். புத்திசாலித்தனமான மாணவர்கள் சீக்கிரமும், மந்ததரமான மாணவர்கள் கால தாமதமாகவும் ஒப்பந்தங்களை முடித்து வருவது இயற்கை. மாணவர்களின் தரத்திற்குத் தகுந்தாற்போல், கொடுக்கும் தேதிகளை மாற்றிக்கொள்ளலாம். விரைவில் முடித்த புத்திசாலி மாணவர்களுக்கு, அடுத்த ஒப்பந்தங்களைக் கொடுத்து விடவேண்டும். இல்லையானால் அவர்கள் வகுப்பில் தொந்தரவு கொடுத்துக்கொண்டு இருப்பார்கள். இங்ஙனமே ஓர் ஆண்டில் மந்தமான மாணவர்களைவிட விரைவில் வகுப்பிற்கு உரிய எல்லா ஒப்பந்தங்களையும் முடித்துவிட்ட பின்னர் அவர்களுக்குச் சில காவியங்களிலிருந்தும், சில இலக்கணப் பகுதிகளிலிருந்தும் அதிகப்படியான வேலைகளை அவ்வாண்டில் கொடுத்து வேலை செய்யும்படிச் செய்யலாம். இதனால் புத்திசாலி மாணவர்கள் மேலும் அதிகப் பயன் பெறுவார்கள். குறித்த காலத்தில் ஒப்பந்தங்களை முடிக்க முடியாத மாணவர்களுக்கு ஆசிரியர்கள் உதவி செய்ய வேண்டும். சில சமயங்களில் ஒரே சமயத்தில் அநேக மாணவர்கள் முடித்த ஒப்பந்தங்களை எடுத்துக்கொண்டு ஆசிரியர்களிடம் ஓடிவந்து திருத்திக் கொடுக்கும்படிச் சொல்லுவார்கள். அச்சமயங்களில் ஆசிரியர்கள் சில மாணவர்களை வீட்டிற்கு வரும்படிச் சொல்லி அவற்றைத் திருத்திக்கொடுக்க வேண்டும்.

### இம்முறை மூலமாகவே பாடங்களை முடிக்க முடியுமா?

“இம்மாதிரி ஒப்பந்தங்கள் மூலமாகவே தாய்மொழியில் உள்ள பாடங்கள் அனைத்தையும் முடிக்க முடியுமா? வாய்மொழிப் பயிற்சியே வேண்டுவது இல்லையா?” என்ற இவை போன்ற ஐயங்கள் சிலருக்கு எழலாம். ஒப்பந்தங்கள் மூலம் தாய்மொழியில் எல்லாப் பாடங்களையும் சொல்லிக் கொடுக்க முடியாது என்பது உண்மையே. உரைநடைப் பாடங்கள், துணைப் பாடப் புத்தகத்திலுள்ள பகுதிகள், செய்யுளில் சில சுலபமான பகுதிகள், இலக்கணப் பகுதிகளில் சில இவை மட்டுமே ஒப்பந்த முறையில் முடிக்கலாம். மேலும் ஒப்பந்தங்கள் மூலந்தான் எல்லாப் பாடங்களையும் சொல்லிக்கொடுக்க

வேண்டும் என்ற கண்டிப்பும் இல்லை. செய்யுளில் சில கடினமான பகுதிகள், இலக்கணத்தில் சில கடினமான பகுதிகள் இவற்றை ஆசிரியர்கள் வகுப்பு முழுவதற்கும் சேர்ந்தாற்போல் சொல்லிக் கொடுக்க வேண்டும். ல, ள, ழ; ர, ற; ன, ண இவற்றை அநேக மாணவர்கள் நல்ல முறையில் உச்சரிப்பதே இல்லை. சில மாண வர்கள் வாக்கியங்களைத் தெளிவாகவும், முழுவதுமாகவும் பேசுவதே இல்லை. இச்சமயங்களில் எல்லாம் வகுப்பிலேயே அம்மாதிரியான மாணவர்களுக்கு அதிகமான வாய்மொழிப் பயிற் சியை ஆசிரியர்கள் கொடுக்க வேண்டும். நன்ருக உச்சரிக்கும் மாணவர்களைக் கொண்டும், அப்படிப்பட்டவர்களுக்குத் தகுந்த பயிற்சி கொடுக்கும்படிச் செய்ய வேண்டும். மேலும் ஓர் ஒப்பந் தத்தை மாணவர்கள் அனைவரும் முடித்த பின்னர், ஆசிரியர் மாணவர்கள் அனைவரையும் சேர்ந்தாற்போல் வகுப்பில் உட்கார வைத்துப் பொதுவாக அந்த ஒப்பந்தத்தில் மாணவர்களுக்கு ஏற்பட்ட சில ஐயங்களைத் தீர்க்கலாம். அதோடு ஆசிரியர்கள் அந்த ஒப்பந்தத்தில் கண்ட பொருளைப் பற்றிய பொதுக் கருத்துக்களை வகுப்பிலுள்ள அனைவருக்கும் சொல்லலாம். ஏற் கனவே மாணவர்கள் அவ்வொப்பந்தத்தை முடித்துவிட்டார்கள். ஆகையால், மாணவர்களும் ஆசிரியர்கள் சொல்லுவதை நன்கு கவனிப்பார்கள் என்பதிலும் ஐயம் இல்லை.

### இம்முறையின் நிறைகள்

சிலர், தேர்வில் வரும் ஒப்பந்தம் என்ருல் வினக்கள் மாதிரியே கொடுத்து விடைகளை எழுதச் சொல்லுவதுதான் என எண்ணிக்கொண்டு இருக்கலாம். ஆனல் ஒப்பந்தம் வேறு, தேர்வு வேறு. ஒப்பந்தத்தின் மூலம் மாணவர்களுக்குப் பாடங் களைச் சொல்லிக் கொடுக்கும்போது, அவற்றில் நான்கு முக்கிய மான சிறப்புக்கள் காணப்படுகின்றன. அவையாவன:— முதலாவதாக, ஓர் ஒப்பந்தத்தை மாணவர்கள் ஒரு குறிப் பிட்ட காலத்தில் முடித்துவிட வேண்டும். அந்த ஒப்பந்தத்தில் செய்ய வேண்டிய எழுத்துப் பயிற்சி, வாய்மொழிப் பயிற்சி, வாசிப்பு அனைத்தும் அக்கால வரையறைக்குள் முடித்துவிட வேண்டும். இரண்டாவதாக, இம்மாதிரியான ஒப்பந்தங்கள் மாணவர்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டுகின்றன; சுய முயற்சி யைத் தூண்டுகின்றன; எப்பொழுதும் பிறரையே எதிர்பார்த் திராமல், 'தன் கையே தனக்கு உதவி' என்ற கொள்கையை நிலைநாட்டுகின்றன. மூன்ருவதாக, ஒப்பந்தத்தில் அவ்வேலையை

எங்ஙனம் செய்ய வேண்டும் என்ற குறிப்புக்கள் கொடுக்கப் பட்டிருக்கும். நான்காவதாக, பாடப் புத்தகங்களிலுள்ள பொருள்களுக்கு (Matter) மேல் அதிகமான பொருள்களைத் தெரிந்துகொள்ளுவதற்கு வழி வகைகள் காட்டுகின்றன. அதிக மான பொருள்களை எப்புத்தகங்களிலிருந்து தெரிந்துகொள்ள லாம் எனவும் குறிப்புக்கள் அவ்வொப்பந்தங்களிலேயே காணப் படுகின்றன.

இவ்வொப்பந்தங்களைத் தயாரிப்பதும், அவற்றை மாணவர் களுக்குத் திருத்திக் கொடுப்பதும் கடினமான வேலைதான். ஆனல் ஆரம்பத்தில் அங்ஙனம் இருக்குமே தவிர வரவர ஆசிரியர்களின் சிரமம் குறைந்துவிடும். ஒப்பந்தங்களைத் தயா ரிக்கும் பொழுது ஆசிரியர்கள் பல புத்தகங்களைப் படித்துப் பார்த்தே தயாரிக்க வேண்டும். இதனல் ஆசிரியர்களும் பாட போதனைக்கு வேண்டிய முன் தயாரிப்புச் செய்துகொள்ள வசதி உண்டு.

ஒப்பந்த முறையால் புத்திசாலி மாணவர்கள் விரைவாக மேலும் மேலும் கற்க இடம் உண்டு. மந்தமான மாணவர்கள் தங்களுக்குப் புரியாத பாடப் பகுதிகளை ஆசிரியர்களிடம் தனித்து நன்ருகக் கேட்டுக்கொள்ளலாம்.

மாணவர்கள் தாங்களே தங்கள் சுய முயற்சியால் கற்றுக் கொள்ளுகின்ருர்கள்; ஆகையால் பாடங்களில் அதிக அக்கறையும் ஊக்கமும் காட்டுவார்கள். மாணவர்களின் சுறுசுறுப்பைக் கண்டு ஆசிரியர்களுக்கும் மகிழ்ச்சி ஏற்படுகின்றது.

இவ்வொப்பந்த முறையால் மாணவர்கள் உண்மையான வேலை செய்கின்ருர்கள். அவர்களால் அதிக வேலையும் செய்ய முடிகின்றது. சாதாரண முறையில் சொல்லிக் கொடுக்கும் பொழுது மாணவர்கள் பாடங்களில் அக்கறை இல்லாமல் கொட் டாவி விடுகின்ருர்கள். ஆனல் இம்முறையிலோ அங்ஙனம் இல்லாமல் அதிக வேலையை மாணவர்கள் தாங்களே செய்து முடிக்கின்ருர்கள்.

சாதாரண வகுப்பு முறையில் ஆசிரியர்கள் சொல்லிக் கொடுக்கும்பொழுது பலவிதத் திறமைகள், ஆர்வங்கள் உள்ள மாணவர்களுக்கு ஒரே மாதிரியான முறையில் சொல்லிக்கொடுக் கும் பொழுது, புத்திசாலி மாணவர்களின் படிப்பு வேகம் தடைப் படுகின்றது. மந்தமான மாணவர்கள் தங்களைக் கவனிக்கவில்லை.

என்று நினைக்கின்றார்கள். மேலும் ஒரு வகுப்பில் நன்றாகவும், தைரியமாகவும் பேசக்கூடியவனும் இருப்பான்; கோழையாக வும், வார்த்தைகளை மென்றும், விழுங்கியும் பேசக் கூடியவனும், திக்குகின்றவனும் ஆகிய பலவித மாணவர்கள் இருப்பார்கள். அவர்களுக்கு எல்லாம் இத் தனிப் பயிற்சி முறையால் தனித் தனியே தாய்மொழியில் வாய்மொழிப் பயிற்சி கொடுக்கலாம்.

இத் தனிப் பயிற்சி முறையால் ஆசிரியர்கள் தங்கள் வேலை களைத் திறமையாகவும், செவ்வையாகவும் செய்ய முடிகின்றது. ஆனால் பொதுவாக வகுப்பு முழுவதற்கும் ஒரே மாதிரியாகச் சொல்லிக் கொடுக்கும் முறையில் சில மாணவர்கள் புரிந்து கொண்டும், சில மாணவர்கள் புரிந்துகொள்ளாமலும் இருப் பார்கள். அதனால் நன்றாகச் சொல்லிக் கொடுத்தோம் என்ற மனத் திருப்தியும் ஆசிரியர்க்கு இருக்க முடியாது. ஆனால் தனிப் பயிற்சி முறையில் எல்லா விதமான மாணவர்களுக்கும் உண்மையாக உழைத்தோம் என்ற எண்ணம் ஆசிரியருக்கு ஏற்படுவதால், அவருக்கு மேலும் மேலும் வேலை செய்வதில் ஊக்கம் ஏற்படுகின்றது. இதனால் மாணவர்களுக்கும் ஆசிரியர் களுக்கும் நல்ல சூழ்நிலை ஏற்படுகின்றது.

இவ்வொப்பந்த முறையில் ஆரம்பத்தில் சில துன்பங்கள் இருப்பதுபோல் காணப்பட்டாலும், வகுப்பு மூலம் ஒரே அடியா கச் சொல்லிக் கொடுத்துவிட்டுப் போவதைவிடக் காலம் குறை வாகத்தான் ஆகின்றது. இவ்வுண்மை இம்முறையில் அநுபவம் கண்டவர்களின் முடிவு ஆகும்.

எல்லாப் பாடங்களையும் ஒரே முறையில் ஆசிரியர்கள் சொல்லிக் கொடுக்கும்பொழுது மாணவர்கள் முடிவில்லாத ஏராளமான பாடங்களைப் படித்துக்கொண்டே போவதாகக் கருதுகின்றார்கள். ஆனால் ஒப்பந்தங்களோ என்றால் சிறு சிறு பகுதிகள். அவற்றை ஒவ்வொன்றாகச் செய்து முடிக்க முடிக்க, மாணவர்களுக்கு மேலும் மேலும் வேலை செய்ய வேண்டும் என்னும் ஊக்கம் ஏற்படுகின்றது.

ஒப்பந்த முறை மாணவர்களுக்குச் சுதந்திரத்தையும், தன்னம்பிக்கையையும் ஊட்டுகின்றது. இதனால் மாணவர்கள் பிற்காலத்தில் திறமையாளர்களாக விளங்குவார்கள் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

குறைகள்

1. ஆசிரியருக்கு அதிக வேலைகள் உண்டாகும் என்பதும், அதிகநேரத்தைச்செலவழிக்கவேண்டும் என்பதும்,ஒப்பந்தங்களை வீட்டில் கொண்டு திருத்துவதால் ஆசிரியர் தம்முடைய குடும்ப வேலைகளைக் கவனிக்க முடியாது என்பதும் ஒருவாறு உண்மையே. ஆனால் சாதாரண வகுப்பு முறையிலும் ஆசிரியர்கள், பாடங்களை வகுப்புக்களில் சொல்லிக் கொடுக்கவேண்டி இருப்பதால்,தங்கள் வீடுகளுக்கு மாணவர்களின் பயிற்சி கட்டுரை குறிப்புப் புத்தகங் களை எடுத்துச் சென்றுதான் திருத்த வேண்டி உள்ளது. ஆகவே ஒப்பந்த முறையால் ஆசிரியருக்கு அதிக வேலை உண்டு என்று சொல்லுவதற்கு இல்லை. ஒன்று மட்டும் கவனிக்க வேண்டும்: வகுப்புக்களில் மாணவர்களின் மொத்த எண்ணிக்கை சுமார் 35-க்கு மேற்படாமல் இருந்தால் ஆசிரியருக்கு இந்த முறையால் சிரமம் ஏற்படாது.

2. இரண்டாம் குறையாவது, ஒப்பந்த முறையில் மாணவர் கள் ஒருவரை ஒருவர் பார்த்து எழுத (Copy) இடம் உண்டு என்பதே. ஆனால் ஆசிரியர் திறமையாலும் சுறுசுறுப்பாலும் கண்டிப்பாக இக் குறை மாணவர்களிடையே ஏற்படாமல் பார்த் துக் கொள்ளலாம். ஒப்பந்தங்களைத் திருத்தும் பொழுதும், மாணவர்களை வாய்மொழி மூலமும், எழுத்து மூலமும் சோதிக்கும் பொழுதும் எந்த மாணவன் பார்த்து எழுதுகின்றவன் என்று ஆசிரியர் சுலபமாகக் கண்டுபிடித்து விடலாம். பார்த்து எழுது வதால் தங்களுக்கு உண்மையான பயன் ஏற்படுவதில்லை என உணர்ந்த மாணவர்களும் நாளடைவில் அக்கெட்ட பழக்கத்தைக் கண்டிப்பாக விட்டுவிடுவார்கள்.

3. மாணவர்கள் கற்றுக் கொள்ள வேண்டிய அனைத்தையும் இத்தனிப் பயிற்சி மூலமாகவே சொல்லிக் கொடுக்க முடியாது என்பது அடுத்த குறையாகும். இக் குறை ஒருவாறு உண்மையே. ஒப்பந்த முறையிலேயே பாடங்கள் அனைத்தையும் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்னும் கண்டிப்பும் இல்லை. சில செய்யுள்களைக் குழுவாக மாணவர்களைப் பாடும்படிச் செய்யலாம். சில எழுத்து வேலைகளை ஒரேவிதத் திறமையுள்ள மாணவர்கள் சிலருக்குக் கூட்டுறவு வேலையாகக் கொடுத்துச் செய்யலாம். ஆசிரியரே உணர்ச்சி மிகுந்த சில பாடப் பகுதிகளை ஒவ்வொரு மாணவருக்கும் தனித்தனியே சொல்லிக் கொடுப்பதைவிட உணர்ச்சியுடன் படித்தும், நடித்தும் காட்டலாம். தனி முறை

யைக் கையாண்டால் மாணவர்களுக்குக் கூட்டுணர்ச்சியே இல்லாமற் போய்விடும். ஆகையால் வேண்டிய சமயங்களில், ஒரே தரமான மாணவர்களாகப் பிரித்து அவர்களுக்குச் சில கூட்டு வேலைகளைச் செயல் திட்ட முறையிலும் (Project Method) கொடுக்க வேண்டும். அப்பொழுதுதான் அவர்களிடம் கூட்டுணர்ச்சி ஏற்படும். ஆனால் இப்பொழுது மாணவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து மட்டும் எழுதாமல் (Copy) பார்த்துக் கொள்ள வேண்டியது ஆசிரியர்கள் கடமை ஆகும்.

4. சாதாரண முறையில் கற்றுக் கொடுப்பதைவிட ஒப்பந்த முறைக்குப் பணச் செலவு அதிகம் என்பது உண்மையே. ஒப்பந்தங்களை அச்சிடுவதற்காகச் செலவு அதிகம் பிடிக்கும். அத்துடன் நல்ல வகுப்புப் புத்தக நிலையங்களும் வேண்டும். ஆனால் இக்குறைகளால் ஒப்பந்த முறை வேண்டாம் என ஒதுக்கித் தள்ளுவது முறையன்று. சாதாரண முறைக்கும் புத்தக நிலையம் வேண்டுவதாகத்தான் உள்ளது. ஒப்பந்தங்களை இரண்டு மூன்று ஆண்டுகட்கு ஒரு முறை அச்சிடுவதோடு, பக்கத்தில் உள்ள பல பள்ளிக்கூடங்கள் சேர்ந்து அச்சிட்டால் செலவு அதிகம் என்னும் குறையும் நீங்கிவிடும்.

5. வகுப்புப் புத்தக நிலையங்களிலுள்ள புத்தகங்களை மாணவர்கள் அடிக்கடி மாற்றி எடுத்துப் பார்ப்பதால் புத்தகங்கள் சீக்கிரம் கெட்டுப் போகின்றன. அதோடு சில மாணவர்கள் புத்தகங்களைத் திருப்பித் தராமல் எடுத்துக்கொண்டே போய் விடுகின்றனர். இதனால் பள்ளிக்கூடத்திற்குப் பண விரயம் ஏற்படுகின்றது என்பதே அடுத்த குறை. ஆனால் இக்குறை தவிர்க்க முடியாதது எனச் சொல்லுவதற்கு இல்லை. வகுப்புப் புத்தக நிலயத்தை மாதத்திற்கு ஒரு முறை, திறமையான மாணவனிடம் ஒப்படைத்துவிட்டால் அம் மாணவன் புத்தகம் எடுக்கும் மாணவர்களிடம் கையெழுத்து வாங்கிக்கொண்டே கொடுப்பான். அப்பொழுது யாரும், வாங்கிய புத்தகத்தைத் திருப்பிக் கொடுக்காமல் இருக்க முடியாது.

6. மாணவர்கள் அனைவரும் ஒரே விதமான திறமை உடையவர்கள் அல்லர் என்பது யாவரும் அறிந்ததே. பல திறப்பட்ட மாணவர்களுக்கு ஒரே விதமான ஒப்பந்தங்களைக் கொடுப்பது சரியான முறை அல்ல என்பது அடுத்த குறையாகும். ஒரே வகுப்பிலுள்ள மாணவர்களை மூன்று வகைகளாகப் பிரித்து ஒவ்வொரு வகைக்கும் ஒரு வித்மான ஒப்பந்தங்களைக் கொடுத்து

முடிக்கும்படிச் சொல்லலாம். அப்பொழுது இக் குறையும் நீங்கி விடும்.

ஆகவே ஊன்றிப் பார்க்குமிடத்து, இவ் வொப்பந்த முறையில் நிறைகளே அதிகம் இருப்பதால், மேற்சொல்லப்பட்ட குறைகளையும் ஒருவாறு நீக்கி, மாணவர்களை ஊக்குவித்தால் நல்ல திறன் பெறுவார்கள் என்பது திண்ணம்.

வார்தா கல்வித் திட்டம்

ஆங்கிலேயர்கள் ஆட்சியில் கல்வித் திட்டமானது பெரும்பாலான எழுத்தாளர்களை உற்பத்தி செய்யக்கூடிய திட்டமாகவே அமைந்துவிட்டது. சிறுபான்மையினர் ஆசிரியர்களாகவும், வழக்கறிஞர்களாகவும் அமர்ந்து வந்தார்கள். இவ்வேலைகளில் அமர முடியாதவர்கள் வாழ்க்கையில் அவதிப் பட நேரிட்டது. ஏனென்றால் வெள்ளையர்கள் காலத்தில் அமைந்த கல்வித் திட்டத்தினால் வெறும் ஏட்டுக் கல்வி சொல்லிக் கொடுக்கப்பட்டு வந்ததே தவிர, தொழிற் கல்வி பெரும்பாலும் புறக்கணிக்கப்பட்டு விட்டது. 'தொழில் செய்தல் கேவலம்' எனவும் ஒரு தப்பான எண்ணம் படித்தவர்களிடையே உலவி வந்தது. இதனால் படித்த இளைஞர்களிடம் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரித்துவிட்டது. இதைக் கண்ட மகாத்மா காந்தி அடிகள் 'வார்தா' என்ற இடத்தில் ஒரு கல்வித் திட்டத்தை ஏற்படுத்தினர். அதன் முக்கிய அம்சங்கள் வருமாறு:— (1) குழந்தைகளுக்கு 7 வயது முதல் 14 வயது முடிய இலவசக் கட்டாய ஆரம்பக் கல்வி அளித்தல், (2) தாய்மொழி மூலமாகவே கல்வி பயிற்றல், (3) பள்ளிகளில் ஒரு கைத்தொழிலை அடிப்படையாக வைத்து அதன் மூலமாக எல்லாப் பாடங்களையும் சொல்லிக் கொடுத்தல். குழந்தைகள் பழகும் அக் கைத்தொழில் பிற்கால வாழ்க்கைக்கு வசதியாக இருத்தலோடு இப்பொழுதே இலாபகரமானதாகவும் இருக்க வேண்டும். நூல் நூற்றல், நெசவு, விவசாயம், தச்சுவேலை, கன்னர வேலை இவைகளில் ஒன்றின்மூலம் பயிற்சி அளிக்கப்பட வேண்டும். (4) இத்தொழில் மூலம் கிடைத்த பொருள்களை விற்று அதனால் கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டே பள்ளிக்கூடம் நடத்தப் பட வேண்டும். 14 வயதுக்கு மேல் ஹிந்தி சொல்லிக் கொடுக்கப் படவேண்டும். (5) இம்முறைப்படி நடத்தப்படும் பள்ளிகளில் ஒரு நாளில் 3 மணி 20 நிமிட நேரத்திற்குத் தொழில் சொல்லிக் கொடுக்கப்படும்; 45 நிமிடங்களுக்கு இசை, ஓவியம், கணிதமும்,

50 நிமிடங்களுக்குத் தாய்மொழியும், 30 நிமிடங்களுக்குச் சமூகப் பாடங்களும், பொது விஞ்ஞானமும், 10 நிமிடங்களுக்கு உடற் பயிற்சியும் சொல்லிக் கொடுக்கப்படும்; 10 நிமிடங்களுக்குச் சிறு ஓய்வு உண்டு.

இத்திட்டத்தின் நிறைகள்

இத்திட்டம் ஆங்கிலக் கல்வி முறையைவிடப் பன்மடங்கு களில் இந்திய சமுதாயத் தொடர்பு கொண்டது. இப்பள்ளி களில் கல்வி பயின்று வெளிச் செல்லும் மாணவர்கள் ஓரளவு தொழிற் கல்வி பெற்று இருப்பார்கள். ஆகையால் பிற்கால வாழ்க்கையில் அவர்களால் வாழ வசதிகள் செய்து கொள்ள முடியும். இலவசக் கட்டாயப் படிப்பால் கோடிக் கணக்கான மாணவர்களின் அறியாமை நீங்கும். இதனுல் இளைஞர்கள் பிற்கால வாழ்க்கையில் சுதந்திர இந்தியாவில் அறிவுடையவர் களாக விளங்கலாம். இம்முறையில் நடத்தப்படும் பள்ளிக் கூடங்களில் உற்பத்தியாக்கப்படும் பொருள்களை விற்கும் ஊதி யத்தைக் கொண்டே அப்பள்ளி நடத்தப்படும். ஆகையால் அரசாங்கத்தாருக்குச் செலவு இல்லை. வாயில் நுழையாத அந்நிய மொழிகள் மாணவர்களுக்குப் பதினன்கு வயது முடியும் வரை சொல்லிக் கொடுக்கப்பட மாட்டா. ஆகையால் மாண வர்கள் தாய்மொழிப் பயிற்சியில் சிறந்தவர்களாக ஆவார்கள். முதியவர்களுக்குக் கல்வி சொல்லிக் கொடுத்தல் என்னும் திட்டமும் இதோடு தொடர்பு படுத்தப்பட்டு உள்ளபடியால் கிராமங்களில் வாழும் இலட்சக்கணக்கான முதியவர்கள் தங்கள் ஓய்வு நேரங்களிலும், இராக் காலங்களிலும் கல்வி பெற்றுத் தங்கள் அறியாமையை நீக்கிக்கொள்ள நல்ல வசதி உண்டு.

குறைகள்

இதன் முக்கியக் குறையாகச் சொல்லப்படுவது இப்பள்ளி களில் அனுசரிக்கும் பாடத் திட்டமே. தொழிலுக்குத்தான் அதிக நேரம் கொடுக்கப்படுகின்றதே தவிர, மற்றப் பாடங் களுக்கு உரிய நேரம் ஒதுக்கப்படவில்லை என்பதே குறை. தொழி லுக்கு அதிக நேரம் ஒதுக்கப்பட்டாலும், அந்நேரத்தில் தொழில் மட்டும் போதிக்கப்படுவதில்லை. அத்தொழிலோடு இணைக் கப்பட்ட இதர தாய்மொழி, சமூகப் பாடம் முதலியவைகளும் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன; மேலும் மாணவர்கள் தொழி லில் ஈடுபடுவதால் அதுவே அவர்களுக்கு உடற்பயிற்சியாகவும்

ஆகின்றது. ஆகவே உடற்பயிற்சிக்கென்று அதிக நேரம் ஒதுக்கப் பட வேண்டிய அவசியம் இல்லை. ஆகவே இக்குறையை ஒரு பெருங் குறையாகச் சொல்ல முடியாது.

அடுத்தபடியாக, 7-ஆம் வயதில்தான் குழந்தைகள் பள்ளி களில் சேர்க்கப்படவேண்டும் என்னும் நியதி இருப்பதால் குழந்தைகள் 5 ஆண்டுகளுக்கு மேல் உள்ள காலத்தை வீணாகப் போக்குவார்கள் என்ற இரண்டாம் குறையும் பலரால் சொல் லப்படுகின்றது. இக்குறை இருப்பது உண்மையே. ஆனால் காந்தி அடிகள் ஏற்படுத்திய வார்தா திட்டத்தில் இந்திய அர சாங்கத்தார் சிற்சில சிறிய மாறுதல்களை ஏற்படுத்தி உள்ளார்கள். அதாவது 7-இலிருந்து 14 வயது வரை படிக்க வேண்டும் என்பதை 6—14 என்று மாற்றி உள்ளார்கள்; அதோடு பெற் றோர்கள் விரும்பினால் 5 வயது நிரம்பியதுமே பள்ளிக்கு அனுப்ப லாம் என்றும் மாற்றி உள்ளார்கள். ஆகவே இக்குறையும் நீக்கப்பட்டு விட்டது.

அடுத்தபடியாகக் குழந்தைகளுக்கு மிக இளம் வயதிலேயே தொழில் சொல்லிக் கொடுப்பதால் முழுப் பயன் இல்லை; அதனால் பொருள் நட்டமே ஏற்படும் என்பதே. 1—4 வகுப்புக்கள் வரை குழந்தைகளுக்குத் தகுந்த பொருள்களைக் கொண்டு விளை யாட்டு முறையில் பாடங்களைச் சொல்லிக்கொடுத்து, அதற்கு அடுத்தாற்போல் உள்ள வகுப்புக்களில் தொழிலைச் சொல்லிக் கொடுத்தால் மாணவ மாணவிகள் ஒரு தொழிலை நன்கு கற்றுக் கொள்ளுவார்கள்; பொருள் நட்டமும் ஏற்படாது. ஆகவே இக் குறையும் இவ்வாறு நீக்கப்படலாம்.

அடுத்தபடியாக இத்திட்டப்படி நடத்தப்படும் பள்ளிகளில் உற்பத்தி ஆக்கப்படும் பொருள்களை விற்று, அப்பள்ளியில் ஏற்படும் செலவுகள் அனைத்தையும் ஈடு செய்தல் முடியாது என்பது மற்றொரு குறை. குழந்தைகளால் செய்யப்படும் பொருள் களை விற்றால் பெரும்பாலானவர்கள் அவற்றை வாங்க மாட் டார்கள். அதனால் முழு இலாபமும் கிடைக்காது. இக்குறை உண்மையே. குழந்தைகள் செய்யும் பொருள்களை விற்று வரும் ஊதியத்தால் பள்ளிச் செலவுகள் அனைத்தையும் ஈடு செய்ய முடியாவிட்டால், துண்டு விழும் செலவை அரசாங்கத்தார் ஒப்புக் கொள்ள வேண்டும். அங்ஙனம் செய்தால் இக் குறையும் நீக்கப்பட்டுவிடும்.

அடுத்தபடியாக, தொழில் மூலம் மதபோதனை முதலிய எல்லாப் பாடங்களையும் சொல்லிக் கொடுக்கப்பட முடியவில்லை

என்பது குறை. அங்ஙனம் சொல்லிக் கொடுக்கப்பட முடியாத பாடங்களைத் தனியாக வழக்கமான முறையில் சொல்லிக் கொடுக்கலாம்; அல்லது மதபோதனை முதலியவற்றை வீட்டி லேயே சொல்லிக் கொடுக்கலாம்.

இன்னொரு குறை, இம்முறைப்படி நடத்தப்படும் பள்ளிகளி லிருந்து வேறு பள்ளிகளுக்கு மாணவ, மாணவிகள் மாற முடிய வில்லை என்பதே. 5 வகுப்புகள் முடித்த பின்னர் இப் பள்ளி களிலிருந்து வேறு பள்ளிகளுக்குச் செல்ல அனுமதி கொடுத்து விட்டால் இக்குறையும் நீங்கிவிடும்.

ஆகவே வார்தா கல்வித் திட்டம் மேற்கண்ட முறையில் கையாளப்பட்டால் நம் நாட்டிற்கு நல்ல பலன் தரும் என்பது பலர் கண்ட உண்மை ஆகும்.

ஐந்தாம் அத்தியாயம்

# வாங்கலும் வெளி விடலும்

## (The receptive and expressional side of Language Learning.)

ஒவ்வொருவரும் புற உலகில் நடக்கும் நிகழ்ச்சிகளைப் பற்றிய அறிவை ஐம்புலன்களின் வழியாகப் பெறுகிறார்கள். ஆகவே அப்புலன்களுக்கு இளமை முதல் பயிற்சி கொடுத்தால் ஒருவனுடைய அறிவு விசாலம் உறும் என்பதில் ஐயம் இல்லை. குழந்தைகள் விளையாட்டுப் புத்தி அதிகம் உடையவர்கள். தாய்மொழி போதிக்கும் ஆசிரியர்கள் அவர்களுடைய செவிப் புலன்களையும், கட்புலன்களையும் தாங்கள் சொல்லுவதையும், காட்டுவதையும் விடாமல் வாங்கும்படிப் பழக்க வேண்டும் அதற்காக 'அவர்களைத் தண்டிப்பேன்' எனப் பயமுறுத்தல் கூடாது. ஆகவே ஆசிரியர்கள் தாங்கள் பாடங்கள் சொல்லிக் கொடுக்கும் முறையில் மாணவர்களுக்குப் பிரியம் ஏற்படும்படிச் செய்தால் அவர்கள் எவ்விதப் பயமுறுத்தலும், வற்புறுத்தலும் இன்றியே கவனிப்பார்கள். உதாரணமாக, ஆசிரியர் ஒரு செய்யுள் பாடத்தை உரைநடை மாதிரி படித்துக் காண்பித்தால் அநேக மாணவர்கள் ஆசிரியர் படிப்பதில் கவனம் இல்லாமல் இருப்பார்கள். அச் செய்யுளை இசையோடு ஆசிரியர் படித்துக் காண்பித்தால் மிகவும் மந்தபுத்தி உள்ள மாணவர்கள்கூடப் பாடங்களைக் கண்டிப்பாகக் கவனிப்பார்கள் என்பது திண்ணம்.

வெண்பாவைப் படிக்கும்பொழுது செப்பல் ஓசையோடும், ஆசிரியப் பாவைப் படிக்கும்பொழுது அகவல் ஓசையோடும், வஞ்சிப்பாவைப் படிக்கும்பொழுது தூங்கல் ஓசையோடும், கலிப் பாவைப் படிக்கும்பொழுது துள்ளல் ஓசையோடும் படித்தால் சோம்பிக் கிடக்கும் மாணவர்களுடைய மனம் தூண்டப்பட்டு ஆசிரியர்கள் சொல்லுவதை மாணவர்கள் நன்கு கவனிப்பார்கள். மேலும் தாளத்திற்கு ஒத்து வரும் பாக்கள் வரும்பொழுது, அவற்றை வகுப்பில் தாளம் போட்டே தமிழ் ஆசிரியர்கள் சொல்லிக் கொடுக்க வேண்டும். ஆசிரியர்கள் பாக்களைப் படித்துக் காட்டும்பொழுது பாக்களின் பொருளுக்குத் தகுந்தாற் போலத்

தங்கள் குரலை உயர்த்தியும் தாழ்த்தியும் உணர்ச்சியுடனும் படிக்க வேண்டும். அங்ஙனம் படித்தால் ஆசிரியர்கள் சொல்லிக் கொடுப்பதில் மாணவர்களுக்கு மிகுந்த கவனம் ஏற்படும். மற்றும் நடிப்பிற்கு உரிய செய்யுள் பகுதிகளையோ, உரைநடைப் பகுதிகளையோ ஆசிரியர்கள் சொல்லிக் கொடுக்கும் காலத்தில் ஆசிரியர்கள் நிகழ்ச்சிகளை நடித்தே காண்பிக்க வேண்டும். அப்பொழுது ஆசிரியர்கள்பால் மாணவர்களின் கவனம் இழுக்கப்படும். பின்பு பாடப்பகுதிகளை விளக்குங் காலத்தில் ஆசிரியர்கள் உரத்தும், தெளிவாகவும், நல்ல உச்சரிப்புடனும் பேச வேண்டும். கடின பதங்களின் பொருள்களைக் கரும் பலகையில் எழுதிப் போட வேண்டும். எழுதிப் போட்டவற்றை மாணவர்கள் குறித்துக் கொள்ளுகின்றார்களா என உடனுக்குடன் சிறிது நேரத்தில் சுற்றிப் பார்க்க வேண்டும்.

பாடப் பகுதிகளை விளக்குங் காலத்திலும், ஆசிரியர்கள் வினாக்களைக் கேட்குங் காலத்திலும் வகுப்பு முழுவதையும் பார்த்துக் கேட்க வேண்டும். அப்பொழுதுதான் ஒவ்வொரு மாணவனும், எங்கே தன்னை விடை கேட்டுவிடுகின்றாரோ என எண்ணி, விடையை ஆலோசித்துக்கொண்டே வகுப்பில் கவனமாக இருப்பான். அங்ஙனமின்றி முதலிலேயே ஒரு மாணவனைத் தேர்ந்தெடுத்து அவனை மட்டும் பார்த்து ஒரு கேள்வியைக் கேட்டால் மற்ற மாணவர்கள் தங்களைக் கேட்கவில்லை என வகுப்பில் கவனக் குறைவாக இருப்பார்கள். மேலும் ஒரே வரிசையிலுள்ள மாணவர்களை வரிசையாக விடை கேட்டுக்கொண்டு செல்லுவதைக் காட்டிலும், அங்கு ஒருவர் இங்கு ஒருவராக மாணவர்களைப் பொறுக்கிக் கேட்டால் மாணவர்கள் வகுப்பில் இன்னும் அதிகக் கவனமாக இருப்பார்கள் என்பது திண்ணம். தாய்மொழியைப் போதிக்கும் காலத்தில் இவ்வித வழிகளில் ஆசிரியர்கள் மாணவர்களின் வாங்கும் சக்தியைப் (receptive power) பெருக்கலாம்.

மாணவர்கள் இங்ஙனமாக உள்வாங்கிய கருத்துக்களை நல்ல முறையில் வெளியிடவும் பழகிக் கொள்ள வேண்டும். கருத்துக்களை இரண்டு வழிகளில் வெளியிடலாம். அவையாவன: ஒன்று, எழுத்து மூலம்; இரண்டு, வாய் மொழி மூலம். மாணவர்கள் தங்கள் கருத்துக்களை எழுத்து மூலம் வெளியிடுவதற்கான பல விதமான பயிற்சிக் கட்டுரைகளை ஆசிரியர்கள் கொடுக்க

வேண்டும். அவற்றை மாணவர்கள் எழுதும்படிச் செய்ய வேண்டும். மாணவர்களால் எழுதப்பட்ட கட்டுரைகளை ஆசிரியர் அவ்வப்பொழுது சிவப்பு மைப் பேனாவால் திருத்த வேண்டும். மிக மோசமாக எழுதியுள்ள மாணவர்களைப் பக்கத்திலே வைத்துக்கொள்ள வேண்டும். அவ்வகுப்பு மாணவர்கள் அனைவ ராலும் பொதுவாகச் செய்யப்பட்டுள்ள சில பொதுப் பிழை களைக் கரும் பலகையில் எழுதிப் போட்டு, அவற்றின் திருத்தங் களை, தெரிந்த மாணவர்களைக் கொண்டு வருவிக்க வேண்டும்; மாணவர்கள் அனைவருக்கும் தெரியாவிட்டால் மட்டும் ஆசிரியர் திருத்தத்தைக் கரும் பலகையில் எழுதிப் போடவேண்டும். ஆசிரி யரால் திருத்தப்பட்ட கட்டுரைகளில் பிழைகளை மாணவர்கள் கட்டுரை குறிப்புப் புத்தகங்களின் வலப் பக்கங்களில் திருத் தும்படிச் செய்யவேண்டும். புதிய கட்டுரைகளை ஆசிரியர் திருத்தப் புகுமுன்னர், பழைய கட்டுரைகளிலுள்ள பிழை களை, மாணவர்கள் முறைப்படி திருத்தி உள்ளார்களா எனப் பார்க்க வேண்டும். அங்ஙனம் திருத்தாத மாணவர்களைத் திருத்தும்படிச் செய்ய வேண்டும். இங்ஙனம் செய்தால் மாணவர்கள் தங்களுடைய கருத்துக்களை எழுத்து மூலம் நல்ல முறையில் வெளியிடக் கற்றுக் கொள்ளுவார்கள்.

தமிழ் மொழி பயிற்றும் ஆசிரியர்கள், தாங்கள் கற்றுக் கொண்டவற்றை நல்ல முறையில் திருப்பிச் சொல்லும்படிச் செய்ய வேண்டும். மாணவர்கள் வாக்கியங்களை அரைகுறையாகச் சொல்லாமல் முழு வாக்கியங்களாகப் பேசும்படிச் செய்ய வேண்டும். வார்த்தைகளை அரை குறையாகவோ, மென்றோ விழுங்கியோ வெளியிடல் கூடாது. தெளிவாகப் பேச வேண்டும். லகர, ளகர, ழகர, னகர, ணகர, நகரங்களின் வித்தியாசங்களைத் தெளிவாக மாணவர்கள் உச்சரிக்கப் பழக வேண்டும். பேசும் பொழுதும் படிக்கும்பொழுதும் பொருளுக்குத் தக்கபடி குரலை உயர்த்தியும், தாழ்த்தியும் முழுப் பொருளும் தொனிக்கும்படிச் செய்தல் வேண்டும். பெரும்பாலான மாணவர்கள் எழுதும் பொழுதும் படிக்கும்பொழுதும் ஒற்று இரட்டிப்பையே சரியாகச் செய்வதில்லை. இந்தக் குறைகள் மாணவர்கள் பேச்சில் காணப் பட்டால் ஆசிரியர்கள் அவ்விடைகளை ஏற்றுக்கொள்ளக்கூடாது. சரியானபடி உச்சரிக்கும்படிச் செய்ய வேண்டும். கீழ் வகுப்புக் களிலிருந்தே மாணவர்களுக்கு இவ்விதப் பயிற்சிகள் கொடுத் தால் அவர்கள் கண்டிப்பாகத் தாங்கள் கற்றவற்றைத் திருந்திய

முறையில் வெளியிடுவார்கள். தவறிய மாணவர்களை ஆசிரியர் சிரித்து ஏளனம் செய்தோ, பயமுறுத்தியோ வந்தால் அம் மாணவர்களுக்குப் பய உணர்ச்சி ஏற்பட்டு ஒன்றையும் சொல்லா மலே விட்டுவிடுவார்கள். அங்ஙனமின்றி விளையாட்டு முறையில் மகிழ்ச்சியுடன் அவர்களை ஊக்குவித்தால் கண்டிப்பாகத் திருந்து வார்கள் என்பது நிச்சயம்.

ஆறும் அத்தியாயம்

# நல்ல முறையில் பேசப் பழக்குதல்

## வாய்மொழிப் பயிற்சி (Oral work)

மாணவர்களுக்கு முதலாம் வகுப்பிலிருந்து பத்தாம் வகுப்பு வரையில் தாய்மொழியில் நல்ல வாய்மொழிப் பயிற்சி கொடுக்க வேண்டும். தற்காலத்தில் இம்மாதிரியான வாய்மொழிப் பயிற்சி பெரும்பாலான பள்ளிகளில் புறக்கணிக்கப்படுவதாலேயே, அநேக மாணவர்கள் தாய்மொழியில் நன்கு தெளிவாகவும், பிழையறவும், உற்சாகமாகவும் தங்கள் எண்ணங்களை வெளியிட முடியாமல் இருக்கின்றார்கள். நன்றாகப் பேசத் தெரியாதவர்களுக்கு நன்றாக எழுதத் தெரியாது என்பதும் உண்மை; ஆகவே நல்ல கட்டுரைகள் எழுதப் பழக வேண்டுமானால் முதலில் மாணவர்கள் பேசவும் பழகிக்கொள்ள வேண்டும். இரண்டாவதாக, தங்கள் எண்ணங்களைத் தைரியமாகவும், உணர்ச்சியுடனும் வெளியிடப் பழகுவதால் மாணவர்களின் ஆண்மை (Personality) விருத்தியாகின்றது. அங்ஙனம் பேசப் பழக்கப் படாத மாணவர்கள் நாளடைவில் தன்னம்பிக்கையை இழந்து வாழ்க்கையில் பரிமளிக்காமலும் போய் விடுவார்கள். ஆகவே மாணவர்களின் தன்னம்பிக்கை முதலான அருங்குணங்கள் இளமையிலிருந்தே வளர வேண்டுமானால், அவர்களைத் தைரியமாகவும், ஊக்கமாகவும், உற்சாகமாகவும் தங்கள் எண்ணங்களை வெளியிடும்படிப் பழக்க வேண்டும்.

### 1. பேச்சும், உரையாடலும்

முதலாவது இரண்டாவது வகுப்புக்களில் பயிலும் மாணவர்களை அவர்கள் வீட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளைப்பற்றியும், அவர்கள் கண்களால் பார்த்த பொருள்களைப் பற்றியும், அவர்கள் செய்து வந்த விளையாட்டுப் பொருள்களைப் பற்றியும் பள்ளிகளில் மற்ற மாணவர்களுக்கு எடுத்துச் சொல்லும்படி ஆசிரியர்கள் பழக்க வேண்டும். ஆதாரப் பள்ளிகளில் பயிலும் மாணவர்கள் தாங்கள் செய்யும் பொருள்களைப்பற்றியும், வேலைகளைப் பற்றியும் விவரமாகப் பேசும்படிப் பழக்க வேண்டும். எடுத்துச் சொல்லும் மாணவர்கள் தங்கள் பேச்சுக்களை முடித்த பிறகு, இதுவரை

கேட்டுக்கொண்டிருந்த மாணவர்களைப் பதில் சொல்லும்படிச் சொல்ல வேண்டும். இங்ஙனம் மாணவர்கள் பேசுங்காலத்தில் ஆரம்பத்தில், அவர்கள் வீடுகளில் கொச்சையாகப் பேசுகின்ற படியே பேச விட்டுவிட வேண்டும்; இலக்கணப் பிழைகளைக் கவனித்தல் கூடாது. ஆசிரியர் குறுக்கே நுழைந்து அவர்களைத் திருத்தக்கூடாது. அவர்கள் பேசுவதைப் பார்த்து மற்றவர்கள் கேலி செய்தல் கூடாது. ஆசிரியர்கள் கோபித்துக்கொள்ளுதலும் கூடாது. பெற்றோர்களைப்போல் இருந்து குழந்தைகளின் கொச்சை மொழிகளைக் கேட்டு இன்புறுதல் வேண்டும். தங்கள் கருத்துக்களை உற்சாகத்துடனும், ஊக்கத்துடனும், உணர்ச்சியுடனும் பேசும்படி மாணவர்களை ஆசிரியர்கள் ஊக்குவிக்க வேண்டும். மாணவர்கள் சொல்லி முடித்த பின்னர் ஆசிரியர்கள் சொல்லவேண்டுவனவற்றை முறையாக, குழந்தைகளின் உற்சாகம் குறையாத முறையில் எடுத்துச் சொல்ல வேண்டும். மூன்றும் வகுப்பிலிருந்து இலக்கணப் பிழைகள், 'ல'கர 'ள'கர 'ழ'கர உச்சரிப்புக்களின் வித்தியாசங்களை ஆசிரியர்கள் எடுத்துச் சொல்லித் திருத்த வேண்டும். கீழ் இரண்டு வகுப்புக்களிலும் மாணவர்களின் உற்சாகம் குறையாத முறைகளில் அப்பிழைகளை முடிந்தவரையில் திருத்தலாம்.

2. பாட்டுக்கள் பாடுதல்

குழந்தைகளுக்கு இசையில் விருப்பம் அதிகம். உணர்ச்சி ததும்பும் பாட்டுக்களையும், நடித்துக் காண்பிக்கக் கூடிய பாட்டுக்களையும், தாலாட்டுப் பாட்டுக்களையும் ஆசிரியர்கள் மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கலாம். மாணவர்கள் செய்யும் பொருள்களைப் பற்றியும், விளையாடும் விளையாட்டுக்களைப் பற்றியும், பள்ளிகளில் அவர்கள் காணும் பொருள்களைப் பற்றியும் எதுகை மோனைகள் விளங்க ஓசை நயத்துடன் ஆசிரியர்களே சிறுசிறு பாட்டுக்களைக் காட்டி அவற்றை மாணவர்கள் பாடும்படிச் செய்யவேண்டும். உதாரணமாக :—

அ. கெட்டிக் காரப் பையன்
குட்டிக் கரணம் போடு
மட்ட மான பையன்
பொட்டுப் பொட்டென ஓடு.

ஆ. தோசை நல்ல தோசை
காசைக் கொடுத்து வாங்கு

ஆசை யாகத் தின்னு
மேசை மேலே வைத்து.

இ. அதோ சுவரில் பார்
விதம் விதமான படம்
நல்ல காந்திப் படம்
எல்ல வரும் வணங்குவம்.

இம்மாதிரியான சிறு சிறு பாக்களை இடம் காலத்திற்குத் தகுந்தபடி ஆசிரியர்களே தயாரித்து மாணவர்களைப் பாடும் படிச் செய்ய வேண்டும்.

3. கதை சொல்லுதல்

சிறு குழந்தைகளுக்குக் கதை கேட்பதிலும் கதை சொல்லு வதிலும் விருப்பம் அதிகம். வீட்டில் பாட்டி, தாயார் முதலியு வர்கள் சொன்ன கதைகளைத் திருப்பிச் சொல்லும்படிச் செய்ய லாம். ஆசிரியரே சில கதைகளைச் சொல்லி மாணவர்களைத் திருப்பிச் சொல்லும்படிச் செய்யலாம். ஆசிரியர்கள் கதைகள் சொல்லுவதில் பல முறைகள் உண்டு. ஒரு கதையின் ஆரம் பத்தை, முடிவை, அல்லது நடுப்பாகத்தை மட்டும் சொல்லிவிட்டு மற்றப் பாகங்களை மாணவர்களைக்கொண்டே சொல்லும்படிச் செய்யலாம். கதைகளில் சிறு குறிப்புக்களை மட்டும் கொடுத்து முழுக் கதையையும் முறையாகச் சொல்லும்படியும் செய்யலாம். இம்முறையை எட்டு, ஒன்பது வகுப்புக்கள் வரை கையாளலாம்.

4. படங்களை உபயோகப்படுத்தல்

சிறுசிறு படங்களையோ, பெரிய படங்களையோ, கதைத் தொடர்கள் கொண்ட படங்களையோ மாணவர்களுக்குக் காட்டி அவற்றிலுள்ள பொருள்களின் பெயர்களையும், நிகழ்ச்சிகளை யும், கதைகளையும் அவர்கள் சொல்லும்படிச் செய்யவேண்டும். படங்கள் தெளிவாக வரையப் பட்டிருத்தல் வேண்டும். ஐந்தாம் வகுப்பு வரை உபயோகப்படும் படங்களில் காணப்படும் பொருள்கள், நிகழ்ச்சிகள் அனைத்தும் மாணவர்களின் அனுபவத் திற்கு உட்பட்டவையாக இருத்தல் வேண்டும். படங்கள் அழ காகவும், கவர்ச்சிகரமாகவும் இருக்க வேண்டும். ஐந்தாம் வகுப்பிற்கு மேல் உபயோகப் படுத்தப்படும் படங்களில் காணப் படுபவை மாணவர்களின் அனுபவத்திற்கு அப்பாற்பட்டனவாக வும், புதியனவாகவுங்கூட இருக்கலாம்.

5. விளையாட்டு முறையில் சொல்லிக் கொடுக்கும்பொழுதும் வாய்மொழிப் பயிற்சியை விருத்தி செய்யலாம்.

6. சொற்பொழிவு ஆற்றுதல்

ஐந்து வகுப்புக்களுக்கு மேல் மாணவர்களையே சிறு சொற்பொழிவுகள் செய்யும்படிச் செய்யலாம். தலைப்பு மாணவர்களுக்குப் பிடித்தமானதாக இருக்க வேண்டும். மாணவர்களுக்குள் ஒருவனையே கூட்டத்திற்குத் தலைவனாக இருக்கும்படிச் செய்யவேண்டும். முன்கூட்டியே தலைப்பைக் கொடுத்துத் தயாரித்துக்கொண்டு வரும்படிச் செய்யவேண்டும். பின்னர் அவர்களை ஒருவர் பின் ஒருவராகப் பேசும்படிச் செய்யவேண்டும். பேசும்பொழுது ஆசிரியர் குறுக்கிடக் கூடாது. மாணவர்கள் செய்யும் எழுத்துப் பிழைகளையும், சொற்பிழைகளையும் உச்சரிப்புப் பிழைகளையும், பொருட் பிழைகளையும் ஆசிரியர் கூர்ந்து கவனித்துக் குறித்துக்கொள்ள வேண்டும். பின்பு கூட்டம் முடிந்தபின் வேறு பாடங்கள் நடத்தும்பொழுதும் அப்பிழைகளைத் திருத்திக் காண்பிக்க வேண்டும். அங்ஙனமின்றி ஆசிரியர் அப்பிழைகளை அவ்வப்பொழுது திருத்த முயன்றாலோ, பிழை காணும் முறையில் தம்மைக் காட்டிக்கொண்டாலோ மாணவர்களின் உற்சாகம் குன்றிப் பிறகு ஒருவரும் பேசவே முன்வரமாட்டார்கள். இவ்விதச் சொற்பொழிவு பெரும்பாலும் ஒரே காலத்தில் (Period) முடிவதாக இருக்க வேண்டும். சில சமயங்களில் அங்ஙனம் ஒரு காலத்தில் முடியாவிட்டால் அடுத்த காலத்திலும் வைத்துக்கொள்ளலாம். அதனால் பாதகம் ஒன்றும் இல்லை. கடைசியில் மாணவர் தலைவனை முடிவுரை கூறும்படிச் செய்ய வேண்டும்.

7. புத்தக விமரிசனம்

ஏழு எட்டாம் வகுப்புக்களில் பயிலும் மாணவர்களில் சிலருக்கு ஒரே புத்தகத்தின் நகல்களைக் கொடுத்துப் படித்து, அவற்றைப் பற்றிய கருத்துக்களை எழுதிக்கொண்டு வரும்படிச் செய்யலாம். கருத்துக்களை எழுதுவதற்கு உரிய தலைப்புக்களை ஆசிரியர் முன்னரே அவர்களுக்குக் கொடுத்துவிடவேண்டும். உதாரணமாக, (1) புத்தகத்தின் கட்டுக்கோப்பு, (2) அச்சடித்த முறை, (3) நடை, (4) கதைப்போக்கு, (5) முடிவு, (6) பொருள் பொருத்தம் முதலிய தலைப்புக்களைக் கொடுக்கலாம். படித்து வந்த ஒவ்வொரு மாணவனையும் ஒரு தலைப்பைப்பற்றி எடுத்துச்

சொல்லும்படிச் செய்யலாம். அங்ஙனமின்றி எல்லாத் தலைப்புக்களையும் பற்றி ஒருவர்பின் ஒருவராக எடுத்துச் சொல்லும்படிச் செய்யலாம். அவர்கள் ஏதாவது ஒருவருக்கு ஒருவர் முரணான கருத்துக்களைச் சொல்லுகின்றார்களா என ஆராயும்படி மற்ற மாணவர்களைத் தூண்ட வேண்டும். விமரிசனம் முடிந்த பின்னர் மற்ற மாணவர்களைப் பேசும்படிச் செய்யவேண்டும். இவ்விடங்களிலும் ஆசிரியர் முன்போலவே வழிகாட்டியாகவே இருந்து நடத்திக்கொண்டு செல்லவேண்டும்.

8. நாடகம் நடித்தல்

இரண்டாம் வகுப்பிலிருந்து நான்காம் வகுப்பு முடிய உள்ள மாணவர்களுக்குச் சிறு சிறு கதைகளை ஆசிரியர் சொல்லிக் கொடுக்கவேண்டும். அக்கதைகளைச் சொல்லிக்கொடுத்த பிறகு ஒரு குழுவிலுள்ள மாணவர்களை அக்கதையை நடிக்கும்படிச் சொல்லவேண்டும். கதாபாத்திரங்களைத் தேர்ந்தெடுப்பதை மாணவர்களின் பிரியத்திற்கே விட்டுவிடவேண்டும். கதாபாத்திரங்கள் நடிக்கும்பொழுதும், பேசும்பொழுதும் ஆசிரியர் முன்போலவே குறுக்கிடுதல் கூடாது. பிழைகள் ஏற்பட்டால் பின்னர் மாணவர்களின் உற்சாகத்தைக் குறைக்காத முறையில் திருத்திக்காட்ட வேண்டும்.

ஐந்தாம் வகுப்பிற்கு மேற்பட்ட வகுப்பிலுள்ள மாணவர்களைக் கதைப்புத்தகங்களைப் படிக்கச் சொல்ல வேண்டும். ஒரு குழு படித்த பின்னர் அக்கதையை அக்குழு மாணவர்கள் நடிக்கும்படிச் சொல்ல வேண்டும். அக்குழு நடித்து முடித்த பின்னர் இன்னொரு குழுவை நடிக்கும்படிச் சொல்லவேண்டும். எந்தக் குழு நன்றாக நடிக்கின்றதோ அதற்கு ஆசிரியர் வெகுமதி கொடுக்கலாம். இந்த நடிப்பில் மாணவர்கள் உற்சாகத்துடனும், உணர்ச்சி ததும்பவும், தம் உள்ளத்தில் எழும் உணர்ச்சி வேறுபாடுகளுக்குத் தக்கபடி தம்முடைய குரலை உயர்த்தியும், தாழ்த்தியும் பேசக் கற்றுக்கொள்ளுவார்கள். மாணவர்கள் விரும்பினால் அவர்கள் நடித்த கதைகளை அவர்களின் உதவி கொண்டே ஆசிரியர் நாடக உருவத்தில் எழுதியும் கொடுக்கலாம்.

9. கூட்டு ஆலோசனை (Panel discussion)

ஏதாவது ஒரு தலைப்பை ஒரு குழு மாணவர்களுக்கு முன்னரே ஆசிரியர் அறிவித்துவிடவேண்டும். உதாரணமாக, " படக்

காட்சிக்குச் செல்லுவதால் ஏற்படும் நன்மை தீமைகள்" என்ற தலைப்பைப்பற்றி ஏழு, எட்டாம் வகுப்பு மாணவர்களையும், "சுத்தம் சோறு போடுமா, போடாதா?" என்பதைப் பற்றி 4, 5-ஆம் வகுப்பு மாணவர்களையும் ஆலோசிக்கச் சொல்லலாம். முன்னரே மாணவர்கள் தயாரித்துக்கொண்டு வரவேண்டும். அக் குழு மாணவர் தலைவனையே ஆலோசனைக் கூட்டத் தலைவனாக அமர்த்தவேண்டும். அத்தலைவனுக்கு முன்னால் ஒரு வட்டமான மேசையை நிறுத்தவேண்டும். அதைச் சுற்றி மற்றக் குழு அங்கத்தினர்கள் உட்கார வேண்டும். கொடுக்கப்பட்ட தலைப்பைப்பற்றி முதலில் ஒவ்வோர் அங்கத்தினரும் தமது கருத்துக்களை எடுத்துப் பேசவேண்டும். அவ்வகுப்பைச் சேர்ந்த மற்ற மாணவர்கள் சுற்றித் தூரமாக உட்கார்ந்து எல்லாவற்றையும் அமைதியாகக் கேட்டுக்கொண்டிருத்தல் வேண்டும். குழு அங்கத்தினர்கள் அனைவரும் தங்கள் கருத்துக்களை வெளியிட்ட பின்னர், வகுப்பிலுள்ள மற்ற மாணவர்களும் ஒருவர்பின் ஒருவராகத் தங்கள் கருத்துக்களைச் சொல்லலாம். எல்லோரும் சொல்லி முடித்த பின்னர் மாணவர் தலைவன் எழுந்து தன் முடிவைச் சொல்லவேண்டும். இவ்விதக் கூட்டு ஆலோசனையால் மாணவர்களுக்குத் தங்கள் கருத்துக்களை ஒளிக்காமல் தாராளமாக எடுத்துப் பேசும் மனப்பான்மையும், பழக்கமும் ஏற்படுகின்றன. ஆகையால் மாணவர்களின் வாய்மொழிப் பயிற்சியை அதிகப்படுத்த இதுவும் ஒரு சிறந்த வழியாகும். இங்கும் ஆசிரியர் வழிகாட்டியாக இருந்து முன்சொன்ன மாதிரி பிழைகளைத் திருத்தவேண்டும். தங்கள் கருத்துக்களை மாணவர்கள் பேசும்படிச் செய்யவேண்டுமே தவிர, ஆசிரியர்கள் தங்கள் கருத்துக்களை ஒருபொழுதும் மாணவர்களிடம் திணிக்கக் கூடாது. அங்ஙனம் ஆசிரியர் திணிக்க முயன்றால் மாணவர்களின் ஊக்கம், உற்சாகம், தன்னம்பிக்கை அனைத்தும் கெட்டுப்போய், அவர்கள் பேசவே முன்வரமாட்டார்கள் என்பது நிச்சயம்.

ஏழாம் அத்தியாயம்

# வாசிப்பு

## வாசிப்புக் கற்றுக்கொள்ளுவதன் இன்றியமையாமை :

முற்காலத்தைக் காட்டிலும் தற்காலத்தில் ஒவ்வொருவரும் எழுதப் படிக்கத் தெரிந்துகொள்ளவேண்டிய அவசியம் அதிக மாகியுள்ளது. நமது நாடு, சுய ஆட்சி பெற்றபின் நமது அரசியல் அடிப்படைச் சட்டத்தில் ஒவ்வோர் ஆணும் பெண்ணும் பதினன்கு வயது முடிய அதாவது எட்டாவது வகுப்பு வரை கட்டாயமாகப் படிக்கவேண்டும் என விதிக்கப்பட்டு உள்ளது. இன்னும் அந்த இலட்சியத்தை அடையாவிடினும், நம் நாடு படிப்படியாக அதை நோக்கிச் சென்றுகொண்டு உள்ளது. இன்னும் சிறிது காலத்தில் இந்த இலட்சியத்தை இந்தியா கண்டிப்பாக அடைந்துவிடும் என்பது திண்ணம். இந்தியா சுய ஆட்சி அடைவதற்கு முன்னர் இந்தியாவில் முடி ஆட்சியே நிலவிவந்தது. அப்பொழுது முடிமன்னர்களும், அவர்களிடம் செல்வாக்குப் பெற்றவர்களும் பெரும்பாலும் தங்கள் நலத்திற்காக நாட்டை ஆண்டுவந்தார்களே தவிர, குடிமக்களின் நன்மைகளைக் கருதி ஆண்டார்கள் என்று சொல்லுவதற்கு இல்லை. குடி ஆட்சி வந்த பின்னரோ, வயது வந்த ஆண், பெண் அனைவரும் சட்ட சபைகளுக்கு வேண்டிய பிரதிநிதிகளைத் தாங்களே தேர்ந்தெடுத்துத் தங்களுக்கு வேண்டிய சட்டதிட்டங்களையும், ஆட்சி முறையையும் தாங்களே நிச்சயித்துக்கொள்ளும் சந்தர்ப்பம் கிடைத்துள்ளது. ஆகவே குடிமக்கள் நாள்தோறும் நடக்கும் ஆட்சி முறையைத் தெரிந்துகொள்ளுவதற்காகவும், சட்ட திட்டங்களின் நன்மை, தீமைகளைத் தெரிந்துகொள்ளுவதற்காகவும் படிப்பு அறிவு இன்றியமையாததாக ஆகிவிட்டது. இளமையிலிருந்தே ஒவ்வோர் ஆணும் பெண்ணும் பள்ளிக்குச் சென்று புத்தகங்களைப் படித்துத் தங்கள் வாசிப்புத் திறமையை கட்டாயமாக அதிகப்படுத்திக்கொள்ள வேண்டும்.

## வாசிப்புக் கற்றுக் கொள்வதன் நோக்கங்கள்

படிப்பதன் நோக்கங்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். முன் சொன்ன முறையில் அரசியல் அறிவைப் பெருக்கிக்

கொள்ளுவதற்காகவும், தங்களுக்கு அன்றாட வாழ்க்கைக்கு வேண்டிய கணக்குகளைப் போடுவதற்கும் அவற்றைத் திருப்பிப் படிப்பதற்காகவும், பஞ்சாங்கம் முதலியவற்றைப் படித்தறிவதற்கும், புகைவண்டித் தொடர் செல்லும் காலங்களைக் குறிக்கும் கால அட்டவணையைக் கண்டறிவதற்காகவும் வாசிப்பு அறிவு இக்காலத்தில் இன்றியமையாததாகின்றது. இம்மாதிரியான நோக்கத்துடன் படிக்கும் படிப்பைப் பயன் கருதிய படிப்பு (Functional Reading) எனச் சொல்லலாம்.

இரண்டாவதாக, எந்த வாழ்க்கையில் வாழ்கின்றவனும் தினசரி சிறிது ஓய்வு பெற விரும்புகின்றான். அந்த ஓய்வு நேரங்களில் மதச் சார்பான நூல்களையோ, சிற்றிலக்கியம், பேரிலக்கியங்களையோ புராணங்களையோ படித்து இன்புற விரும்புகின்றான். கிராமங்களிலுள்ள வயது வந்தவர்கள், சாவடிகளிலும், சத்திரங்களிலும், தெருத் திண்ணைகளிலும் ஓய்வு நேரத்தில் இருவர் மூவர் கூடி, தமிழில் எழுதியுள்ள சதகங்கள், இராமாயண, பாரத வசன, செய்யுள் காவியங்களைப் படித்து இன்புறுவதை நாம் கண்கூடாகக் காண்கின்றோம். இவ்வித நோக்கத்திற்காகப் படிப்பதைப் பொழுதுபோக்குப் படிப்பு (Recreation Reading) என்று சொல்லலாம்.

மூன்றாவதாக, வாசிப்புக் கற்றுக் கொள்வதால் ஒருவருடைய மூளையின் திறன் அதிகரிக்கின்றது; சிந்தனா சக்தி வளர்கின்றது; கண் திறமை வளர்கின்றது. வார்த்தைகளுக்கும், சொற்றொடர்களுக்கும் பொருள் தெரிந்துகொள்ளும் திறன் அதிகரிக்கின்றது. உரக்கப் படிப்பதால் இடத்திற்குத் தகுந்தாற்போல் மனிதன் பலவித உணர்ச்சிகளைக் குரல் வழியாகவும், முகத் தோற்றத்தின் வழியாகவும் வேறுபடுத்திக் காட்டும் திறன்கள் உண்டாகின்றன. இவ்வித நோக்கத்தோடு கற்றுக்கொள்ளும் படிப்பை 'திறன்களை வளர்க்கும் படிப்பு' (Developmental Reading) என்று சொல்லலாம்.

### வாசிப்புச் சொல்லிக் கொடுக்கும் முறைகள்

ஆகவே குழந்தைகளுக்கு இளமையிலிருந்தே வாசிப்புக் கற்றுக் கொடுக்க வேண்டியது இன்றியமையாதது. வாசிப்புக் கற்றுக் கொடுப்பதற்கு ஆசிரியர்கள் எம்முறையைக் கையாளுவது? இது ஒரு பெரிய பிரச்னை. குழந்தைகள் எம்முறையின் மூலம் பாடங்களைக் கற்றுக்கொள்ள முயலுகின்றார்களோ அம்

முறையே சிறந்த முறையாகக் கருத வேண்டும். ஒரு பாடம் எவ்வளவு சிறந்ததாக இருந்த போதிலும், அதைக் கற்பிக்கும் முறையால் குழந்தைகளின் விருப்பத்தை ஆசிரியரால் தூண்டி விட முடியாவிட்டால், அப்பாடம் பயனற்றுப் போகும் என்பது திண்ணம். ஆகவே வாசிப்புச் சொல்லிக் கொடுக்கும்பொழுது குழந்தைகளுக்குப் பிடித்தமான முறைகளைக் (Psychological Method) கையாள வேண்டுமே தவிர, தருக்கவாத முறைகளைக் (Logical Method) கையாளுவதால் ஒரு பயனும் இராது.

1. சொற்றொடர் முறை (Sentence Method)

குழந்தைகளுக்குக் கண்ணைக் கவரும் பாடங்களையும், கருத்துக்கு இனிய கதைகளையும் கேட்பதில் பிரியம் அதிகம். முதல் வகுப்பில் அவ்வகுப்புக் குழந்தைகளின் அனுபவத்திற்கு ஒட்டிய காட்சிகள் தீட்டப்பட்ட அட்டைகளை வகுப்பு அறைகளில் தொங்கவிட வேண்டும். உதாரணமாக, ஒரு நாய் பலகாரக் கடைக்குச் செல்லுவதைப் போல் ஒரு படமும், ஒரு காகம் மரத்தில் உட்கார்ந்திருப்பதைப் போல இன்னொரு படமும், நரி திராட்சைக் கொடி மீது தாவுகின்ற மாதிரி மற்றொரு படமும் வரைந்து, அவற்றின் கீழே முறையே "நாய் பலகாரக் கடைக்குச் செல்லுகின்றது" என்றும், "காகம் மரத்தில் உட்கார்ந்திருக்கின்றது" என்றும், "நரி திராட்சைக் கொடி மீது தாவுகின்றது" என்றும் எழுதலாம். வகுப்பிலுள்ள மாணவர்களைப் பல குழுக்களாகப் பிரித்து ஒவ்வொரு குழுவிலுள்ள மாணவர்களையும் முதலில் தனித்தனியாகப் படத்தைப் பார்த்துக் கீழே உள்ள வாக்கியத்தை ஆசிரியர் சொல்லிக் கொடுக்க வேண்டும். அம்மாணவன் படத்திலுள்ள கவர்ச்சியால் உடனே அவ்வாக்கியத்தைப் பிழையின்றித் திருத்தமாகச் சொல்லுவான். இங்ஙனமே அக்குழுவிலுள்ள மாணவர்கள் அனைவருக்கும் தனித் தனிப் பயிற்சி கொடுத்துவிட்டுப் பின்னர் அக்குழு முழுவதையும் சேர்ந்தாற்போல் சொல்லும்படிச் செய்ய வேண்டும். அவ்வகுப்பிலுள்ள ஒவ்வொரு குழுவிற்கும் வகுப்பறையில் மாட்டப்பட்டுள்ள வெவ்வேறு படங்களை வைத்துக்கொண்டு வாசிப்புப் பயிற்சிக் கொடுக்க வேண்டும்.

இங்ஙனமாகப் பல்வேறு படங்கள் மூலம் மாணவர்களுக்கு வாக்கியங்களைச் சொல்லிக் கொடுத்த பிறகு அடுத்த மாதத்திலிருந்து "நாயும் பலகாரக் கடையும்", "நரியும் திராட்சையும்", "காகமும் பாம்பும்" என்ற கதைகள் முழுவதையும் தனித்

தனியே சித்திரிக்கக் கூடிய படங்களை ஆசிரியர்களோ, பெரிய வகுப்பு மாணவர்களைக் கொண்டோ தயார் செய்து அவற்றைப் புத்தக உருவமாகச் செய்யும்படிச் செய்யலாம். வேறு கதைகளுக்கும் இவ்வண்ணமே படப் புத்தகங்கள் செய்து வகுப்புகளில் ஆசிரியர் அவற்றை எப்பொழுதும் நிலையாக வைத்துக் கொள்ளலாம். ஒவ்வொரு குழுவிற்கும் இப்படப் புத்தகங்கள் மூலம் வாசிப்பைச் சொல்லிக் கொடுக்கலாம். படத்தைப் பார்த்தவுடன் குழந்தைகள் பிரியமாக எவ்வித வற்புறுத்தலும் இன்றி அப்படத்திற்குக் கீழே உள்ள வாக்கியங்களை எளிதில் வாசித்து விடுவார்கள். ஏதாவது பிழை இருந்தால் ஆசிரியர் பிறகு மாணவர்களின் ஊக்கத்தைக் குறைக்காத முறையில் திருத்திவிடலாம். படங்களைப் பார்த்துப் படித்த குழந்தைகள் நாளடைவில் படங்கள் இல்லாமலே அவ்வாக்கியங்களைப் படித்துப் பழகிக் கொள்ளுவார்கள். படங்களுடன் பயிற்சி கொடுத்த சில நாட்களுக்குப் பிறகு வாக்கியத்தை மட்டும் கரும்பலகையில் எழுதிப் போட்டு மாணவர்களைப் படிக்கும்படிச் சொல்லவேண்டும். மாணவர்கள் ஏதாவது தவறுதல் செய்தால் அவ்வாக்கியத்திற்கு மேல் அப்படத்தைப் பொருத்திக் காட்ட வேண்டும். இங்ஙனம் மாற்றி மாற்றி மாணவர்களுக்குச் சில நாட்கள் பயிற்சி கொடுத்தால் அவர்கள் விளையாட்டு முறையில் அவ்வாக்கியங்களை எளிதில் கற்றுக் கொள்ளுவார்கள்.

மேலும் சில அட்டைகளில் கொட்டை எழுத்துக்களில், "வெளியே செல்", "விளையாட்டு மைதானத்திற்குச் செல்", "வீட்டிற்குப் போ", "பாடம் எழுது", "கதை சொல்", வணக்கம் செய்", "கதவைத் திற", "கதவை மூடு" என்ற சிறு சொற்றொடர்கள் எழுதிய பின் அட்டைகளைத் தயார் செய்து உரிய காலங்களில் அவற்றை மாணவர்களுக்கு எடுத்துக்காட்ட வேண்டும்; ஒரு தடவை ஆசிரியர் சொல்லி விட்டால் பின்னர் உரிய அட்டைகளைக் காட்டியவுடனே அச் சொற்றொடரில் காணப்படும் செயல்களை உடனே மாணவர்கள் செய்துவிடுவார்கள். உதாரணமாக, மாலையில் கடைசிக் காலம் முடிந்ததும் "மணி அடி" என்ற அட்டையை எடுத்துக் காட்டினால் மாணவர் தலைவன் உடனே சென்று மணி அடித்துவிடுவான். மணி அடித்தவுடன் கால அட்டவணைப்படி ஒரு நாளைக்கு "வீட்டிற்குப் போ" என்னும் அட்டையைக் காண்பித்தால் மாணவர்கள் அனைவரும் வீட்டிற்குப் போய்விடுவார்கள்; "விளையாட்டு மைதானத்திற்குப் போ" என்னும் அட்டையை எடுத்துக் காட்டினால் உடனே அங்கே சென்று

விடுவார்கள். இங்ஙனமே சொற்றொடர் முறையில் மாணவர்கள் வெகு விரைவில் வாசிப்பைக் கற்றுக் கொள்ளுவார்கள்.

2. வார்த்தை முறை (Word Method)

மேற்கண்டபடி சொற்றொடர் முறையில் முதல் வகுப்பு மாணவர்களுக்குச் சில மாதங்கட்கு வாசிப்பு முறை சொல்லிக் கொடுத்த பிறகு, ஒவ்வொரு கதையிலும் வரும் பொருள்களைக் காட்டும் படத்தையும் தனித்தனியே வரைந்து அதற்குக் கீழ் அதற்குரிய வார்த்தையை மட்டும் எழுத வேண்டும். உதாரணமாக, "நாயும் பலகாரக் கடையும்" என்ற கதையைப் படப் புத்தகங்கள் மூலம் சொல்லிக் கொடுத்த பின்னர், அக்கதையில் வரும் சொற்களாகிய நாய், கடை, பாட்டி, பாலம் முதலியவற்றைத் தனித்தனியே படங்களாகத் தீட்டி, அவற்றின்கீழ் உரிய வார்த்தைகளை எழுதவேண்டும். முன் வாக்கியங்களைச் சொல்லிக்கொடுத்த முறையிலேயே வார்த்தைகளையும் சொல்லிக் கொடுக்க வேண்டும். சில நாட்களுக்குப் பின்னர், படங்கள் இல்லாமலே வார்த்தைகளைக் கரும் பலகையில் எழுதிப் போட்டால் மாணவர்கள் வெகு சுலபமாக அவற்றை வாசிப்பார்கள். இம்மாதிரியே ஒவ்வொரு கதையிலுள்ள வார்த்தைகளுக்கும் அட்டைகள் தயாரிக்க வேண்டும். சில அட்டைகளில் பொருள்களின் படங்களைத் தீட்டலாம்; இன்னும் சில படங்களில் சில செயல்களின் படங்களைத் தீட்டி அவற்றிற்கு உரிய வார்த்தைகளைக் கீழே எழுதலாம். உதாரணமாக, "நரியும் திராட்சைக் கொடியும்" என்ற கதையை எடுத்துக்கொள்ளும் இடத்தில் நரி தாவுகின்றதைப் போன்றும், நரி நடக்கின்றதைப் போன்றும் படங்கள் வரைந்து அவற்றின் கீழ் "தாவுகின்றது" என்றும், "நடக்கின்றது" என்றும் எழுதலாம். அப்படத்தைக் காட்டியவுடன் மாணவன் "தாவுகின்றது" என்று வெகு விரைவில் உடனே வாசித்துவிடுவான். பின்னர் அவ்வட்டையோடு "நரி" என்று எழுதப்பட்ட அட்டையைப் பொருத்தி வைத்தால் உடனே "நரி தாவுகின்றது" என்று வாசிப்பான். பின்னர் அட்டைகள் இல்லாமலே வார்த்தைகளைக் கரும்பலகையில் எழுதிப் போட்டால் அவ்வார்த்தைகளைச் சுலபமாக வாசிப்பான். இங்ஙனமாக அட்டைகளையும், வார்த்தைகளையும் மாற்றி மாற்றிக் காட்டிப் பழக்கினால் மாணவர்கள் வெகு விரைவில் வார்த்தைகளைப் படிக்கக் கற்றுக்கொள்ளுவார்கள்.

"உட்கார்", "எழுந்திரு", "ஓடு", "பாடு", "நட" என்ற உத்தரவுகள் எழுதப்பட்ட அட்டைகள் தயார்செய்து மாணவர் களிடம் காட்டி அச்செயல்களைச் செய்யும்படிச் செய்தால் வெகு விரைவில் இவ்விதமான வார்த்தைகளை விளையாட்டு முறையில் கற்றுக்கொள்ளுவார்கள். இவ்வித "வார்த்தை முறையில்" (Word Method) 1957-ஆம் ஆண்டு டிசம்பர் 25-ஆம் தேதி சென்னை அரசாங்கத்தார் I முதல் VII வகுப்புக்களுக்கு வெளியிட்டுள்ள பாடத் திட்டத்தில் கண்டுள்ளபடி I-ஆம் வகுப்பு மாணவர்கள் தங்கள் பேச்சில் ஏற்கனவே வழங்கிவரும் சுமார் 300 வார்த்தை களையும் நன்ருகப் படிக்கக் கற்றுக்கொள்ளுவார்கள்.

### 3. பார்த்துச் சொல்லும் முறை (Look and say)

குழந்தைகள் படங்களைப் பார்த்து அவற்றில் உள்ளவற்றைத் தெரிந்துகொள்ளுவதற்கு ஆசைப்படுவார்கள். அப்படங்களி லுள்ள உருவங்கள், பொருள்கள் எவற்றைக் குறிக்கின்றன என்பதைப் பெரியோர்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ளுவதற்கு ஆவல் கொள்ளுவார்கள். "இப்படத்தில் என்ன அப்பா சொல்லி இருக்கின்றது?" என அப்பாவையோ, அண்ணனையோ, அக்காளையோ ஒரு குழந்தை கேட்கும். அப்பொழுது தகப்ப ஞரோ, மற்றவரோ அப்படத்தை விவரிக்கும் கதையை அப்புத்த கத்திலிருந்து படித்துக் காட்டிஞல், குழந்தை தானும் படிக்கக் கற்றுக்கொண்டால் கதையைத் தெரிந்துகொள்ளலாம் என்று ஆவலுறுவது இயற்கை. ஆகவே, ஆசிரியர்கள் ஒரு மாணவனைப் பார்த்து, "இதோ உள்ள படத்தைப் பார்த்துக் கீழே என்ன எழுதி இருக்கின்றது என்பதைச் சொல்" என்ருல் வெகு வேகமாக "நாய்" என்று சொல்லிவிடுவான். மேலும் ஆசிரியர் முதலாம் வகுப்பு மாணவர்களை வெளியில் அழைத்துச் சென்று சில பொருள்களைக் காட்டி அவைகளின் பெயர்களைக் கேட்கலாம். உதாரணமாக, கைகாட்டி மரங்களைக் காட்டி, "கைகாட்டி மரம்" என்று எழுதப்பட்டுள்ள அட்டையை அதன் கீழே தொங்கவிட்டு இது கைகாட்டி மரம் என்று சொல்லிக் கொடுக்கலாம். இதே மாதிரி மாணவர்களுக்கு விளையாட்டு மூலமாகப் பல பொருள்களைக் காட்டி அவற்றின் பெயர்களைச் சொல்லலாம். பின்னர் வகுப்பிற்குத் திரும்பியவுடன் மாணவர் களுக்குக் காட்டிய பொருள்களின் படங்களை வரைந்து அவற் றின் பெயர்களைக் கீழே எழுதி, "படத்தைப் பார்த்துக் கீழே எழுதியுள்ளவற்றைச் சொல்" என்ருல் உடனே மாணவர்கள்

சொல்லிவிடுவார்கள். ஆகவே படங்களின் மூலமும், பொருள்களின் மூலமுமாக இவ்வித முறையில் வாசிப்பைக் கற்றுக் கொடுக்கும் முறைக்கே "பார்த்துச் சொல்லும் முறை" எனப் பெயர்.



கைகாட்டி மரம்



தந்திக்கம்பம்

4. எழுத்து முறை (Alphabetical Method):

இது நம் நாட்டில் கையாளப்பட்ட பழைய முறை. முதன் முதலில் ஏட்டுச் சுவடியில் 'அ'கர வரிசை முதல் 'ன'கர வரிசை வரையிலுள்ள எழுத்துக்களை ஒன்றன்பின் ஒன்றாக வாசிக்கக் கற்றுக்கொடுத்து வந்தார்கள். இவ்விதமாக எல்லா எழுத்துக்களையும் மாணவர்கள் கற்றுக்கொண்ட பின்னரே, அவர்களுக்கு எழுத்துக்களால் ஆகிய பதங்களைக் கற்றுக் கொடுத்தார்கள். பதங்களைப் படிக்கக் கற்றுக்கொண்ட பின்னர், அம்மாணவர்களுக்கு வாக்கியங்களைப் படிக்கக் கற்றுக் கொடுக்கவும், அதன் பின்னர் வசன காவியங்களையும், செய்யுள் காவியங்களையும் படிக்கக் கற்றுக் கொடுத்தார்கள். இதையே யுக்திவாத முறை (Logical method) என்றும் சொல்லுவார்கள்.

5. மேற்சொன்ன முறைகளின் நிறைகளும் குறைகளும்

வாக்கிய முறையை மாணவர்களின் மனநிலைக்குத் தகுந்த முறை (Psychological Method) என்று சொல்ல வேண்டும். 5 வயது பூர்த்தியாக ஆன பின்புதான் ஒரு மாணவன் முதலாம் வகுப்பில் சேர்க்கப்படுகின்றான். அதற்குள் அம்மாணவன் தாய்

மொழியில் பெரும்பாலும் நன்குகப் பேசப் பழகிக் கொள்ளுகின்ருன். தன் செயலைப் பற்றியும், சூழ்நிலைகளில் உள்ள பொருள்களைப் பற்றியும் நிகழ்ச்சிகளைப் பற்றியும் பேசக் கூடிய வார்த்தைகள் அவனுக்கு நன்கு தெரியும். அவன் இளமையில் பெற்றேர்களிடமிருந்தும், மற்றவர்களிடமிருந்தும் வாக்கியங்களாகப் பேசவே கற்றுக்கொண்டு உள்ளான். பாட்டியின் மூலம் பல கதைகளைச் செவிவழியாக வாக்கியங்கள் மூலமாகவே கேட்டு உள்ளான். இப்படிப்பட்ட மாணவன் முதலாம் வகுப்பில் சேர்க்கப்பட்டவுடனே, அவன் இளமையில் பழக்கப்பட்ட மாதிரியே, அவன் மனநிலைக்குத் தகுந்தாற் போல், படங்கள் மூலமும் கதைகள் மூலமும், வாக்கியங்களைக் கொண்டு சொல்லிக் கொடுப்பதுதான் நல்ல முறை. அம்முறையால் ஒரு மாணவன் மிக ஆர்வத்தோடு வாசிக்கக் கற்றுக் கொள்ளுவான் என்பது நிச்சயம்.

குறை

இங்ஙனமாக ஒரு மாணவன் வாக்கியங்கள் மூலம் ஓர் ஆண்டு முடிவிற்குள் பெரும்பாலான வார்த்தைகளைப் படிக்கக் கற்றுக்கொண்ட பின்னர் ஓர் ஆண்டிற்குள் தமிழ் எழுத்துக்கள் அனைத்தையும் படிக்கவும் கற்றுக்கொள்ளுவான் என்பது நிச்சயம். பழைய முறைப்படி முதலில் எழுத்து, பின்பு பதம், பின்னர் வாக்கியங்கள் ஆகியவற்றைக் கற்றுக்கொள்ளாமல், முதலில் இயற்கையாக வாக்கியங்களையும், பின்பு பதங்களையும், பின்னர் எழுத்துக்களையும் கற்றுக்கொள்ளுகின்ருன். இது தான் தாய்மொழியை வாசிக்கக் கற்றுக்கொள்ளுவதற்குப் பொருத்தமான முறை எனப் பல ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்ருர்கள்.

ஆனல் சிலர் முதலில் வாக்கியங்களையும், பின்பு பதங்களையும், பின்னர் எழுத்துக்களையும் வாசிக்கக் கற்றுக்கொள்வதால் மாணவர்களுக்குத் தமிழ் எழுத்துக்களை முறையாகவும், வரிசையாகவும் எழுதத் தெரியாது எனக் குறை கூறுகின்ருர்கள். இக்குறை ஒரு பெருங்குறை என்று கூறுவதற்கு இல்லை. வாக்கிய முறையைக் கையாளுகின்ற ஆசிரியர்கள் இம்முறை மூலம் முதலாம் வகுப்பில் பெரும்பாலான காலத்திற்கு இங்ஙனம் வாசிப்புக் கற்றுக்கொடுத்த பின்னர், தமிழ் எழுத்துக்களை அகர வரிசையாக மாணவர்களுக்கு எழுதிக் காண்பித்தால் வெகு சுலபமாக அவற்றை உடனே எழுதிப் பழகிக்கொள்ளுவார்கள்.

வாக்கியத்தின் மூலம் சொல்லிக் கொடுப்பதால் படத்தைப் பார்த்துக் குருட்டுத்தனமாக "நாய் ஓடுகிறது", "நரி ஓடுகின்றது" என மாணவர்களுக்குப் படிக்கத் தெரியுமே தவிர, தனித் தனிப் பதங்களைப் பிரித்துக் கரும்பலகையில் எழுதிப்போட்டால் அவர்களுக்குப் படிக்கத் தெரியாது; அதனால் இம்முறை நல்ல தல்ல என்று சொல்லுகின்றனர்கள். இக்குறை, வாக்கிய முறை யைக் கையாளும் ஆசிரியர்களால் ஏற்படுவதே தவிர இம்முறை யால் ஏற்படுவதல்ல. ஏனென்றால் வாக்கிய முறை மூலம் வாசிப் புக் கற்றுக் கொடுக்கும் ஆசிரியர்கள் அங்ஙனம் முதலாம் வகுப்பில் சில மாதங்கள் கற்றுக்கொடுத்த பின்னர் அவ்வாக்கி யங்களிலுள்ள தனிப் பதங்களை எடுத்துக் கரும்பலகையில் எழுதி மாணவர்களைப் படிக்கச் சொன்னால் கண்டிப்பாகச் சரி யாகப் படிப்பார்கள். இதற்கு ஆசிரியர்கள் மாணவர்களுக்குத் தனியாகவும், குழுவாரியாகவும் ஆழ்ந்த பயிற்சி (Intensive drilling) கொடுக்க வேண்டும்.

அடுத்தபடியாக, வாக்கிய முறை மூலம் வாசிப்புக் கற்றுக் கொடுப்பதால் மாணவர்கள் தமிழ் எழுத்துக்களைத் தனித் தனியாக உச்சரிக்கச் சொன்னால் பிழையாகத்தான் உச்சரிப் பார்கள் எனச் சிலர் குறை கூறுகின்றனர்கள். இக்குறையும் பெரும் பாலும் இதற்கு முன் பத்தியில் சொன்ன குறை மாதிரிதான். முதலாம் ஆண்டுக் கடைசியில் அங்ஙனம் பிழைபட உச்சரிக்கும் மாணவர்களுக்குத் தனித் தனிப் பயிற்சி கொடுக்கவேண்டும். ஆங்கில மொழியில் ஒரே எழுத்திற்கு ஒரு பதத்தில் ஓர் உச்ச ரிப்பும், இன்னொரு பதத்தில் அதே எழுத்திற்கு வேறு உச்சரிப் பும் இருக்கும். அவ்வித ஆங்கில எழுத்துக்களின் உச்சரிப்பைத் தனித் தனியாகச் சொல்லிக் கொடுத்தால்தான் அம்மொழியில், ஒரே எழுத்துக்குரிய பலவித உச்சரிப்புக்களை மாணவர்கள் அவை இருக்கும் இடங்களுக்குத் தகுந்தாற்போல் கற்றுக்கொள்ளு வார்கள்; இப்படிப்பட்ட உச்சரிப்புத் துன்பங்கள் இருக்கும் ஆங்கில மொழியில்கூட முதலில் வாக்கிய முறையில்தான் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்றும், அம்முறையின் மூலம் வாசிப்புக் கற்றுக்கொண்ட மாணவர்கள், ஒரே எழுத்தின் ஒலிக்குறிப்பு வேறுபாடுகளை நாளடைவில் கற்றுக்கொண்டு விடுவார்கள் என்றும் மேனாட்டு அறிஞர்கள் கருதுகின்றனர்கள். நம் தமிழ் மொழியிலோ அப்படிப்பட்ட உச்சரிப்புத் துன்பமே இல்லை. "கழுதை" என்ற வார்த்தையில் 'க' என்ற எழுத்திற்கு

இருக்கும் ஒரே உச்சரிப்புத்தான் 'கடல்','கரி', 'கருப்பூரம்' என்ற பதங்களிலுள்ள 'க' என்ற எழுத்துக்களுக்கும் உண்டு.

நம் தமிழ் மொழியைப் பொறுத்த மட்டில் 'ல' 'ள' 'ழ' எழுத்துக்களின் உச்சரிப்பைச் சில மாணவர்களுக்கு உச்சரிக்கத் தெரியாது என்பது யாவரும் அறிந்ததே. 'ன'கர 'ண'கர 'ந' கரங்களிலுள்ள உச்சரிப்பு வேறுபாடுகளிலும் 'ற'கர 'ர'கரங்களிலுள்ள வேறுபாடுகளிலும் சில மாணவர்கள் இடர்ப்படுவார்கள் என்பது உண்மை. வாக்கியமுறை மூலம் சொல்லிக் கொடுக்கும்பொழுது இவ்வித இடர்ப்பாடுகள் அடையும் மாணவர்களை மட்டும் ஆசிரியர் கூர்ந்து கவனித்து, அவர்களுக்குத் தனியாகப் பயிற்சி கொடுத்தால் கண்டிப்பாக அவர்கள் அவ்வொலி வேறுபாடுகள் உள்ள பதங்களைப் பிழையின்றி வாசிக்கக் கற்றுக்கொள்ளுவார்கள்.

அவ்விதமான மாணவர்களுக்கு மேற்கண்ட ஒவ்வோர் எழுத்தும் தனித் தனியாக வரக்கூடிய வார்த்தைகளைக் கொண்ட வாக்கியங்களைப் படிக்கும்படி பயிற்சி கொடுத்தால் அம்மாணவர்கள் அவற்றை நன்கு வாசிக்கக் கற்றுக்கொள்ளுவார்கள். ஒரே வாக்கியத்தில் மூன்று விதமான 'ல' கரம், 'ள'கரம், 'ழ'கரம் வரக்கூடிய வார்த்தைகளை உபயோகிக்கக்கூடாது. ஒரே எழுத்து ஊடே அடிக்கடி வரக்கூடிய பல பதங்கள் கொண்ட பல வாக்கியங்களை அமைத்து ஆசிரியர் பயிற்சி கொடுக்க வேண்டும். இங்ஙனம் ஒவ்வோர் எழுத்திற்கும் தனித்தனிப் பயிற்சி கொடுத்தால் மாணவர்கள் கண்டிப்பாக ஒலி வேறுபாடுகளைக் கற்றுக்கொள்ளுவார்கள்.

உதாரண வாக்கியங்கள் :

1. அறச்சாலை பக்கலில் குறவனும் குறத்தியும் கூடை முடையக் கண்டேன்.

2. கன்றைக் கண்ட ஆ கதறிற்று.

3. இடையன் கதவைத் திறந்து பால் கறந்தான்.

மேற்கண்ட வாக்கியங்களில் 'ற' கரம் மட்டும் அடிக்கடி உபயோகப்படுத்தப்பட்டு உள்ளது. 'ர' கரம் வரவில்லை. இம்மாதிரி மேலே காட்டப்பட்ட எழுத்துக்கள் அனைத்திற்கும், காட்டப்பட்ட உதாரண வாக்கியங்களைப் போன்று பல வாக்கியங்களை அமைத்து ஒவ்வோர் எழுத்திற்கும் தனித்தனியான நாட்களிலோ

அல்லது வாரங்களிலோ பயிற்சி கொடுத்தால் எந்த மாணவனும் கற்றுக்கொள்ளுவான் என்பது திண்ணம்.

ஆனால் இவ்விதப் பயிற்சி கொடுக்கும் ஆசிரியர்கள் கீழ்க் கண்டவற்றைக் கருத்தில் கொள்ளவேண்டும். முதலாம் வகுப் பின் ஆரம்பத்திலேயே இவ்விதப் பயிற்சி கொடுக்கக் கூடாது. முதலாம் வகுப்பின் இறுதியில்தான் இவ்வித ஆழ்ந்த பயிற்சி கொடுக்க வேண்டும். ஆரம்பத்திலேயே இவ்விதம் அந்த மாணவர்களைத் திருத்த ஆரம்பித்தால் அவர்களுக்குத் தாங்கள் படிப்பதெல்லாம் பிழைதான் என்ற ஒருவிதத் தாழ்வு மனப்பான்மை (Inferiority complex) உண்டாகி அவர்களுடைய உற்சாகம் குன்றிப்போகும். உற்சாகம் குன்றிப்போனால் அவ்வித மாணவர்களுக்குப் பின்பு படிப்பதில் பலவித இடர்ப்பாடுகள் ஏற்பட்டுவிடலாம். மேலும் அவ்வித மாணவர்களைத் திட்டியோ, கோபித்துக்கொண்டோ திருத்தக்கூடாது. அடிக்கடி அம்மாண வர்களை ஆசிரியர்கள் ஊக்குவித்துக்கொண்டே இருக்கவேண்டும். இவ்விதத் தாய்மை உள்ளத்தோடு ஆசிரியர்கள் அவ்வித மாண வர்களை அணுகினால் அவர்கள் வாசிப்பதில் இவ்விதக் குறைபாடு களைக் கண்டிப்பாக நாளடைவில் திருத்திக்கொள்ளுவார்கள்.

முதலில் மாணவர்களை எழுத்துக்களைப் படிக்கச்செய்து பின்பு பதங்களையும், பின்னர் வாக்கியங்களையும் கற்றுக்கொடுப் பது யுக்திவாத முறைக்கு (Logical Method) ஒக்குமே தவிர, மனத்தத்துவ முறைக்குச் (Psychological Method) சிறிதும் பொருந்தாது. நவீன காலத்தில் உள நூலார்கள், கல்வி கற்றல் குழந்தைகளின் மன நிலைக்குத் தகுந்தாற் போல (Child-centred) இருக்க வேண்டுமே தவிரப் பாடத்திற்குத் தகுந்தாற்போல் (Subject-centred) குழந்தைகளின் மனங்களைச் சிதற அடிக்கக் கூடாது எனக் கருதுகின்றார்கள். முதலாம் வகுப்பிற்கு வரும் குழந்தைகள் ஊக்கம், உற்சாகம், சுதந்திர உணர்ச்சி ஆகிய குணங்கள் நிறைந்தவர்கள். அவர்களைக் கைகால்களை முடக்கி, ஒருவித ஆர்வமும் இல்லாமல் முதலில் 'அ'விலிருந்து 'ன்' வரையில் படிக்கக் கற்றுக் கொடுத்தால் அவர்களுக்குப் படிப்பதில் ஊக்கமோ, உற்சாகமோ இராது. ஊக்கம் இல்லாத குழந்தைகளுக்கு ஆசிரியர்கள் வற்புறுத்திச் சொல்லிக் கொடுத் தால் அக்குழந்தைகளின் உள்ள நிலை கெட்டுவிடும். உள்ளம் கெட்டால் பின்னர் அக்குழந்தைகளுக்குப் படிப்பதில் வெறுப்புத் தட்டிவிடும். இவ்வித வெறுப்பு நிலையைப் பல குழந்தைகளி

டத்தில் ஆரம்ப வகுப்புக்களில் நாம் காண்கின்றோம். அதனல் பல குழந்தைக்ள் வாழ்க்கையில் கெட்டுப் போகின்றார்கள் என்பது கண்கூடு. ஆகவே முதலில் "எழுத்து முறையை" ஆரம்பிப்பது குழந்தைகளுக்குச் சிறிதும் ஒவ்வாதது. முதலில் படங்கள் மூலமும், விளையாட்டுக்கள் மூலமும் பார்த்து வாக்கியங்களாகச் சொல்லச் சொல்லி, பின்பு பதங்களையும், பின்னர் ஆண்டு முடிவில் தமிழ் எழுத்துக்களின் வரிசைகளையும் வாசிக்கக் கற்றுக் கொடுத்தலே சிறந்த முறையாகும்.

வாசிப்புச் சொல்லிக் கொடுக்கப் பயன்படுத்தப்படும் துணைப் பொருள்கள்

துணைப் பொருள்கள் (Teaching Sides) வைத்துக்கொண்டு எந்தப் பாடத்தையும் சொல்லிக் கொடுத்தால்தான் மாணவர்கள் அப்பாடங்களைச் சிரமமின்றிக் கற்றுக்கொள்ளுவார்கள். வாசிப்புச் சொல்லிக் கொடுப்பதற்கு உரிய உதவிச் சாமான்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். ஒன்று, படிக்கும் படங்கள் (Reading Charts). இரண்டு, தனித்தனி வேலைக்கு உதவும் பொருள்கள். மூன்று, அடிக்கடி உபயோகப்படுத்தப்படும் வார்த்தைகள் எழுதப்பட்ட பட்டியல்.

1. படிக்கும் படங்கள்

(அ) கதைப் படங்கள்: முன்னரே கூறிய மாதிரி "நரியும் திராட்சையும்" என்ற கதை அடங்கிய அட்டைகள் பல தயாரித்தல்; அவற்றை வரிசையாக வகுப்புக்களில் மாட்டி வைத்தல்; முதலில் ஒவ்வொரு படத்தையும் பார்த்து அதன் கீழ் உள்ள வாக்கியங்களைப் படிக்கச் சொல்லல். பின்பு படங்களைக் கையால் மறைத்துக்கொண்டு வாக்கியங்களை மட்டும் படமாக்கச் சொல்லுதல்; பின்னர் வாக்கியங்களை மட்டும் கரும் பலகையில் எழுதி அவற்றைப் படிக்கும்படிச் சொல்லுதல்.

(ஆ) வாக்கிய அட்டைகள்

சில செயல்கள் செய்யக்கூடிய படங்களையும், அவற்றின் கீழ் அச்செயல்கள் இன்னவை என்று எழுதப்பட்ட அட்டைகளையும் பயன்படுத்தி வாசிப்புப் பழக்கம் ஏற்படுத்தல்.

உதாரணம்:



இவன் பந்தை உதைக்கின்றான்.



இவள் மாம்பழம் சாப்பிடுகிறாள்.



இவன் புத்தகத்தைப் படிக்கின்ருன்.

(இ) விளம்பர அட்டைகள் (Notice Boards)

| |
|---|
| இன்று மாலை விளையாட்டு இல்லை |

மாலை கடைசி மணி அடிப்பதற்கு 5 நிமிடங்களுக்கு முன்னர் இம்மாதிரி அட்டைகளைப் பொது இடத்தில் ஒட்டிவிட்டால் மாணவர்கள் இவ்வாக்கியங்களை வெகு விரைவில் கற்றுக் கொள்ளுவார்கள். இம்மாதிரியே ஆசிரியர் தமது யுக்தியால் பல அட்டைகளைச் செய்யலாம்.

| |
|---|
| சனி ஞாயிறு விடுமுறை |

(ஈ) கட்டளை அட்டைகள்

உட்கார்

எழுந்திரு

தாண்டு

இடதுபுறம் திரும்பு

வலதுபுறம் திரும்பு

ஓடு

என்ற அட்டைகளைக் காட்டி மாணவ மாணவிகளுக்குக் கட்டளையிட்டால் இவ்வட்டைகளிலுள்ள வாக்கியங்களை வெகு விரைவில் கற்றுக்கொள்ளுவார்கள்.

(உ) விலாசச் சீட்டுகள்

இராமன்

கந்தன்

மீனாட்சி

சாந்தாதேவி

என்ற பெயர்களை அட்டைத் துண்டுகளில் எழுதி மாணவ மாணவிகளிடம் கொடுத்து உரியவர்களிடம் கொடுக்கும்படிச் சொன்னால், இப்பெயர்களை விளையாட்டாகக் கற்றுக்கொள்ளுவார்கள்.

2. தனித்தனி வேலைக்கு உதவும் உதவிகள்

(அ) ஒவ்வொரு மாணவனிடமும் இரண்டு பெட்டிகள் கொடுத்துவிட வேண்டும். ஒரு பெட்டியில் தனித்தனியாக வார்த்தைகள் எழுதப்பட்ட துண்டு அட்டைகள் இருக்கவேண்டும். மற்றோர் அட்டையில் அவ்வார்த்தைகளுக்குப் பொருத்த

மான படங்கள் இருக்க வேண்டும். மாணவனை அவனுக்கு முன்னால் படம் எழுதப்பட்ட அட்டையை ஒரு பெட்டியிலிருந்து எடுத்து வைத்து, அதன் கீழ் அப்படத்திற்குத் தகுந்த வார்த்தை உள்ள அட்டையை எடுத்துப் பொருத்தும்படிச் சொல்ல வேண்டும். இங்ஙனமாக ஆரம்ப நிலையில் வாசிப்பு முறையைப் பின்பற்றலாம்.

உதாரணம் :



எருமை



பசு



நாய்

(ஆ) மேற்கூறியவாறு பழக்கப்பட்ட பின்னர், தனித் தனி எழுத்துக்கள் எழுதப்பட்ட அட்டைகளை மற்றொரு பெட்டியிலிருந்து எடுத்து, உரிய படத்திற்குக் கீழ் எடுத்து வரிசையாக வார்த்தைகளாக வைக்கும்படிச் செய்து படிப்புச் சொல்லிக் கொடுக்கலாம்.

(இ) வகுப்பு, தோட்டம் முதலிய இடங்களிலுள்ள பொருள்களுக்குத் தகுந்தாற்போல் தனித்தனி வார்த்தைகள் எழுதப்பட்ட துண்டு அட்டைகளை ஒரு மாணவனிடம் கொடுத்து விடவேண்டும். இன்னொரு மாணவனை அப்பொருளிடம் சென்று நிற்கச் சொல்ல வேண்டும். உடனே முதல் மாணவன் அப்பொருளின் பெயர் எழுதப்பட்ட அட்டையை எடுத்து அப்பொருளில் பொருத்தி வைப்பான். உதாரணமாக, மாணவன் 'மணி'யின் பக்கத்தில் நின்றால் 'மணி' என்று எழுதப்பட்ட அட்டையை எடுத்து, அம் மணியில் பொருத்தவேண்டும்; செடியின் பக்கத்தில் நின்றால் செடி என்று எழுதப்பட்ட அட்டையை அங்குக் கொண்டு ஒட்டுவான்.

(ஈ) இம்மாதிரியே ஒலி வேறுபாடுகள் உள்ள 'ற' 'ர'; 'ன', 'ண' 'ந'; 'ல' 'ள' 'ழ'; 'ஜ' 'ஸ' 'ஷ'; 'ங' 'ஞ' ஆகிய எழுத்துக்கள் மட்டும் எழுதப்பட்ட அட்டைகளை மாற்றி மாற்றி மாணவர்களுக்குக் காண்பித்து, அவற்றை நன்கு வாசிக்கவும், உச்சரிக்கவும் செய்யலாம்.

இப்படியே ஆசிரியரின் ஊகத்தாலும், சாமர்த்தியத்தாலும் ஒவ்வொரு மாணவனுக்கும் தனித்தனியாகவோ, குழுமுறையாகவோ வாசிப்பை மிக எளிதாகக் கற்றுக் கொடுக்கலாம்.

3. அடிக்கடி பயன்படுத்தப்படும் வார்த்தைகள் எழுதப்பட்ட பட்டியல்

வார்த்தைகளை மாணவர்கள் அன்ருட வாழ்க்கையில் பயன்படுத்தும் வார்த்தைகள் என்றும், சிற்சில சமயங்களில்தான் பயன்படுத்தும் வார்த்தைகள் என்றும் இருவகைகளாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு வகுப்பிற்கும் இப்படிப்பட்ட வார்த்தைகள் அடங்கிய பட்டியல்களைத் தயாரித்து, வகுப்புக்களில் தொங்க விடும்படிச் செய்யலாம். இவ்வாறு கொடுக்கப்பட்ட சொற்களில் நாள்தோறும் வழங்கப்படும் சொற்களை மாணவர்கள் சொற்ருெடர்களில் வைத்துப் பேசவோ, எழுதவோ பழக்கப்பட வேண்டும். சில வார்த்தைகள் இலக்கியப் பாடங்களில் மட்டுந்தான் எடுத்தாளப்பட்டு வரும். அவ்விதம் உள்ள வார்த்தைகளைச் சிற்சில சமயங்களில்தான் மாணவர்கள் படிக்கும்படி நேரிடும்; அவற்றின் பொருள்களை அவர்கள் அறிந்தால் போதும்.

மேற்கண்ட முறைகளில் வாசிப்புச் சொல்லிக் கொடுத்த பிறகு, முதலாம் வகுப்பில் மேற்சொன்னபடி சொல்லிக் கொடுக்கப்பட்ட வார்த்தைகள் அனைத்தையும் வரிசையாகத் தடித்த எழுத்துக்களில் ஓர் அட்டையில் எழுதி வகுப்பில் தொங்கவிட்டால் மாணவர்கள் படங்களின் உதவி இல்லாமலே இவ்வார்த்தைகளைப் பார்த்துப் படிக்கக் கற்றுக்கொள்ளுவார்கள். முதல் வகுப்பு முடிவதற்குள், மாணவர்களின் தினசரி வாழ்க்கையில் பயன்படுத்தும் வார்த்தைகள், வாக்கியங்கள் ஆகியவற்றை இங்ஙனம் அட்டைகளில் எழுதித் தொங்கவிட்டால் தமிழ் எழுத்துக்கள் அனைத்தையும் நன்கு உச்சரிக்கவும், படிக்கவும் மாணவர்கள் கற்றுக் கொள்ளுவார்கள்.

அவற்றைச் சொற்ருெடர்களில் பயன்படுத்த வேண்டியதில்லை. முன்னரே குறிப்பிட்டபடி இம்மாதிரியான வார்த்தைகள் வகுப்பிற்குத் தகுந்தாற்போல் பிரித்து எழுதப்பட வேண்டும்.

வாய்விட்டுப் படித்தல்

படித்தலில் இரு வகை உண்டு. ஒன்று, வாய்விட்டுப் படித்தல்; மற்ருென்று, வாய்க்குள் படித்தல். மக்கள் சாதாரணமாக

மற்றவர்களோடு பேசுங்கால் வாய்விட்டுப் பேசுகின்றார்கள். அதே மாதிரி அவர்கள் பெரும்பாலும் புத்தகத்தைப் படிக்கும் பொழுதும் உரக்கப் படிக்கவே விரும்புகின்றார்கள். குழந்தை களும், இளைஞர்களும் முதலில் உரத்துப் படிக்க விரும்பு கின்றார்கள். புத்தகங்களைப் படித்தலை, 'ஒருவரே பேசும் உரை யாடல்' என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். வாய்விட்டுப் படிக்கும்பொழுது மூன்றுவித வேறுபாடுகளை நாம் காணலாம். அவையாவன - ஒன்று, சொற்றொடர்களையோ, சொற்களையோ, எழுத்துக்களையோ கண்ணைப் பாய்ச்சிப் பார்த்தல்; பின்னர் அவற்றைப் படித்தல்; மூன்றாவது, அவற்றின் பொருள்களை உணர்தல் என மூன்று ஆகும். இளைஞர்களுக்கு வாசிப்பில் அடிக்கடி பயிற்சி கொடுத்தால் இம்மூன்றுவிதச் சக்திகளும் வளர்ச்சியடையும் என்பது திண்ணம்.

வாய்விட்டுப் படித்தலால் ஏற்படும் நன்மைகள்

உரக்கப் படித்தலால் ஒலிக் கருவிகளாகிய உதடு, நாக்கு, அண்ணம், பல் முதலிய உறுப்புக்கள் உரம் பெறுகின்றன. மந்தமான புத்தியுடையவர்கள் பாடங்களை உரக்கப் படித் தால் அவ்வொலி அவர்கள் காதுகளின் வழியாக மூளைக்குள் நுழைந்து, அவற்றின் பொருள்களை அழுத்தமாகவும், திருத்த மாகவும் புரிந்துகொண்டு, நினைவிலும் நெடுநாட்களுக்கு வைத் துக் கொள்ளுகின்றார்கள். உரக்கப் படித்தலால் கடினமான வார்த்தைகளையும், ஒலி வேறுபாடுகள் உள்ள எழுத்துக்களையும் உச்சரிக்கக் கற்றுக் கொள்ளுகின்றார்கள். உணர்ச்சி ததும்பப் படிக்கப்பட வேண்டிய உரைநடைப் பகுதிகளையோ, பாட வேண்டிய செய்யுட் பகுதிகளையோ உரக்கப் படித்தால்தான் அவற்றின் பொருள் நன்கு விளங்கும். மற்றவர்களுக்குப் பாடங் களைப் படித்துக் காட்ட விரும்புகின்றவர்கள் உரக்கப் படித்தால் தான் கேட்கின்றவர்களுக்கும் உற்சாகம் ஏற்படும். சிலர் ஆரம்ப வகுப்புக்களில்தான் உரக்கப் படிக்க வேண்டும், மற்ற வகுப்புக் களில் படிக்க வேண்டியதில்லை என்று நினைக்கின்றார்கள். பெரிய வகுப்புக்களிலும் உரக்கப் படித்தலில் ஆசிரியர்கள் பயிற்சி கொடுக்க வேண்டும். அப்பொழுதுதான் உரக்கப் படித்தலால் ஏற்படும் நன்மைகளைப் பெரியவர்களும் அடைய முடியும். மாண வர்கள் உரக்கப் படிக்கும்பொழுது உச்சரிப்பில் அவர்கள் செய்யும் பிழைகளை ஆசிரியர்கள் நன்கு அறியமுடியும். அங்ஙனம் ஆசிரியர்கள் அறிந்தால்தான் அப்பிழைகளை அவர்கள் திருத்த முடியும்.

வாய்விட்டுப் படித்தலில் உள்ள குறைகள்

*உரக்கப் படித்தலால் மூச்சு அதிகமாகச் செலவழிக்கப்படு கிறது. இதனல் விரைவில் களைப்பு ஏற்பட்டு அதிகமாகப் படிக்க முடியாது. உரத்துப் படிக்கும்பொழுது சப்தம் ஒன்றையே கருதிப் படிப்பார்கள். ஆகையால் படிப்பதில் உள்ள பொருளை உணராமலும் சென்றுவிடுவார்கள். ஒரு வகுப்பில் ஒரே சமயத் தில் ஒருவர்தாம் உரத்துப் படிக்கலாம். பலர் சேர்ந்து உரத்துப் படிக்க முடியாது. இதனல் வகுப்பிற்குள் அமைதிக்குப் பங்கம் ஏற்படும். உரத்துப் படிக்கும்பொழுது பிறர் தங்கள் வாசிப்பில் குறைகண்டு விடுவார்கள் என்ற அச்சம் மாணவர்களுக்கு இருந்துகொண்டே இருக்கும். ஆதலால் அவர்கள் வேகமாகப் படிக்க முடியாது. மேலும் வார்த்தைகளை நன்ருக உச்சரித்துப் படிப்பதிலேயே கவனம் அதிகமாகச் செலுத்த வேண்டி இருப்ப தாலும் வேகமாகப் படிக்க முடியாது.*

வாய்க்குள் படிப்பு

*ஆரம்பத்தில் சிறுவர்கள் வாய்விட்டுப் படிக்கத்தான் விரும்புகின்ருர்கள் என்பது உண்மை; என்ருலும் நாளடைவில் அவர்களுக்கு வாய்க்குள் படித்தலிலும் பயிற்சி கொடுக்க வேண் டியது அவசியமாகும். படிப்பதில் படிப்பவர்களுக்கு அநேக நன்மைகள் ஏற்படுவதால் மூன்ரும் வகுப்பிலிருந்து இதில் மாண வர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். சில மாணவர்கள் உரத்துப் படித்தலையே விரும்புவார்கள். அவர்களைக் கண்டு பிடித்து வாய்க்குள் படிப்பதில் அவர்களுக்குத் தனிப் பயிற்சி கொடுத்தால் அவர்களும் நாளடைவில் அதன் பயன்களை உணர்ந்துகொள்ளுவார்கள். ஒரே பாடத்தை முதலில் மாண வர்களை வாய்க்குள்ளே படிக்கச் சொல்லிவிட்டுப் பின்னர் வாய் விட்டுப் படிக்கச் சொல்லலாம். ஒரே பாடத்தில் உணர்ச்சி ததும்பவும், ஓசை நயம்படவும் எழுதப்பட்டுள்ள பகுதிகளை உரத்துப் படிக்கச் சொல்லலாம்; அங்ஙனம் இல்லாமல் கதை விளம்பரம் வருணனை போன்ற பகுதிகளை வாய்க்குள்ளேயே படிக்கச் சொல்லலாம். பெரும்பாலும் துணைப்பாடப் புத்த கங்கள் அனைத்தையும் வாய்க்குள்ளேயே படித்து, கொடுக்கப் பட்ட கேள்விகளுக்கு மாணவர்களை விடைகளைச் சொல்லவோ, எழுதவோ செய்யலாம்.*

வாய்க்குள் படித்தலால் ஏற்படும் நன்மைகள்

வாய்க்குள்ளேயே படித்தலால் இளைஞர்களுக்கு வாய்ச் சிரமமோ, உடல் சிரமமோ ஒருபொழுதும் ஏற்படாது. வறட்டுத் தவளைபோல் கத்துவதால் உண்டாகும் நாவறட்சி, தொண்டை வறட்சி, மூச்சு வாங்குதல், இருமல், வயிற்று எரிச்சல் முதலிய துன்பங்கள் உண்டாகா. உரக்கப் படித்தலால் உண்டாகும் வீணான முயற்சிகள் குறைவதால் இளைஞர்களுக்கு உடல்நலம் உண்டாகும். இரண்டாவதாக, வாய்க்குள் படிப்பதால் பக்கத்தில் உள்ளவர்களுக்கு ஒருபொழுதும் தொந்தரவு ஏற்படாது. ஒரே வகுப்பில் பலர் ஒரே சமயத்தில் படிக்கலாம். விடுதிகளில் ஒரே அறையில் தங்கியுள்ள பல மாணவர்கள் ஒரே காலத்தில் படிக்கலாம். இதனால் மாணவர்களுக்குள் சண்டை சச்சரவுகள் குறையும். மூன்றாவதாக, பிறர் தங்கள் படிப்பில் குற்றங் கண்டுபிடிப்பார்கள் என்ற அச்சமே ஏற்படாது. குரலைத் தாழ்த்தியும், உயர்த்தியும் சமநிலைப் படுத்தியும் படிக்க வேண்டியதில்லை. பலவித ஒலி வேறுபாடுகள் உள்ள எழுத்துக்களை உச்சரிக்க வேண்டியதில்லை. ஆகையால் மாணவர்களின் படிப்பு வேகம் அதிகப்படும். நான்காவதாக, சுற்றுப்புறம் முழுவதும் சப்தமின்றி இருப்பதாலும், தங்களுடைய ஐம்புலன்களையும் ஒருவழிப்படுத்தி இருப்பதாலும் மாணவர்களின் படிப்பு வேகமாகச் செல்லுவதுடன் பொருளின் ஆழத்தையும் அகலத்தையும் அவர்கள் நன்கு அறிய வாய்ப்பு உண்டு. ஐந்தாவதாக, வாய்க்குள் படிப்பதால் நல்ல மனப்பயிற்சி மாணவர்களுக்கு ஏற்படுவதால் நாளடைவில் சிந்தனை சக்தி, பொறுமை, அமைதி முதலிய நற்குணங்கள் வளர இடமுண்டு. ஆறாவதாக, மாணவர்கள் வாய்க்குள் படிப்பதால் பாடங்களில் அரும்பதங்களைக் குறித்துக்கொண்டு அவற்றின் பொருள்களை ஆசிரியர்களிடமிருந்தோ அல்லது அகராதிகளைக் கொண்டோ அறிந்துகொள்ள விருப்பம் ஏற்படும். இதனால் மாணவர்களுக்கு இளமையிலேயே சுயமுயற்சி, தன்னம்பிக்கை முதலிய அருங்குணங்கள் அமையும். ஏழாவதாக, இளமையில் இவ்வித அருங்குணங்களைப் பெறுவதால் வயது ஆகஆக அம் மாணவர்கள் பிற்காலத்தில் அரும்பெரும் இலக்கியங்களைத் தாங்களாகவே படித்து அவற்றில் ஏற்படும் ஐயங்களைக் குறித்துக் கொண்டு ஓய்வு நேரங்களில் நல்லாசிரியர்களை அணுகி அவ்வையங்களைத் தீர்த்துக்கொள்ளுவார்கள். இங்ஙனம் பயிலும் பயிற்சியே ஆணித்தரமானதும் உண்மையானதும் ஆகும். இவ்வாறு

கற்ற உண்மைகள் மக்கள் மனத்தை விட்டு ஒருபொழுதும் அகலா.

### சில குறைகள்

வாய்க்குள் படிப்பதில் சில குறைகளும் இல்லாமல் இல்லை. வாய்க்குள் படித்தலால் பிறர் அறியும்வண்ணம் படிக்க முடியாது. சில மந்தமான புத்தி உடையவர்கள் வாய்க்குள்ளேயே படித்தலால் படித்த பாடங்களின் பொருள்களைப் புரிந்துகொள்ள முடியாமல் தவிக்கிறார்கள் ; ஏனென்றால் படித்தவற்றைச் செவி வழியாகக் கேட்டு மூளைக்குள் செலுத்திக்கொள்ளும் சமயம் இல்லாமல் போகின்றது. பொருளுக்குத் தக்கவாறு வாசகங்களை உரத்தும் மெதுவாகவும் படித்து உணர்ச்சியை வெளிக்காட்ட முடிவதில்லை. வாய்க்குள்ளாகவே படித்தலால் 'ல'கர, 'ள'கர, 'ழ'கர, 'ன'கர, 'ந'கர, 'ண'கரங்களின் ஒலி வேறுபாடுகளைப் பிழைபட உச்சரிக்கும் மாணவர்களைத் திருத்த ஆசிரியர்களுக்குச் சந்தர்ப்பமே இல்லாமல் ஆகிவிடுகின்றது. வாய்விட்டுப் படிக்காத காரணத்தால் நாளடைவில் சிறுவர்கள் நாடகத்தில் நடிக்கவும், மேடைகளில் ஏறிச் சொற்பொழிவாற்றவும் சக்தி அற்றவர்களாக ஆகிவிடுகின்றனர். தமிழ்ச் செய்யுட்களில் பெரும்பாலானவை உரக்கப் படித்து அவற்றின் இசையுடன் இன்புறத் தக்கவை. வாய்க்குள் படித்தலால் இச் சுவையை உரக்கப் படித்து இன்புறவும், உரக்கப் படித்தலைப் பிறர் கேட்டு இன்புறவும் இடமில்லாமல் ஆகிவிடுகின்றது.

### வாய்க்குள் படித்தலை வளர்க்க வேண்டிய விதங்கள்

அரசாங்கத்தார் 1957-ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 25-ஆம் நாள், முதல் வகுப்பிலிருந்து ஏழாம் வகுப்புவரை வெளியிட்டுள்ள தமிழ்ப் பாடத் திட்டத்தில் கூறியுள்ளபடி மூன்றும் வகுப்பிலேயே வாய்க்குள் படித்தல் ஆரம்பிக்கப்படுகின்றது. 3, 4, 5 வகுப்புக்களிலுள்ள பொதுப் பாடப் புத்தகங்களில் (Detailed Text) கண்டுள்ள பாடங்களில் நூற்றுக்கு 40 விழுக்காடு வாய்க்குள் படித்தல் மூலமும், 60 விழுக்காடு உரத்துப் படித்தல் மூலமும் கற்றுக் கொடுக்க வேண்டும். ஆசிரியர் திறமையால் எவை வாய்க்குள் படிப்பிற்கு உகந்தவை என்றும், எவை உரத்துப் படித்தலுக்கு உகந்தவை என்றும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

6, 7-ஆம் வகுப்புக்களுக்குத் துணைப் பாடப் புத்தகங்கள் உண்டு. துணைப் பாடப் புத்தகங்கள் அனைத்தையும் வாய்க்குள் படித்தல் மூலமாக ஆசிரியர் நடத்தலாம். ஆசிரியர் ஓர் அத்தியாயத்திற்கு வேண்டிய வினாக்களை முன்னரே தயாரித்துக்கொண்டு வந்து கரும்பலகையில் எழுதிப் போடவேண்டும். அன்று நடத்தப்போகும் தலைப்பின் பொருளை வகுப்பிற்குள்ளேயே வாய்க்குள் படிக்கும்படி மாணவர்களைச் செய்து அவ்வினாக்களுக்கு விடை எழுதும்படியோ, சொல்லும்படியோ செய்யலாம். உதாரணக் கேள்விகள் :

1. இவ்வத்தியாயத்தில் உள்ள ஒவ்வொரு பத்தியின் சுருக்கத்தையும் ஒன்று இரண்டு வரிகளில் சுருக்கி எழுதுக.

2. இவ்வத்தியாயங்களிற் காணப்படும் கடின பதங்களைப் பத்திவாரியாக எடுத்து எழுதுக.

மேலும் அவ்வத்தியாயத்தில் காணப்படும் பொருள்களுக்குத் தக்க கேள்விகள் கேட்கலாம். துணைப் பாடப் புத்தகங்களை இந்த முறையில் நடத்தினால் மாணவர்கள் சுயமுயற்சியோடு ஒவ்வோர் அத்தியாயத்திலுள்ள பொருளையும் அறிய முற்படுவார்கள்.

எழுத்துப் பயிற்சியோ, வாய்மொழிப் பயிற்சியோ நடத்துவதற்கு முன்னர் ஒரு புத்தகத்தில் கட்டுரையையோ, கதையையோ சில நிமிட நேரத்தில் வாய்க்குள் படிக்கும்படிச் சொல்லிவிட்டுப் பின்பு கேள்விகளைக் கொடுத்து விடையளிக்கும்படிச் செய்யலாம். பொதுப் பாடப் புத்தகங்களில் (Detailed Text Book) உள்ள சில சுலபமான பாடங்களையும், மாணவர்களை வாய்க்குள்ளேயே படிக்குமாறு செய்து வினாவிடை முறையில் நடத்தலாம். இம் முறையால் மாணவர்கள், குறிப்பிட்ட நேரத்தில் கொடுக்கப்பட்ட பாடப் பகுதியை எங்ஙனம் படித்துப் பொருள் விளங்கிக் கொள்கிறார்கள் என்பதை நாம் எளிதில் அளந்தறியலாம்.

சாதாரணமாக வகுப்பின் தரத்திற்குத் தகுந்தாற்போல் எழுதப்பட்ட ஒரு புதிய பாடம் கொடுக்கப்பட்டால் சாதாரண ஒருவர் ஒரு நிமிடத்திற்கு 80 வார்த்தைகளும், சுறுசுறுப்பும் புத்திக் கூர்மையும் உடைய ஒருவர் ஒரு நிமிடத்திற்கு 120 வார்த்தைகளும் படித்து முடிப்பார்கள் என்று ஆராய்ச்சியாளர் கணக்கிட்டிருக்கின்றார்கள். ஒரு சாதாரணப் பக்கத்தில் ஏறக்குறைய 350 வார்த்தைகள் எழுதப் பட்டிருக்கலாம். ஒரு பக்கத்தைச்

சுறுசுறுப்பானவர் 3 நிமிடங்களிலும், சாதாரணமானவர் சுமார் $4\frac{1}{2}$ நிமிடங்களிலும் படித்து முடிப்பார் எனக் கணக்கிட்டிருக்கின்றனர்கள். ஒரு பாடம் எவ்வளவு எளிதாகவும், சுவை மிக்கதாகவும் எழுதப்பட்டுள்ளதோ அவ்வளவுக் கவ்வளவு ஒருவர் அதை விரைவாகப் படிக்கலாம். படிப்பவர் எவ்வளவுக்கு எவ்வளவு சுறுசுறுப்பாக இருக்கின்றனரோ அவ்வளவுக்கவ்வளவு விரைவாகவும், பொருளை உணர்ந்தும் படிக்கலாம். மேலே கூறிய முறையில் வினாக்கள் கொடுத்து, அவற்றிற்கு விடை எழுதும்படிச் செய்து மாணவர்களின் வாசிப்புத் திறத்தை அளந்தறியலாம்.

வாய்க்குள் படித்தலுக்கு மாணவர்களுக்கு அளிக்கப்படும் பொருள்கள்

1. முன் சொன்னமாதிரி பொதுப் பாடப் புத்தகப் பகுதிகளில் சிலவற்றை உபயோகிக்கலாம்.

2. துணைப் பாடப் புத்தகங்கள் அனைத்தையும் உபயோகிக்கலாம்.

3. புத்தக நிலையத்திலிருந்து சிறு கதைப் புத்தகங்களையும், எளிய செய்யுட்களைக் கொண்ட புத்தகங்களையும் மாணவர்கள் வாங்கி உபயோகிக்கலாம்.

4. ஆனந்த விகடன், கல்கி, பாலர் மலர் போன்ற பத்திரிகைகளையும், வேறு சில தினசரிப் பத்திரிகைகளையும் கொடுத்து அவற்றை வாய்க்குள்ளேயே படிக்கச் செய்து கேள்விகள் கேட்டு விடையளிக்கச் செய்யலாம். அவற்றிலுள்ள விளம்பரங்களையும், கதைப் படங்களையும் வெட்டிப் படத் தொகுப்பில் அல்லது ஆல்பத்தில் வரிசையாக ஒட்டி வைக்கும்படிச் செய்து அவற்றிற் கீழே எழுதியுள்ளவற்றை வாய்க்குள்ளேயே படித்துச் சுருக்கிச் சொல்லும்படிச் செய்யலாம். ஒரு மாணவனைச் சீனவைப்பற்றிய தலைப்புக்களையும், மற்றொரு மாணவனை அமெரிக்காவைப்பற்றிய தலைப்புக்களையும் கத்தரித்து எடுத்து, ஒட்டச் செய்து அவற்றின் சுருக்கத்தை மற்றவர்களுக்குச் சொல்லும்படிச்செய்யலாம். இப்புத்தகத்தில் இரண்டாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ள முறையில் ஒவ்வொரு மாணவனுக்கும் தனித்தனி வேலை அட்டைகள் (Individual work sheets) கொடுத்து வாய்க்குள்ளேயே படித்து அவ்வட்டைகளில் கண்டுள்ள வினாக்களுக்கு விடையளிக்கும்படிச் செய்யலாம்.

வாய்க்குள் படிப்பிற்கான சில பயிற்சிகள்

"வைத்ததொரு கல்வி மனப் பழக்கம்" என்ற பழமொழிப் படி வாய்க்குள் படித்தலில் மூன்றும் வகுப்பிலிருந்தே பழக்க வேண்டும். அங்ஙனம் பழக்குவதற்குரிய வழிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1. கண் நகர்ச்சி

வாய்க்குள்ளேயே படிக்கும்பொழுது கண் எவ்வளவுக்கு எவ்வளவு வரிகளைப் பார்த்து நகர்ந்து செல்லுகின்றதோ அவ்வளவுக்கு அவ்வளவு பாடங்களை வேகமாகப் படித்துச் செல்லலாம். கண் பார்வை அடிக்கடி நின்றும் மெதுவாகவும் வரிகளின் மேல் சென்றால் குறிப்பிட்ட பகுதிகளை விரைவில் படித்து முடிப்பது கடினம்.

2. நிறுத்தும் இடம்

அடிக்கடி சிலர் வார்த்தைக்கு வார்த்தை நிறுத்திப் படிப்பார்கள். இதனாலும் படித்து முடிக்கும் காலம் நீடிக்கும். நிறுத்தக் குறிகள் எங்கெங்கே குறிக்கப்பட்டுள்ளனவோ அங்கங்கே மட்டும் நிறுத்தினால் போதும். அவ்விடங்களிலும் கால் விநாடிக்குமேல் நிறுத்துதல் கூடாது.

3. பின் நகர்ச்சி

படிக்கும்போது கண்பார்வை முன்னால் வேகமாக நகர்ந்து கொண்டே செல்லவேண்டும். படிப்பது எல்லாம் பாடங்களின் பொருளை உணர்ந்துகொள்ளுவதற்காகவே. ஆகையால் எவ்வளவு வேகமாகப் படித்தாலும், பொருளையும் உணர்ந்துகொண்டே படிக்கவேண்டும். அங்ஙனமின்றிச் சிலர் பொருளை விட்டுவிட்டு, நிறுத்திப் பின்பு கண்களைப் பின்னால் நகர்த்தி மீண்டும் படித்தவற்றையே மனத்திற்குள் படிக்க ஆரம்பிப்பார்கள். இதனால் குறிப்பிட்ட பாடப் பகுதிகளைக் குறிப்பிட்ட நேரத்தில் படித்து முடிக்க இயலாது என்பது திண்ணம்.

4. கண்களை வேகமாகப் பாய்ச்சுதல்

ஒரு பெரும் தானியக் குவியலைப் பாத்திரத்தால் அளந்து சாக்கில் கொட்டும் ஒருவன், எவ்வளவுக்கு எவ்வளவு பாத்திரத்தைத் தானியத்தில் பாய்ச்சி வேகமாக அளக்கின்றானோ

அவ்வளவுக்கு அவ்வளவு குவியல் குறையும். அங்ஙனமே வாய்க்குள் படிக்கும் ஒருவன் எவ்வளவு தூரம் மனத்தையும், கண் பார்வையையும் அடுத்து அடுத்து உள்ள வாக்கியங்களில் பாய்ச்சிச் செல்லுகின்றானோ அவ்வளவுக்கு அவ்வளவு பாடப் பகுதிகளை வேகமாகப் படிக்கும் பழக்கம் ஏற்படும்.

5. வாய்க்குள் படித்தலை விரைவுபடுத்தும் இதர உதவிகள்

மாணவர்களின் கண்கள் நல்ல நிலையில் இருக்கவேண்டும். நீண்ட பார்வையோ (Long sight), குறும்பார்வையோ (Short sight) இருக்கக்கூடாது. அங்ஙனம் இருந்தால் கண் மருத்துவர்களிடம் உடனே காட்டி, கண்ணாடி போட்டுக்கொள்ள வேண்டும். காமாலைக் கண்ணோ, கண்வலியோ, மற்றும் கண் சம்பந்தமான நோய்களோ இருந்தால் அவை விரைவான படிப்பிற்குத் தடையாக இருக்கும். ஆகையால் அப்படிப்பட்ட மாணவர்கள் உடனடியாகக் கண் வைத்தியம் செய்துகொள்ள வேண்டும்.

படிக்கும்பொழுது நேராக நிமிர்ந்து, உட்கார வேண்டும். பின்னால் சாய்ந்துகொள்ள வேண்டும். அங்ஙனமின்றிக் குப்புறவும் மல்லாக்காகவும் படுத்துக்கொண்டோ, நட்டாங்குத்தாக நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டோ, ஒரு பக்கம் முழங்கையை ஊன்றியோ, கால்களை மடித்து வெகு நேரம் உட்கார்ந்துகொண்டோ படிக்கக்கூடாது. இரவில், நல்ல வெளிச்சமுள்ள விளக்குகளை இடது பக்கம் வைத்துப் படிக்கவேண்டும். புத்தகங்களை மார்புக்கு நேராகச் சுமார் 12 அங்குலம் தொலைவில் வைத்துப் படிக்கவேண்டும். மேற்சொன்ன முறைகளில் படிக்காவிட்டால் முழங்கால் வலியோ, இடுப்பு வலியோ, கண் வலியோ ஏற்பட்டுப் படிப்பதில் ஊக்கம் குறைந்து படிக்கும் வேகம் குறையும்.

படிக்கும் இடம் நல்ல காற்றோட்டமும், ஏற்ற தட்ப வெப்பமும் உடையதாக இருக்க வேண்டும். அமைதியும் நிலவ வேண்டும். அங்ஙனம் இருந்தால்தான் வேகமாக மனத்தைச் செலுத்திப் பொருளுணர்ந்து படிக்க முடியும்.

புத்தகங்கள் மிகவும் தெளிவாகவும், நல்ல எழுத்துக்களாலும் அச்சடிக்கப்பட்டிருக்க வேண்டும்; உரிய இடங்களில் நிறுத்தக் குறிகள் உடையதாக இருக்கவேண்டும்; பத்திகள் பிரிக்கப்பட்டிருத்தல் வேண்டும்; பத்திகளில் தலைப்பும் இருத்தல் வேண்டும். வார்த்தைகள் சந்தி பிரித்து எழுதி இருத்தல்

வேண்டும். தாள்களும் வழுவழுப்பாக இருத்தல் வேண்டும். இப்படிப்பட்ட புத்தகங்களை மாணவர்கள் மகிழ்ச்சியுடன் எடுத்து வேகமாகப் படிப்பார்கள் என்பது திண்ணம். கையெழுத்துப் பிரதிகளைவிட அச்சுப் புத்தகங்களை இளைஞர்கள் வேகமாகப் படிக்கின்றார்கள் என்பது யாவரும் அறிந்ததே. காரணம் முன்னதில் எழுத்துத் திருத்தம் இல்லாமை; பின்னதில் நல்ல அச்சு எழுத்துக்கள் உடைமையே.

புத்தகங்களிலுள்ள பொருளும் மாணவர்களுக்குக் கவர்ச்சியாக இருக்க வேண்டும். நடை எளிதாக இருக்க வேண்டும். விளங்காத, தெரியாத வார்த்தைகள் அதிகம் இருத்தல் கூடாது; மாணவர்கள் தாங்களாகவே படித்துப் பொருளுணரக் கூடிய புத்தகங்களாக இருக்க வேண்டும்.

எட்டாம் அத்தியாயம்

# செய்யுள் பாடம்

## செய்யுள் பாடம் சொல்லிக் கொடுப்பதன் நோக்கங்கள்

உலகத்தில் முதன்முதலில் எழுந்தவை செய்யுள் இலக்கியங்களே என்று அறிஞர்கள் உறுதியாகக் கூறுகின்றார்கள். செய்யுள் நூல்கள் எங்ஙனம் எழுந்தன என்று ஆராயும்பொழுது, சிறு செய்யுள்களானாலும், பெரு நூல்களானாலும் அவற்றை எழுதும் கவிஞர்களின் உள்ளத்தில் எழுந்த உணர்ச்சிகளாலேயே அவை எழுதப்பட்டுள்ளன என நாம் அறிகின்றோம். உணர்ச்சிகள் பல வகைப்பட்டன. அவையாவன: நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை, சமநிலை. காவியங்கள் இவ்வொன்பது சுவைகளில் ஏதாவது ஒன்றோ, பலவோ ததும்புதலினால் எழுதப்பட்டவை. இயற்கை அறிவோடு, செயற்கை அறிவும் இல்லாத முட்டாள்களுக்கு உணர்ச்சி கிளம்பினால் அவர்களுடைய செயல்கள் வெறும் அழுகையாகவோ, அல்லது மிரட்டல் திட்டல் வார்த்தையாகவோ இருக்கும். ஆனால் கவிஞர்கள் அப்படிப்பட்டவர்கள் அல்ல. அவர்கள் உலகத்தைப்பற்றித் தாம் சிந்தித்த செயற்கை அறிவும் பிறவியிலேயே இவ்விதச் சிந்தனைகளைத் தூண்டக்கூடிய இயற்கை அறிவும் படைத்தவர்கள். ஆகையால் அவர்கள் செய்யுட்களில் கருத்துக்கள் ஏராளமாகப் பொதிந்து கிடக்கும். சாதாரண ஓர் ஆணுக்கோ, அல்லது பெண்ணுக்கோகூட மேற்சொல்லப்பட்ட பல்வித உணர்ச்சிகளில் ஏதாவது ஒன்று எழும் காலத்தில் அச்சந்தர்ப்பத்திற்குத் தகுந்தாற்போல் அவர்கள் வார்த்தைகள் இசையோடு கூடி அடுக்கு மொழிகளாக வருவதை நாம் கண் கூடாகப் பார்க்கின்றோம். கவிஞர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? அவர்கள் நல்ல நூலறிவு படைத்தவர்கள் ஆகையால் அவர்களுடைய செய்யுட்களும் அவர்கள் உள்ளே எழும் உணர்ச்சியால் உந்தப்பட்டு இயற்கையாகவோ எதுகை மோனைகளோடு அமைக்கப்பட்ட இசைப்பாட்டுக்களாகவோ, தாளவரிசைக்கு ஒத்த பாட்டுக்களாகவோ செய்யுள் வடிவத்தில் வடித்தெடுக்கப்படுகின்றன. திருவாசகப் பாடல்களும் இவைபோன்ற மற்றப் பாக்களும் இப்படிப்பட்டவைகளே.

கவிஞர்கள் சொல்ல வேண்டிய கருத்துக்களுக்கு ஏற்ற சொற்கள் தாமாகவே அவர்களிடம் வந்து சேருமே தவிர, கவிஞர்கள் ஒரு பொழுதும் வார்த்தைகளைத் தேடிச் செல்வதில்லை. செய்யுட்களில் மூன்று நிலை காணப்படும். அவையாவன: கவிஞர்களின் உணர்ச்சி வெள்ளம்; அவர்களுடைய சிந்தனைக் கருத்துக்கள்; இயற்கையாகவே நிரல்படக் கோக்கப்பட்ட சொற்களால் தோன்றிய இசை இன்பம்.

ஆகவே செய்யுள் சொல்லிக் கொடுக்கப்படும்போது ஆசிரியரின் முக்கிய நோக்கங்கள், கவிஞர்களின் உணர்ச்சி வெள்ளத்தையும் சிந்தனைக் கருத்துக்களையும் சுமந்துகொண்டுள்ள சொற்கள் காட்டும் இசை இன்பத்தையும் மாணவர்களுக்கு ஊட்டக்கூடியவையாக இருக்கவேண்டும். செய்யுட்கள் அனைத்தும் இம்மூன்று அழகுகளையும் எடுத்துக் காட்டக்கூடிய சொல்லோவியங்களாகும்.

ஓவியன் ஒருவன் தன்னுள்ளே எழும் அழகு உணர்ச்சிகளை, வண்ணங்கள் எழுதுகோல்கள் முதலியவற்றின் உதவியால் திரைப் படங்களாகத் தீட்டிக் காட்டுகின்றான்; ஒரு காவியப் புலவனும் தன்னுள்ளே எழும் அழகுணர்ச்சிகளைச் சொற்களின் துணைகொண்டு செய்யுட்களாகப் பாடிக் காட்டுகின்றான். பெற்றோர் ஒருவர் தம் குழந்தைகளை அழைத்துக்கொண்டு மகிழ்வுலாச் செல்லும்பொழுது ஒரு நந்தவனத்தில் நுழைகின்றார். அங்கே பல நிறப் பூக்களும் தளிர்களும் நிரம்பிக் காட்சி அளிக்கும் மரம் செடி கொடிகளைத் தம் மக்களுக்கு மகிழ்வுடன் சுட்டிக் காட்டுகின்றார். அக்குழந்தைகளும் அவற்றால் ஈர்க்கப்பட்டு மேலும் மேலும் உள்ளே சென்று அவற்றைக் கண்டும், தொட்டும், மோந்தும் மகிழ்கின்றார்கள். இயற்கையைக் கண்டு களிக்கின்றார்கள். அங்ஙனமே செய்யுள் உலகத்திற்கு மாணவர்களை இழுத்துச் செல்லும் ஆசிரியர்களும், செய்யுட்களில் காணப்படும் அழகை அனுபவிக்கும் நோக்கத்தோடு சொல்லிக் கொடுக்க வேண்டும். கவிஞருள்ளத்தில் எழுந்த உணர்ச்சிகள் மாணவர் உள்ளத்திலும் எழும்படிச் செய்ய வேண்டும்; கவிஞன் உள்ளத்தில் எழுந்த சிந்தனை அலைகள் மாணவர்கள் உள்ளத்திலும் தோன்றும்படிச் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

செய்யுள் வகைகள்

முதல் மூன்று வகுப்புக்களில் படிப்பவர்கள் 8 வயதிற்கு உட்பட்டவர்களாக இருப்பார்கள். அவர்களுக்குச் சொல்லிக்

கொடுக்கப்படும் செய்யுள்களின் கருத்துக்கள் பெரும்பாலும் அவர்கள் சூழ்நிலைகளில் பார்த்தவையாக இருக்க வேண்டும்; அபிநயத்தோடும் இசையோடும் பாடக் கூடியனவாக இருக்க வேண்டும். அழ. வள்ளியப்பா, தேசிகவிநாயகம் பிள்ளை, பாரதியார், பாரதிதாசன் போன்ற கவிஞர்கள் எழுதிய பாடல்களில் குழந்தைகளுக்குப் பொருத்தமானவைகளாக இருப்பனவற்றை எடுத்துச் சொல்லிக் கொடுக்கலாம். தாலாட்டுப் பாட்டு, சேவல் பாட்டு, அபிநயப் பாட்டுக்கள், கதைப் பாட்டுக்கள், சில இடங்களையோ, பொருள்களையோ விளக்கும் பாக்கள் முதலியவை இவற்றுள் அடங்கும். முதல் மூன்று வகுப்புக்களுக்கு உரிய செய்யுட்கள் கடினமான பதங்களைக் கொண்டவையாகவும், நுணுக்கமும் சிக்கலுமான கருத்துக்களைக் கொண்டவையாகவும் இருக்கக் கூடாது. அப்படிப்பட்ட செய்யுட்கள் பாடப் புத்தகத்தில் இல்லாவிட்டால் ஆசிரியர்களே வேண்டியவற்றைப் பிற புத்தகங்களிலிருந்து தேர்ந்தெடுத்துச் சொல்லிக் கொடுக்கலாம். இதற்கு ஆசிரியர்களும் பல செய்யுள் நூல்களைப் படித்து ஏற்றவாறு சொல்லிக் கொடுக்கும் தகுதிபெற வேண்டும் என்பது சொல்லாமலே விளங்குகின்றது. 4, 5, 6, 7 வகுப்புக்களுக்குத் தேசிங்குராஜன் கதைப்பாட்டு, கட்டபொம்மன் பாட்டு, தேவாரம், திருவாசகம் முதலிய பக்திப் பாடல்கள், புராண இதிகாசங்களிலிருந்து பல்சுவைப் பகுதிகள் ஆகியவற்றை எடுத்துக் கொள்ளலாம்.

### செய்யுள் கற்பிக்கும் முறை

செய்யுள் சொல்லிக் கொடுக்கும் நோக்கங்கள் முன்னரே எடுத்துச் சொல்லப் பட்டன. அந்நோக்கங்கள் நிறைவேற வேண்டுமானால் மாணவர்களுக்குக் கற்பிக்கும் பகுதிகளை ஆசிரியர்கள் முன்னரே நன்கு படித்துக் கொள்ள வேண்டும். அச் செய்யுட்களில் காணப்படும் கவிஞன் உள்ளத்தை ஆசிரியர் முதலில் உணரவேண்டும்.

கடினமான சொற்கள், சொற்றொடர் இவற்றிற்குப் பொருள், உவமை நயங்கள், எதுகை, மோனை முதலிய அனைத்தையும் தங்கள் பாடக் குறிப்பில் குறித்துக் கொள்ள வேண்டும். வகுப்பிற்குள் நுழைந்ததும் அன்று நடக்கப் போகும் பாடப் பகுதியில் மாணவரை ஆயத்தப் படுத்தித் தாம் சொல்லிக் கொடுக்கப் போவதை ஏற்பதற்கு உரிய மன நிலையையும், சூழ்நிலையையும் உண்டாக்க வேண்டும். அப்பாடத்திற்குத்

தொடர்பான துணைப் பொருள்களையோ படங்களையோ தயார் செய்து வைத்துக் கொள்ள வேண்டும். பின்னர் அன்றைச் செய்யுள் பகுதியை ஆசிரியர் நன்கு உரத்து, உணர்ச்சி ததும்ப, உற்சாகத்தோடு படித்துக் காண்பிக்க வேண்டும். பொருளுக்குத் தக எந்த இடத்தில் குரலை உயர்த்தவேண்டுமோ அங்கு உயர்த்தியும், தாழ்த்த வேண்டுமோ அங்குத் தாழ்த்தியும், அபிநயத்துடனும் படிக்க வேண்டும். அங்ஙனம் ஒரு முறை அல்லது இரு முறை, மூன்று முறைகள்கூட ஆசிரியர் நன்கு படித்துக் காட்டலாம். இம்முறையிலேயே மாணவர்கள் பெரும்பாலும் செய்யுள்களின் பொதுக் கருத்துக்களை உணர்ந்து கொள்ளுவார்கள். பின்பு தாம் பாடக் குறிப்பில் எழுதிக் கொண்டு வந்தவற்றை ஆசிரியர் கரும்பலகையில் எழுதிப்போடவேண்டும். அவற்றின் உதவியைக் கொண்டு பொருள் விளங்காத பகுதிகளை இன்னும் நன்ருக மாணவர்கள் விளங்கிக்கொள்ளுவார்கள். தமிழிலுள்ள ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, தாழிசை, விருத்தம், உலா, பிள்ளைக் கவி, பரணி முதலிய பா வகைகளை இன்றைய இராகங்களில் பாடவேண்டுமென்றும், ஒன்பது சுவைகளும் அவை அடங்கிய பாக்களையும் இன்ன இன்ன இராகங்களில் பாடவேண்டும் என்றும் பெரியோர்கள் வகுத்துள்ளார்கள். அந்த இராகங்களில் ஆசிரியர்கள் அச்செய்யுட்களை நன்கு பாடிக் காட்ட வேண்டும். பின்னர் மாணவர்களில் சிலரை அன்று நடந்த செய்யுட் பகுதிகளைப் படிக்கச் சொல்ல வேண்டும். முடிவாக அப்பகுதிகளில் காணப்படும் கருத்துக்களை மாணவர்கள் உணர்ந்தார்களா என்பதை, சில கேள்விகளைக் கேட்டு அறியலாம்.

•

### செய்யுள் பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்கள் தவிர்க்க வேண்டியன சில

செய்யுள் பாடம் சொல்லிக் கொடுப்பதன் நோக்கங்கள் என்னவோ அவற்றை நிறைவேற்றுதலோடு நின்றுவிடவேண்டும். ஒரு பூவின் எழிலை நுகர்தல் என்ருல் அதன் புற அழகைக் கண்ணுல் கண்டு களித்தல், மூக்கில் வைத்து மோத்தல், அதன் பின்பு, தலையில் வைத்து அணிந்து கொள்ளுதல் இவற்ருேடு நின்றுவிடவேண்டும். இதற்குமேல் பூக்களின் இதழ்களை ஒவ்வொன்ருகப் பிய்த்தோ, அல்லது கசக்கியோ மோந்தால் அதன் அழகு கெட்டுப் போவதோடு மணத்தையும் அறிய

முடியாது. அங்ஙனமே செய்யுட்களில் ஒவ்வொரு வார்த்தையை யும், வரியையும் அலசிப் பார்த்தோமானால் அதன் அழகே கெட்டுப் போய்விடும்.

செய்யுள் பாடங்களில் இலக்கணம் சொல்லிக் கொடுக்கக் கூடாது. ஏனென்றால் இலக்கணம் சொல்லிக் கொடுப்பது நம் நோக்கம் அல்ல.

செய்யுள் சொல்லிக் கொடுக்கும்பொழுது வரிகளைத் திருப்பி வசன நடையில் (prose order) எழுதிக் கொண்டுவரச் சொல்லு தலோ, பொழிப்புரை (paraphrasing) எழுதிக்கொண்டுவரச் சொல்லுதலோ கூடாது. சில கடின பதங்களையோ, புதுப் பதங்களையோ எடுத்துக்கொண்டு அவற்றை மாணவர்களின் சொந்த வாக்கியங்களில் வைத்து எழுதச் சொல்லுதல் கூடாது. இவையெல்லாம் உரைநடைப் பகுதிகளைக் கற்பிக் கும் முறையேயன்றிச் செய்யுட் பகுதிகளில் கையாளுதல் கூடாது. அங்ஙனம் கையாண்டால் செய்யுள் அழகே கெட்டு விடும். மாணவர்களின் அழகு உணர்ச்சியும் மங்கிப்போகும்.

### செய்யுட் பகுதிகளை மாணவர்கள் மனப்பாடம் செய்ய வேண்டுமா ?

இக்கேள்வியே சிலருக்கு ஆச்சரியத்தை உண்டாக்கலாம். பழங் காலத்தில் செய்யுட் பகுதிகளை நெட்டுருப் போடுவார்கள். அங்ஙனம் செய்யாதவர்களுக்குத் தண்டனையும் கொடுப்பார்கள். தற்காலத்தில் பாடங்கள் சொல்லிக் கொடுக்கப்படும் முறை உளநூல் (psychological method) மாறிவிட்டபடியால் எந்தக் காரியத்திலும் மாணவர்களின் விருப்பத்திற்கு மாறாக அவர்களைக் கட்டாயப்படுத்தக்கூடாது. செய்யுட்களை நல்ல முறையில் ஆசிரி யர்கள் சொல்லிக்கொடுத்துவிட்டால், அவ்வழகு உணர்ச்சிகளை மாந்திய மாணவர்களில் பலர் தாங்களாகவே நெட்டுருச்செய்து விடுவார்கள். மேலும் சில மாணவர்களுக்கு நினைவு ஆற்றல் (memory power) அதிகமாக இருக்கும்; சிலருக்கு அது அவ் வளவு பலமாக இராது. எல்லோரும் ஒரே பகுதியை, ஒரே மாதிரி கிளிப் பிள்ளையைப் போலவும், கிணற்றுத் தவளையைப் போலவும் நெட்டுருப் போட்டு ஒப்பிக்க வேண்டும் என்றால் மாணவர்களின் அழகு உணர்ச்சி, ஊக்கம் எல்லாம் அழிந்து போகும். பின்பு தெனலி இராமன் வளர்த்த பூனை பாலைக் கண்டாலே ஓட்டம் பிடித்ததைப் போலச் செய்யுளைக்

கண்டாலே வெறுக்க ஆரம்பித்துவிடுவார்கள். இந் நிலையை ஆசிரியர்கள் ஒருபொழுதும் உண்டாக்குதல் கூடாது.

இன்ன பகுதிகளை எல்லா மாணவர்களும் நெட்டுருப் போட வேண்டும் என்று கட்டாயப்படுத்தி அவற்றை ஆசிரியர்கள் திருப்பிக் கேட்டுக்கொண்டு வீண் காலம் போக்குவதைவிட, மாணவர்களுக்கு விருப்பமான பகுதிகளை அவர்களே நெட்டுருச்செய்து ஒப்பிக்கலாம் என்று சொல்லிவிட்டால் அவர்கள் கட்டாயம் அங்ஙனம் செய்துவிடுவார்கள். தற்காலம் திரைப்படங்களில் காணப்படும் பாட்டுக்களைப் பிறர் தூண்டுதல் இல்லாமலே, தாங்களே விரும்பி அநேக மாணவர்கள் நெட்டுருப் போட்டுப் பாடுகின்றார்கள். காரணம், அம்மாணவர்கள் அம்மாதிரியான பாக்களில் காட்டும் விருப்பமே. அங்ஙனமே ஆசிரியர்கள் சொல்லிக் கொடுக்கும் பாக்களில் மாணவர்களுக்கு விருப்பம் உண்டாகும்படிச் செய்துவிட்டால், ஆசிரியர்களின் வற்புறுத்தல் இன்றியே மாணவர்கள் அப் பகுதிகளை நெட்டுருச் செய்துவிடுவார்கள் என்பது திண்ணம்.

இன்னதை வரி பிறழாமல் எழுதுக எனக் கேட்பதைவிட, உனக்குத் தெரிந்த ஏதாவது ஒரு செய்யுளில் நான்கு வரிகள், அல்லது பத்து வரிகளுக்கு மிகாமல், வரி பிறழாமல் எழுதுக எனக் கேட்கலாம். இதனால் மாணவர்கள் அவரவர்கள் நினைவாற்றலுக்கும், அழகு உணர்ச்சிக்கும் தகுந்தாற்போல் நெட்டுருச் செய்த பகுதிகளை ஆவலுடன் எழுதுவார்கள் என்பது உறுதி.

செய்யுட் பகுதிகளில் தேர்வு வினா குறித்தல்

எந்தப் பாடங்களை எந்த நோக்கங்களோடு சொல்லிக் கொடுக்கின்றோமோ அந்த நோக்கங்கள் மாணவர்களிடத்தில் நிறைவேறியுள்ளனவா என்பதைச் சோதனை செய்யவேண்டும். அங்ஙனமின்றித் தேர்வு வினாக்களுக்கும் நோக்கங்களுக்கும் முற்றிலும் வேறுபாடு இருந்தால், நோக்கங்கள் ஒருபொழுதும் நிறைவேரா. செய்யுட்களிலுள்ள அழகுகளையும், கவிஞன் உள்ளத்தையும், உணர்ச்சிகளையும் மாணவர்கள் புரிந்துகொண்டார்களா இல்லையா என்பதைத் தெரிந்துகொள்ளும் முறையில் வினாக்கள் அமையவேண்டும். மேல் வகுப்புக்களில் எதுகை மோனைகளை எடுத்து எழுதச் சொல்லலாம். கீழ் வகுப்புக்களில் பாட்டிலுள்ள கதையைப் பற்றிய கேள்விகள் கேட்கலாம். இன்னும் இவை போன்ற கேள்விகளைக் கேட்க வேண்டுமே தவிர, மாணவர்களின்

நினைப்புத் திறமையைச் (memory power) சோதிக்கக் கூடிய கேள்விகளாக இருக்கக் கூடாது.

வினாத் தாளில் இன்ன செய்யுட் பகுதிகளை அடி பிறழாமல் எழுதுக என்று கொடுப்பதை விட, "உனக்குத் தெரிந்த ஏதாவது ஒரு பகுதியை 10 வரிகளுக்கு மேற்படாமலும், அடி பிறழாமலும் எழுதுக" எனக் கேட்கலாம். இதனால் மாணவர்களின் அழகுணர்ச்சிகளுக்குத் தகுந்தாற்போல் தாங்கள் நெட்டுருச் செய்துள்ள பகுதிகளை அவர்கள் நிச்சயமாக எழுதுவார்கள்.

### பொருள் மட்டும் உணரும் செய்யுட் பகுதிகள் (Poetry for comprehension only).

உரைநடைப் பாடங்களை எங்ஙனம் ஆழ்ந்த படிப்பிற்கு உரியவை என்றும், அகலப்படிப்பிற்கு உரியவை என்றும் இரண்டு வகைகளாகப் பிரிக்கலாமோ அங்ஙனமே செய்யுட்பகுதிகளையும் இரண்டு பகுதிகளாகப்பிரிக்கலாம். இதுவரை,ஆழ்ந்த படிப்பிற்கு உரிய செய்யுட் பகுதிகளைப்பற்றிக் கூறினோம். ஆழ்ந்த படிப்பிற்கு உரிய செய்யுட்களைப் பயிலுங்கால் மாணவர்கள் அவற்றில் பொதிந்து கிடக்கும் உவமை, உருவகம் முதலியவற்றை விளக்கிப் பொருளோடு புணர்த்திக் காட்டுதல், அரிய சொற்களை விளக்குதல் முதலிய சொல்நயம், பொருள்நயங்களை எடுத்துக் காட்டவேண்டியது ஆசிரியர்களின் கடமை ஆகும். ஆனால் மாணவர்களின் அகலப்படிப்பிற்குரிய செய்யுட் பகுதிகளை அவர்கள் தாங்களாகவே படித்து, அவற்றின் பொருளை உணர்ந்து, அவற்றின் கதைப் போக்கையோ, பொருளையோ அறிந்துகொண்டால் போதும். இப்பயிற்சியால் பிற்காலத்தில் மாணவர்கள் பொழுது போக்கிற்காக (for enjoyment) எளிய இலக்கியங்களைத் தாமாகவே படித்து இன்புற முடியும்.

### இப் பயிற்சி கொடுக்கும் முறை

இம்மாதிரியான செய்யுட் பகுதிகளில் ஐந்தாம் வகுப்பிலிருந்தே மாணவர்களுக்குப் பயிற்சி கொடுக்கலாம். தாய்மொழி பயிற்றும் ஆசிரியர்கள் ஒவ்வோர் ஆண்டின் ஆரம்பத்திலும் இம்மாதிரியான செய்யுட் பகுதிகளில் சிலவற்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். அவற்றைத் தனித்தாள்களில் முன்னரே அச்சடித்து வைத்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு தாளிலும் சுமார் 30 வரிகளுக்கு மிகாத பகுதிகள் இருந்தால் போதும்.

அத்தாளிலேயே அரும்பதங்களுக்கு உரைகள் எழுதப்பட்டிருத்தல் வேண்டும். மாணவர்கள் விடை சொல்ல வேண்டிய வினாக்களும் எழுதப்பட்டிருத்தல் வேண்டும். அப்பகுதியின் திரண்ட கருத்தைச் சுமார் 12 வரிகளில் எழுதும்படி மாணவர்களைக் கேள்வி கேட்கலாம்.

துணைப் பாடங்களை (Non-detailed Text book) நடத்தும் முறையிலேயே இப்பாடப் பகுதிகளையும் நடத்தலாம். இப் பயிற்சிக்கெனக் கால அட்டவணையில் ஒரு வேளை (Period) ஒதுக்கப்பட வேண்டும். அவ்வேளையில் ஆசிரியர் முன் சொல்லப்பட்ட தாள்களை மாணவர்கள் ஒவ்வொருவருக்கும் வழங்கவேண்டும். மாணவர்கள் அப்பகுதிகளை வாய்க்குள்ளாகவே படிக்கவேண்டும். வேண்டுமானால், ஆசிரியர் அப்பகுதியைப் பின்னர் ஒன்று இரண்டு தடவைகள் மாணவர்களுக்குப் படித்துக் காண்பிக்கலாம். பின்னர் மாணவர்கள் தனித்தனியாகவோ, அல்லது குழு முறையிலோ விடைகளை ஆராயலாம். பின்பு விடைகளை மாணவர்களை வாய்மொழி மூலமாகவே சொல்லச் செய்யலாம். மாதிரியான பயிற்சித் தாள்களை மாணவர்களுக்குக் கொடுத்து விடைகளை வீட்டிலேயே எழுதிக்கொண்டு வரும்படிச் செய்யலாம். விடைகளையோ, திரண்ட கருத்துக்களையோ அத்தாளிலேயே எழுதி வருவதற்கு உரிய இடம் இருத்தல் வேண்டும். எழுதிக்கொண்டுவந்த விடைகளை உரிய வகுப்புக்களில் நேரம் இருப்பின் ஒவ்வொரு மாணவரும் விடையைப் படிக்கும்படிச் செய்து பார்க்கலாம். குறைந்த நேரமே இருப்பின் குழுத் தலைவர்களின் விடைகளை மட்டுமே படிக்கும்படிக் கேட்கலாம். ஒரு குழுத் தலைவன் படிக்கும் காலத்தில் மற்றக் குழுத் தலைவர்கள் கவனித்துப் பிழைகள் இருந்தால் அவர்களைத் திருத்தும்படிச் செய்யலாம். இம்மாதிரியான பயிற்சிகளை மாணவர்களுக்குக் கொடுத்துவந்தால் நாளடைவில் எளிய செய்யுட்களைத் தாங்களே படித்து இன்புறுவதற்கும், அவற்றின் பொருள்களையும், கதைப் போக்கையும் அறிந்து கொள்ளுவதற்கும் அவர்களுக்கு வசதி ஏற்படுவது நிச்சயம்.

ஒன்பதாம் அத்தியாயம்

# உரைநடைப் பகுதி

தாய்மொழி பயிலுவதன் முக்கிய நோக்கங்கள் மூன்று : (1) ஒருவர் தாம் எண்ணும் கருத்துக்களைத் தெளிவாகப் பிறருக்கு வாய்மூலம் எடுத்துரைக்கவும், எழுதவும் பழகிக் கொள்ளுவதே முதல் நோக்கம் ஆகும். (2) இவ்வாறாகப் பெற்ற திறனைக் கொண்டு தமக்கு வேண்டிய கருத்துக்களைப் (Information) பல புத்தகங்களிலிருந்து படித்துத் தெரிந்துகொள்ளுவதே இரண்டாவது நோக்கம் ஆகும். உதாரணமாக, மோட்டார் வண்டி ஓட்டுவதைக் கற்றுக்கொள்ளும் ஒருவன், அத்தொழிலைப் பற்றி எழுதியுள்ள புத்தகங்களைப் படித்துப் பார்த்துத் தொழிலின் பல்வேறு நுணுக்கங்களையும் தெரிந்துகொள்ள வேண்டுவது அவசியம் ஆகும். ஆகவே அவனுக்கு அம்மாதிரியான புத்தகங்களைப் படித்துப் புரிந்துகொள்வதற்குரிய திறமையைப் பெறுவதே தாய்மொழியைக் கற்பதன் இரண்டாவது நோக்கம் ஆகும். (3) ஓய்வு நேரங்களில் பொழுதுபோக்கிற்காகச் சிற்றிலக்கியங்களையும், பேரிலக்கியங்களையும் படித்து இன்புறுவதே தாய்மொழியைக் கற்றுக் கொள்ளுவதன் மூன்றாவது நோக்கமாகும்.

இப்பொழுது நாம் இங்கு முதலாவது நோக்கத்தைப் பற்றிப் பார்ப்போம். இந்த நோக்கத்தை முன்னணியாக வைத்துக் கொண்டு பார்க்கும்பொழுது ஆழப்படிப்பு என்றும், அகலப் படிப்பு என்றும் படிப்பை இருவகைகளாகப் பிரிக்கலாம். இப்பொழுது ஆழப்படிப்பிற்கு (Detailed Text) உரிய உரைநடைப் பகுதியை மாணவர்களுக்கு எங்ஙனம் போதிக்க வேண்டும் என்பதை ஆராய்வோம்.

### 1 முதல் 5 வகுப்புக்கள் வரை உரைநடை சொல்லிக் கொடுக்கும் முறை

ஒவ்வொரு பாடத்தையும் சொல்லிக் கொடுக்கும் முறை அந்த அந்தப் பாடத்திற்குத் தகுந்தாற்போல் இருக்க வேண்டும். உதாரணமாக, தமிழ்ப் பாடத்தைச் செயல் திட்ட (Project Method) முறைப்படிச் சொல்லிக் கொடுக்க வேண்டுமானால்

அதற்கு ஒரு முறையைப் பின்பற்ற வேண்டும்; விளையாட்டு முறைப்படிச் சொல்லிக் கொடுக்க வேண்டுமானால் அதற்கு மற்றொரு முறையைப் பின்பற்ற வேண்டும். ஆனால் உரைநடைப் பகுதிகளைச் சொல்லிக் கொடுக்கும்பொழுது பொதுவாகச் சில கொள்கைகளை ஆசிரியர்கள் பின்பற்ற வேண்டுவது இன்றியமையாதது ஆகும். அக் கொள்கைகள் பின்வருமாறு :—

ஒரு பாடத்தை ஆரம்பிக்கும் முன்னர் ஆசிரியர் அப்பாடத்தைப்பற்றியும், அப்பாடத்திலுள்ள பொருளைப்பற்றியும் மாணவர்களுக்கு நன்கு விளக்கமாக எடுத்துச் சொல்லி அவர்களுக்கு அப்பாடத்தில் விருப்பம் ஏற்படும்படிச் செய்யவேண்டும். ஒரு பாடத்தில் முதல்நாள் சில பகுதிகளை முடித்திருந்தால் அடுத்த நாள் அடுத்த பகுதியை ஆரம்பிக்கும் முன்னர் அதுவரை நடந்த பாடப் பகுதியை ஆசிரியர் சுருக்கிச் சொன்ன பின்னரே புதுப் பகுதியை ஆரம்பிக்க வேண்டும். ஆசிரியருக்குப் பதிலாகத் திறமையான மாணவன் ஒருவனையும் அங்ஙனம் சொல்லச் செய்யலாம். ஒரு நாள் நடத்த வேண்டிய பாடப் பகுதிகளில் காணப்படும் பத்திகளில் ஒவ்வொரு பத்தியின் தலைப்பையும் ஆசிரியர் கரும்பலகையில் முன்னரே எழுதியும் போடலாம். அத்தலைப்பு இரத்தினச் சுருக்கமாக இருக்க வேண்டும். இதைப் பற்றிய விவரம் இன்ன பத்திகளைப் படித்துப் பார்த்தால் தெரியும் என அறிவித்துவிட்டால் மாணவர்கள் உற்சாகத்தோடும், ஆவலோடும் அப்பகுதிகளை வாய்க்குள்ளாகவே படிக்க ஆரம்பித்துவிடுவார்கள். அப்பாடத்தில் படங்கள் இருந்தால் அவற்றைப்பற்றி மாணவர்களுக்கு நன்கு விளக்கிச் சொல்லவேண்டும். அப்பாடப் பகுதிகளுக்கு வேண்டிய துணைக் கருவிகளையும் ஆசிரியர் வைத்துக்கொள்ள வேண்டும். மாணவர்களையும், வேண்டிய சில பாட உதவிகளைக் கொண்டு வரும்படிச் சொல்ல வேண்டும். பின்னர் அப்பாடத்திலுள்ள கடின பதங்கள், புதிய சொற்றொடர்கள் (Phrases), மரபுகள் (idioms) ஆகியவற்றைக் கரும்பலகையில் எழுதிப் போட்டு அவற்றிற்கு விளக்கங்களையும் எழுதிப் போடவேண்டும். கடினமான உச்சரிப்புக்களை உடைய வார்த்தைகளையும் பாடத்திலிருந்து ஆசிரியர் ஆய்ந்தெடுத்துக் கரும்பலகையில் ஒவ்வொன்றாக எழுதி, அவற்றை ஆசிரியர் உச்சரித்துக் காண்பிக்க வேண்டும். பின்னர், நன்றாக உச்சரிக்கக்கூடிய மாணவர்களை அவற்றை உச்சரித்துக் காட்டும்படிச் செய்ய வேண்டும். வேறு சில மாணவர்களையும் அவற்றை உச்சரிக்கும்படிச் செய்யலாம். தமிழ்மொழியில் மேல்வகுப்புக்களில்கூட

ல, ள, ழ இவற்றின் வேறுபாடுகளும், ண, ன, ந இவற்றின் வேறுபாடுகளும், ற, ன, ங, ஞ இவற்றின் வேறுபாடுகளும் தெரியாமல் பிழைபட மாணவர்கள் உச்சரிப்பதை நாம் கண்கூடாகப் பார்க்கின்றோம். இவற்றின் வேறுபாடுகள் தோன்ற அவ்வெழுத்துக்கள் வரக்கூடிய வார்த்தைகளை ஆசிரியர் உச்சரித்துக் காண்பித்துப் பின்னர் மாணவர்களுக்கும் தகுந்த பயிற்சி கொடுக்க வேண்டும். பயிற்சி கொடுக்கும் காலத்தில் மாணவர்களுக்கு உற்சாகம் குறையாமலும், அவர்களுடைய மனம் புண்படாமலும் பயிற்சி கொடுக்கவேண்டும். வகுப்புக்களில் பாடம் நடத்தும் பொழுது அங்ஙனம் பயிற்சி கொடுக்க ஆசிரியருக்கு நேரம் இல்லாவிட்டாலும், மாணவர்கள் கூச்சப்பட்டால் அப்படிப்பட்ட மாணவர்களுக்கென்று காலை, அல்லது மாலையில் தனிப்பட்ட வகுப்புக்கள் (Special periods) வைத்தும் உச்சரிப்பில் பயிற்சி கொடுக்கலாம். இப்பயிற்சிக் காலத்தில் ஆசிரியர் கீழ்க்கண்ட முறைகளைப் பின்பற்ற வேண்டும். ல, ள, ழ இவற்றின் உச்சரிப்புக்களில் பயிற்சி கொடுக்கும் காலத்தில் ஆரம்பத்தில் ஒவ்வோர் எழுத்தும் வரக்கூடிய பல சொற்களை ஒவ்வோர் அட்டையில் எழுதி வகுப்பறையில் தொங்கவிட வேண்டும். அங்ஙனம் தயாரிக்கப்பட்ட பட்டியலில் கண்ட சொற்களில் தனித்தனிப் பயிற்சி அளிக்க வேண்டும். அங்ஙனமின்றி ஒரே சமயத்தில் 'ல' 'ள' 'ழ' வந்துள்ள பதங்களில் மாற்றி மாற்றிப் பயிற்சி கொடுத்தால் மாணவர்களுக்குத் தடுமாற்றம் ஏற்பட்டு நாக் குழறிப்போகும். இது அனுபவத்தில் கண்ட உண்மை. மேல் வகுப்புக்களுக்குச் சென்றபின் வேண்டுமானால் அங்ஙனம் மாற்றுப் பயிற்சி கொடுக்லாம்.

உதாரணங்கள் :

| | | |
|---|---|---|
| கல் | கள் | பழம் |
| பல் | எள் | அழல் |
| சொல் | புள் | தழல் |
| மல் | தள் | மழை |
| தொல் | ஞொள் | வாழை |
| வில் | உள் | கழை |
| புல் | வள் | தாழை |

இவ்வாறு ஆசிரியர் முன்னர்ச் செய்ய வேண்டுவனவற்றைச் செய்து முடித்த பின்பு அன்று நடக்க வேண்டிய பாடப் பகுதிகளை வாய்க்குள்ளாகவே மாணவர்களைப் படிக்கச் செய்ய

வேண்டும். அங்ஙனம் படிக்கும் காலத்திலேயே அவர்களுடைய ஐயங்களை ஆசிரியர்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். இங்ஙனம் மாணவர்கள் படித்து முடித்த பின்னர் ஆசிரியர் பாடப் பகுதியை நன்றாகவும், தெளிவாகவும், பொருளுக்குத் தகவும் ஒரு முறையோ இரு முறையோ மாணவர்களுக்குப் படித்துக் காண்பிக்க வேண்டும். பின்னர் அவ்வகுப்புக்களில் நன்றாகப் படிக்கும் மாணவர்களில் மூவர் அல்லது நால்வரைப் படிக்கும் படிச் செய்ய வேண்டும். உரைநடை சொல்லிக் கொடுப்பதில் இம்முறை மிக அவசியமாகும். நன்றாகப் படிக்கும் மாணவன் நன்றாகப் பொருள் தெரிந்தவன் என நாம் அறியலாம். அங்ஙனம் படிக்க முடியாதவன் பொருளைப் புரிந்துகொள்ளாதவனாகவோ, அல்லது கூச்சப்படுபவனாகவோ இருக்க வேண்டும். அப்படிப் பட்ட மாணவர்களிடம் ஆசிரியர் தனிக் கவனம் செலுத்தி அவர்களையும் நாளடைவில் திருத்திவிடலாம்.

பின்னர் மாணவர்கள் அப்பகுதியைப் புரிந்துகொண்டிருக்கின்றார்களா என்று அறிந்துகொள்ளுவதற்காக ஆசிரியர் அவர்களைச் சில சோதனைக் கேள்விகள் (Recapitulation) கேட்கலாம். உதாரணமாக, ஒரு மாணவனை அப்பத்தியின், அல்லது அப் பாடத்தின் சுருக்கத்தைச் சொல்லும்படிச் செய்யலாம். கதையாக இருந்தால் மாணவர்கள் மகிழ்ச்சியுடன் சொல்லுவார்கள். இதற்கு முன் விளக்கப்படாத கடின பகுதிகளின் விளக்கங்களையும், இலக்கண விளக்கங்களையும், மரபுகளையும், பழமொழிகளையும் ஆசிரியர் இப்பொழுது எடுத்துச் சொல்லலாம். பின்னர் மின் அட்டைகள் தயாரித்து விளையாட்டு முறையில் சில பயிற்சிகள் மாணவர்களுக்குக் கொடுக்கலாம். இங்ஙனம் காலத்திற்கும், பாடங்களுக்கும் தகுந்தாற்போல் சில பத்திகளை, அல்லது சிறு பாடமாக இருந்தால் முழுப் பாடத்தையோ ஆசிரியர் ஒரு நாளையில் முடிக்கலாம்.

இங்ஙனம் ஒரு பாடத்தை முடித்த பின்னர் அப்பாடத்தில் சில வீட்டு வேலைகளை மாணவர்களுக்குக் கொடுக்கலாம். 4, 5 வகுப்பு மாணவர்களுக்குச் சில கேள்விகள் கொடுத்து அவற்றிற்கு விடை எழுதி வரும்படிச் சொல்லலாம். சிறு நாடகம் நடிக்கக்கூடிய பகுதிகளாக இருந்தால் அவர்களை அதை எளிய நடையில் எழுதி நடிக்கும்படிச் செய்யலாம். அப்பாடப் பகுதியைப் பற்றிச் சில படங்கள் வரைந்துகொண்டு வரும்படிச் செய்யலாம். அப்பாடத்தில் காணப்படும் பொருள்களை மண்ணினாலோ, மரத்தூளினாலோ, காகிதங்களாலோ, அட்டைகளாலோ,

பஞ்சாலோ, இன்னும் உரிய பொருள்களாலோ மாதிரிப் பொருள்கள் செய்துகொண்டு வரும்படிச் செய்யலாம்.

மேல் வகுப்புக்களுக்கு உரைநடை சொல்லிக் கொடுக்கும் முறை

பெரும்பாலும் மேல் வகுப்புக்களுக்கும் கீழ்வகுப்புக்குச் சொல்லிக்கொடுத்த முறையிலேயேதான் உரைநடைப் பகுதிகளைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். ஆனால் மேல் வகுப்புக்களில், மாணவர்கள் உரைநடைப் பகுதிகளை எழுதிய ஆசிரியர்களின் எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் புரிந்து கொள்ளுவதற்கு உரிய சந்தர்ப்பங்களையும் பயிற்சிகளையும் அதிகமாக்க வேண்டும். இவற்றிற்கு உரிய வாய்மொழிப் பயிற்சிகளையும், எழுத்துப் பயிற்சிகளையும் அவர்களுக்கு அளித்து, அவர்கள் எண்ணங்களை நன்றாகச் சிந்திக்கவும், சிந்தித்த கருத்துக்களை நல்ல தமிழில் பிழையின்றித் தாராளமாக எடுத்துச் சொல்லவும், எடுத்துச் சொன்னவற்றை நன்றாக எழுதவும் பழக்க வேண்டும்.

ஒரு பகுதியையோ பாடத்தையோ முடித்துவிட்டோம் என்றால் மாணவர்கள் அப்பகுதியைத் தெளிவாகவும், பொருளுக்குத் தக்கபடி குரலை உயர்த்திப் படிக்கவேண்டிய இடத்தில் உயர்த்தியும், தாழ்த்திப் படிக்க வேண்டிய இடத்தில் தாழ்த்தியும், ஒற்றுக்கள் இரட்டிக்கும் இடத்தில் அவற்றைப் படிக்கும் போதே சேர்த்தும், அழுத்தியும், உச்சரிப்புப் பிழையின்றியும், நிறுத்தக் குறிகள் இருக்கின்ற இடங்களில் அவற்றிற்குத் தக நிறுத்தியும் படிப்பதற்குத் தெரிந்துகொள்ளவேண்டும். இங்ஙனம் படிக்க மாணவர்கள் தவறுவார்களானால், ஆசிரியர் அப்பகுதியை நன்கு படித்துக் காட்டுவதோடு மாணவர்களையும் பன்முறை படிக்கச் சொல்லவேண்டும். ஒரு பாடத்தை மாணவர்கள் நன்கு புரிந்துகொள்ள வேண்டுமானால் கீழ்க்கண்ட வாய்மொழிப் பயிற்சிகள் கொடுக்க வேண்டும்.

1. கதைப் பகுதியாக இருந்தால் கதையைத் திருப்பித் தன் சொந்த வார்த்தைகளில் சொல்லும்படிக் கேட்கலாம்.

2. ஒரு பகுதி முடித்தவுடன் அப்பகுதியில் காணப்படும் வாக்கியங்களிலுள்ள எழுவாய் பயனிலைகளை எடுத்தெழுதும்படிச் சொல்லலாம். வகுப்பைப் பல குழுக்களாகப் பிரித்து ஒரு குழுவை எழுவாயைப் பொறுக்கிச் சொல்லும்படியாகவும், இன்னொரு குழுவைப் பயனிலை பொறுக்கிச் சொல்லும்படியாகவும்

வேறொரு குழுவைச் செயப்படுபொருளைப் பொறுக்கும்படியாக வும் சொல்லலாம்.

3. செய்வினையாக உள்ள வாக்கியங்களைச் செயப்பாட்டு வினைகளாக மாற்றும்படியாகவும், செயப்பாட்டு வினையில் உள்ள வற்றைச் செய்வினையில் மாற்றும்படியாகவும் சொல்லலாம்.

4. பல வினைகள் உள்ள ஒரு வாக்கியத்தை ஒரே வினை உடைய பல சிறு வாக்கியங்களாக ஆக்கும்படிச் சொல்லலாம்.

5. இங்ஙனமே பல தனிச் சிறு வாக்கியங்களை ஒரு பயனிலை உடைய வாக்கியமாகச் சுருக்கித் தரும்படிச் செய்யலாம்.

6. ஒரு பகுதியில் வந்துள்ள புதிய சொற்களைப் பொறுக் கும்படிச் சொல்லலாம். அவற்றை மாணவர்கள் சொந்த வாக்கி யங்களில் உபயோகிக்கும்படிச் சொல்லலாம்.

7. ஒரு பத்தியிலுள்ள மரபுச் சொற்களை (Idioms) எடுத் துச் சொல்லும்படியும், அவற்றையும் மாணவர்கள் தங்கள் சொந்த வாக்கியங்களில் உபயோகிக்கும்படியும் சொல்லலாம்.

8. பாடத்தில் வந்துள்ள பழமொழிகளை எடுத்தியம்பும் படிச் செய்யலாம்.

9. ஒரே பொருளைக் கொடுக்கும் பல சொற்களையும், எதிர் பொருள்களைக் கொடுக்கக் கூடிய சொற்களையும், பல பொருள் களைக் கொடுக்கக் கூடிய ஒரு சொல்லையும் பொறுக்கும்படிச் செய்யலாம்.

எழுத்துப் பயிற்சி

1. ஒரு பாடத்தை வகுப்பில் முடித்தவுடன் ஒவ்வொரு பகுதியின் சுருக்கத்தையும் நான்கு அல்லது ஐந்து வரிகளில் எழு திக்கொண்டு வரும்படிச் செய்யலாம்.

2. கதையாக இருந்தால் கதை முழுவதையும் ⅓ பாகத்தில் சுருக்கி எழுதிக்கொண்டு வரும்படிச் செய்யலாம்.

3. உரையாடலுக்குத் தகுந்த பகுதிகளாக இருந்தால் ஒரு பாடத்தை நாடக முறையில் எழுதிக்கொண்டு வந்து நடிக்கும் படிச் செய்யலாம்.

4. புத்தகத்திலுள்ள உரைநடைப் பாடமே நாடகமாக எழுதப்பட்டிருந்தால் பல்வேறு கதாபாத்திரங்களின் குணாதி சயங்களையும் எழுதிக்கொண்டு வரும்படிச் செய்யலாம்.

5. பாடத்தில் காணப்படும் பல கதாபாத்திரங்களை ஒருவரோடு ஒருவரை ஒப்பிட்டு எழுதி வரும்படிச் செய்யலாம்.

6. அவ்வப்பொழுது நடைபெறும் இலக்கணப் பாடங்களுக்குத் தக உரைநடைப் பகுதிகளிலிருந்து பயிற்சிகள் எழுதிக் கொண்டு வரும்படிச் செய்யலாம்.

இங்ஙனம் நல்ல முறையில் மாணவர்களுக்குக் கொடுக்கப்படும் வாய்மொழிப் பயிற்சிகளையும் எழுத்துப் பயிற்சிகளையும் ஆசிரியர்கள் தங்கள் திறமையாலும், உற்சாகத்தாலும், ஊக்கத்தாலும் அவ்வப்பொழுது மாணவர்களின் உற்சாகம் குறையாத முறையில் திருத்தி வருவார்களானல் மாணவர்கள் தாய் மொழியை நன்ருகப் பேசவும், எழுதவும் பழகிக் கொள்ளுவார்கள் என்பது திண்ணம்.

மாணவர்களின் சொற்களஞ்சியத்தைப் பெருக்குதல்

உரைநடைப் பகுதியைச் சொல்லிக் கொடுப்பதன் முக்கிய நோக்கங்களையும், அது எங்ஙனம் சொல்லிக் கொடுக்கப்பட வேண்டும் என்பதையும் இதுகாறும் பார்த்தோம். இப்பொழுது மாணவர்களின் சொல்லாக்கத்தை எங்ஙனம் வளப்படுத்த வேண்டும் என்பதை ஆராய்வோம்.

1. மாணவர்கள் புதிய வார்த்தைகளைப் படிக்கும் காலத்தில் அவற்றின் பொருளை உணர்ந்துகொள்ளுவதோடு அவற்றைத் தங்கள் வாக்கியங்களிலேயே பயன்படுத்தவும் தெரிந்துகொள்ள வேண்டும்.

2. ஒவ்வொரு பாடத்திலும் புகுத்தப்பட்டுள்ள புதிய சொற்களின் பட்டியல்களை முதலிலேயே மாணவர்களைத் தயாரிக்கும்படிச் சொல்ல வேண்டும்.

3. அங்ஙனம் தயாரிக்கப்பட்ட சொற்களைப் புத்தகங்களிலுள்ள வாக்கியங்களில் பொருத்திப் பயிலுவதோடு, தன் சொந்த வாக்கியங்களிலும் உபயோகப்படுத்தச் சொல்ல வேண்டும். அப்பொழுது அவ்வார்த்தைகளின் பொருள் விளங்கும்படியான சந்தர்ப்பத்தில் (Context) உபயோகப்படுத்துகின்ருரு என்பது ஆசிரியர்களுக்குத் தெரியவரும். அங்ஙனம் சரியாக வழங்கப்படாவிட்டாலும் ஆசிரியர் அதைத் திருத்திக் காட்டவேண்டும்.

4. இம் மாதிரியான புதிய சொற்களைப் பன்முறை, பல சந்தர்ப்பங்களில் உபயோகப்படுத்தும் பயிற்சி மாணவர்களுக்குக்

கொடுக்கப்படல் வேண்டும். அப்பொழுதுதான் அச் சொற்களை மாணவர்கள் தாங்கள் சொந்தமாக்கிக் கொள்ள முடியும்.

5. புதிய சொற்களுக்கு அவற்றின் மறுதலைப் பதங்களை (Opposite words) எழுதி வரும்படியும், அவற்றை மாணவர்களுடைய வாக்கியங்களில் எழுதி வரும்படியும் சொல்லலாம்.

6. சொற்களின் பொருள்களை, வழங்கப்பட்டுள்ள சொற்றொடர்களைப் படித்துப் புரிந்து கொள்ள முடியுமே தவிர, தனியாக இருந்தால் அவற்றின் முழுப் பொருளையும் புரிந்துகொள்ள முடியாது. ஆகவே அவற்றைச் சொற்றொடர்களில் பொருத்தியே பொருளை அறிவிக்க வேண்டும்.

7. இம்மாதிரியான புதிய சொற்களில் ஒரு சிலவற்றையே ஒரு நாளைக்கு மாணவர்களுக்குக் கற்பிக்க வேண்டும். ஏராளமான புதிய வார்த்தைகளை ஒரே சந்தர்ப்பத்தில் மாணவர்களிடம் புகுத்தினால் அவர்களுக்கு அவற்றில் வெறுப்புத் தட்டுவதோடு, நினைவும் வைத்திருக்க முடியாது.

மேற்கண்ட முறைகளில் வகுப்புக்களில் மாணவர்களுக்குப் பாடங்களைப் போதித்தால் அவர்களுடைய சொல்லாக்கம் (Mastery of Vocabulary) வன்மையும் வளர்ச்சியும் பெறும்.

உரைநடைப் பகுதியும் அகலப் படிப்பும்

இதுகாறும் ஆழப் படிப்பிற்குரிய (Detailed) உரைநடைப் பகுதிகளை மாணவர்களுக்கு எங்ஙனம் சொல்லிக் கொடுக்கவேண்டும் என்பதை ஆராய்ந்தோம். தாய்மொழி கற்றுக் கொள்ளுவதில் இரண்டாவது, மூன்றாவது நோக்கங்களாவன புதிய கருத்துக்களை அறிந்து கொள்ளுவதற்காகவும், பொழுதுபோக்கிற்காகவும் புத்தகங்களைப் படிப்பதுமே. இவ்விரு நோக்கங்களும் அகலப் படிப்பிற்குரிய புத்தகங்களை மாணவர்கள் படிப்பதால் நிறைவேற்றப்பட வேண்டும். அகலப் படிப்பிற்குரிய புத்தகங்களை இரு வகைகளாகப் பிரிக்கலாம்: ஒன்று, துணைப்பாடப் புத்தகங்கள்; இரண்டு, நூல் நிலையப் புத்தகங்கள்.

புதிய பாடத் திட்டப்படி 'துணைப்பாடப் புத்தகங்கள் ஆறும் வகுப்பிலிருந்து சொல்லிக் கொடுக்கப்படவேண்டும். துணைப்பாடப் புத்தகங்களின் நடை அவ்வவ் வகுப்பின் தரத்திற்குத் தகுந்தாற் போல் இருக்க வேண்டும்; அது அதிகக் கஷ்டமாகவோ, சுலபமாகவோ இருத்தல் கூடாது. பொருளும் சிக்கலாகவோ ஆராய்ச்சி மிகுந்ததாகவோ மாணவர்களின் இளம்

உள நிலைக்குப் பொருத்தமில்லாத நுணுக்கமான கருத்துக்களைக் (Abstract ideas) கொண்டதாகவோ இருக்கக் கூடாது; பெரும்பாலும் கதையாகவோ, சிறுபான்மை ஓர் இடத்தையோ, பொருளையோ, மாணவர்கள் நாள்தோறும் பார்த்து அனுபவிக்கக் கூடிய சம்பவங்களைப் பற்றியதாகவோ இருக்கவேண்டும். துணைப்பாடப் புத்தகங்களிலுள்ள ஒவ்வோர் அத்தியாயத்தின் முடிவிலும் அந்த அத்தியாயத்தில் வந்துள்ள கடின பதங்களின் பொருள்கள் எழுதப்பட்டிருக்கவேண்டும். சிறுசிறு கேள்விகளும் கொடுக்கப் பட்டிருத்தல் வேண்டும்.

துணைப்பாடப் புத்தகங்களை நடத்தும் முறை

புத்தகங்களிலுள்ள ஒவ்வோர் அத்தியாயத்தையும் ஆசிரியர் முன்னரே தாம் படித்து, அதை மௌனமாகப் படித்து முடிக்கச் சுமார் எத்தனை நிமிடங்கள் ஆகும் எனக் கணக்கிட்டுக் கொள்ளவேண்டும். ஒவ்வோர் அத்தியாயத்திலும் கேட்கக் கூடிய சிறு கேள்விகளைத் தயார் செய்துகொள்ள வேண்டும். ஓர் அத்தியாயம் முழுவதற்கும் பொருத்தமாகவோ, அல்லது இரண்டு மூன்று அத்தியாயங்களைச் சேர்த்தோ பெருங் கேள்விகள் சிலவற்றை முன்னரே தயாரித்துக்கொள்ள வேண்டும்.

வகுப்பிலுள்ள மாணவர்களை ஒவ்வோர் அத்தியாயத்தையும் மௌனமாக வாய்க்குள்ளாகவே படிக்கும்படிச் சொல்ல வேண்டும். படிக்கும்பொழுதே கடினமான பதம் ஏதாவது இருந்தால் குறித்து வைக்கும்படிச் சொல்லவேண்டும். குறிப்பிட்ட நேரம் வந்தவுடன் படிப்பை நிறுத்திவிட்டுத் தெரியாத பதங்களை எடுத்துச் சொல்லும்படிச் செய்யவேண்டும். அவற்றின் பொருள்களை ஆசிரியர்கள் கரும்பலகையில் எழுதிப் போடலாம். பின்னர் ஆசிரியர் தாம் தயாரித்து வைத்துள்ள கேள்விகளைக் கொடுத்துக் குழுவாரியாக மாணவர்களைக் குறிப்புப் புத்தகங்களில் விடை எழுதும்படிச் செய்யலாம். அங்ஙனம் மாணவர்கள் எழுதும்பொழுது ஆசிரியர் வகுப்பைச் சுற்றி வந்து ஏதாவது சந்தேகம் இருந்தால் அவற்றை விளக்கலாம். அங்ஙனம் செய்தால் வகுப்பில் சப்தம் இல்லாமல் பார்த்துக்கொள்ள முடியும். எழுதி முடித்த பின்னர் ஒவ்வொரு குழுத்தலைவனையோ, விருப்பமுள்ள மாணவனையோ தன் விடைகளைப் படிக்குமாறு செய்ய வேண்டும். அங்ஙனம் ஒருவன் படிக்கும் காலத்தில் மற்ற மாணவர்கள் அவன் விடைகளிற் பிழை இருந்தால் அவற்றைக் கடைசியில்

எடுத்துக் காட்டும்படிச் செய்யவேண்டும். அங்ஙனம் எடுத்துக் காட்டப்பட்ட பிழைகளை மற்ற மாணவர்களைக் கொண்டு ஆசிரியர் திருத்தலாம்; அவர்களால் முடியாவிட்டால் ஆசிரியரே திருத்த வேண்டும். இங்ஙனம் எழுதப்பட்டுத் திருத்திய விடைகளை மாணவர்கள் எல்லாரும் தங்கள் குறிப்புப் புத்தகத்தில் திருத்தமாக எழுதிக்கொண்டு வரும்படிச் செய்யவேண்டும். அடுத்த நாள் வரும்பொழுது குழுத் தலைவர்களின் உதவி கொண்டு எல்லா மாணவர்களும் சரியாக விடை எழுதியுள்ளார்களா என்று வெகு விரைவில் ஆசிரியர் சரிபார்க்கலாம். இம்மாதிரியான வேலைகளுக்குப் புத்திசாலித்தனமான மாணவர்களைக் குழுத்தலைவர்களாக நியமித்துக்கொள்ள வேண்டும். ஆசிரியர்கள் தயாரித்துக்கொண்டு வந்துள்ள பெருங்கேள்விகளை மாணவர்களுக்குக் கொடுத்து அவற்றிற்கு விடைகளை வீட்டிலேயே எழுதிக்கொண்டு வரும்படிச் செய்யலாம். இதனால் மாணவர்கள் துணைப் பாடங்களை மிக மகிழ்ச்சியுடன் படித்துத் தங்களுடைய தாய்மொழி அறிவை அதிகப்படுத்திக் கொள்ளுவார்கள்.

அகலப் படிப்பும் நூல் நிலையமும்

கீழ் வகுப்புக்கள் : மூன்றும் வகுப்பிலிருந்தே மாணவர்களுக்கு நூல் நிலையப் படிப்பில் உற்சாகம் ஊட்டலாம். மூன்று நான்கு ஐந்து வகுப்புக்களில் பயிலும் சிறுவர்களுக்கு உரிய புத்தகங்களின் அட்டைகள் மிக அழகாக இருக்க வேண்டும். அவற்றில் பலவித நிறங்களைக் கொண்ட படங்கள் தீட்டப்பட்டிருத்தல் வேண்டும். சிறுவர்கள் நாள்தோறும் பார்க்கக் கூடிய நாய், பூனை, மாடு, குரங்கு, பறவை முதலியவற்றைப் பற்றிய சிறு கதைகள் வர்ணப் படங்களோடு எழுதப்பட்டிருக்க வேண்டும். பல நாட்டுக் குழந்தைகளின் உருவப் படங்கள் கொண்ட புத்தகங்களும் சேர்க்கப்பட வேண்டும். அவர்களின் நடை உடை பாவனைகளும் எளிய மொழியில் எழுதப்பட்டிருத்தல் வேண்டும். எழுத்துக்கள் சிறியவையாக இருத்தல் கூடாது; நல்ல தடித்த எழுத்துக்களாக இருக்க வேண்டும். கடின பதங்கள் இருத்தலாகாது. சிறு சிறு வாக்கியங்களாக இருத்தல் வேண்டும். ஒவ்வொரு வகுப்பிலும் சிறு கண்ணாடி முகப்போடு கூடிய மர அலமாரிகளில் அப்புத்தகங்கள் அழகாகவும், வரிசையாகவும் அடுக்கப்பட்டிருத்தல் வேண்டும். நூல் நிலையத்திற்கு உரிய காலத்தில் ஆசிரியர் அலமாரிகளின் கதவுகளைத் திறந்து

விட்டுக் குழந்தைகள் அவற்றை எடுத்துப் பார்க்கும்படிச் செய்ய லாம். அதனல் குழந்தைகளுக்கு அவற்றைப் படித்துப் பார்க்கும் விருப்பம் அதிகமாகும். சில சமயங்களில் ஒரு புத்தகத்தி லுள்ள ஓர் இனிய பகுதியைப்பற்றி ஆசிரியர் விளக்கமாக எடுத்துச் சொல்லிவிட்டு "அக்கதை இப்புத்தகத்தில்தான் உள்ளது" என்று அப்புத்தகத்தையும் குழந்தைகளுக்குக் காட்டிவிட்டால் அவர்கள் விருப்பம் தூண்டப்பட்டு எடுத்துப் படித்துப் பார்க்க முற்படுவார்கள். இங்ஙனம் ஒவ்வொரு மாணவனுக்கும் அவன் விரும்பிய புத்தகத்தைக் கொடுத்து ஆசிரியர் தம்முடைய குறிப்புப் புத்தகத்தில் குறித்து வைத்துக்கொள்ளவேண்டும். பின்னர் அப்புத்தகங்களை வகுப்பிற்குள் வாய்க்குள் படிக்கும்படிச் செய்ய வேண்டும். ஏதாவது விளக்கம் வேண்டுமானல் ஆசிரியர் கொடுக்கலாம். பின்பு படித்தவற்றைப் பற்றி வாய்மொழி மூலமாகவே மாணவர்களை எடுத்துச் சொல்லும்படிச் செய்யலாம். மூன்று, நான்கு, ஐந்து வகுப்புக்களில் நூல் நிலையப் புத்தகங்களில் ஆசிரியர் கேட்கக் கூடிய கேள்விகளுக்கு மாணவர்கள் வாய்மொழி மூலமாகவே திருத்தமான விடைகள் சொல்லும்படிச் செய்யவேண்டும். வகுப்பிலோ, அல்லது வீட்டு வேலையாகவோ எழுத்து வேலைகள் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. வீட்டிற்கு அப்புத்தகங்களை எடுத்துக்கொண்டு செல்ல விரும்பும் மாணவர்கள் அவற்றை எடுத்துக்கொண்டு போகலாம். ஆனல் அவற்றைப் பத்திரமாகவும், கிழித்து விடாமலும் திருப்பிக்கொண்டு வரும்படிச் செய்யவேண்டும். இம்மாதிரியான முறையில் நூல் நிலையப் புத்தகங்களைக் குழந்தைகளுக்குப் படிக்கக் கொடுப்பதால் மாணவர்கள் தாய்மொழியை மிகுந்த ஆர்வத்துடன் கற்பதோடு, தங்கள் கருத்துக்களைப் பிழையின்றியும், திருத்தமாகவும் பேச விரைவில் கற்றுக்கொள்ளுவார்கள்.

ஆறு, ஏழு, எட்டாம் வகுப்புக்கள்

இவ்வகுப்புக்களிலுள்ள மாணவர்களுக்குப் புத்தக நிலையப் படிப்புச் சொல்லிக் கொடுப்பதன் நோக்கங்களும், கீழ் வகுப்புக்களுக்குச் சொல்லிக் கொடுக்கும் நோக்கங்களும் ஒன்றேதான். ஆனல் மேல் வகுப்புக்களுக்குச் சொல்லிக்கொடுக்கும் பொழுது நடைமுறையில் சில மாறுதல்கள் உண்டு. மேல் வகுப்புக்களுக்கு வாரந்தோறும் நூல் நிலையப் படிப்பிற்காக ஒரு காலத்தை (Period) ஒதுக்கிவைக்க வேண்டும். இக்காலம் (Period) பள்ளி நேரங்களில் இல்லாவிட்டால், பள்ளி ஆரம்பிக்கும் முன்பு காலை

யிலோ, அல்லது முடிந்த பின்னர் மாலையிலோ வைத்துக் கொள்ளலாம். வகுப்பு நேரத்தில் மாணவர்களுக்குப் புத்தக நிலையப் படிப்பில் இரண்டு வகைகளில் பயிற்சி கொடுக்கலாம். ஒன்று, ஆசிரியர் ஒரு வகுப்பை நான்கு குழுக்களாகப் பிரிக்க வேண்டும். ஒவ்வொரு குழுவிற்கும் ஒரு தலைவனை நியமிக்க வேண்டும். ஒவ்வொரு குழுவிலும் பத்து மாணவர்களுக்குக் குறையாமல் இருக்கவேண்டும். ஆசிரியர் ஓர் ஆண்டில் ஒரு வகுப்பு மாணவர்களின் தேர்ச்சித் தரத்திற்குத் தகுந்தாற்போல எழுதப் பட்டுள்ள சில புத்தகங்களைப் பள்ளிப் புத்தக நிலையத்திலிருந்து தேர்ந்தெடுத்து வகுப்புப் புத்தக நிலையத்தில் (Class Library) வைத்துக்கொள்ள வேண்டும். அப்புத்தகங்களை வகுப்பில் எத்தனை குழுக்கள் இருக்கின்றனவோ அத்தனை பிரிவு களாகப் பிரிக்கவேண்டும். ஒவ்வொரு பிரிவுப் புத்தகங்களும் ஒரே மாதிரியான புத்தகங்களாகப் பத்திற்குக் குறையாமல் இருக்கவேண்டும். ஒரே மாதிரியான பத்துப் புத்தகங்களையும் ஒவ்வொரு குழுவிற்கும் கொடுக்கவேண்டும். இங்ஙனம் ஒரு வாரத்தில் ஒரு வகுப்பிலுள்ள நான்கு குழுக்களும் நான்கு வகையான புத்தகங்களைப் பெற்றிருக்கும். ஒரு குழு ஒரு வாரமோ அல்லது பதினைந்து நாட்களோ அப்புத்தகங்களை வைத்திருக்கலாம். பின்னர் அப்புத்தகங்களை மற்றொரு குழு வாங்கிக்கொள்ளும். இங்ஙனமே ஓர் ஆண்டிற்குள் ஒரு வகுப்பி லுள்ள எல்லாக் குழுக்களும் எல்லாப் புத்தகங்களையும் படித்து விடலாம்.

இம்மாதிரியான புத்தக நிலையப் படிப்புத் தொடங்குமுன்னர் ஆசிரியர் முன் சொன்ன மாதிரியாகப் புத்தகங்களைத் தேர்ந்து வைத்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு வகைப் (set) புத்தகங் களையும் ஆசிரியர் படித்து அவற்றில் சில கேள்விகளைத் தயாரித் துக்கொள்ள வேண்டும். கேள்விகள் மாணவர்களின் அகலப் படிப்பை மட்டும் சோதிக்கக்கூடியனவாக இருக்கவேண்டுமே தவிர, ஆழப் படிப்பிற்கு உரியனவாக இருத்தல் கூடாது. ஒவ்வொரு குழுவிற்கும் அப்புத்தகங்களைக் கொடுக்கும்பொழுதே ஆசிரியர் அப்புத்தகங்களுக்கு உரிய கேள்விகளையும் கொடுத்து விட வேண்டும். மாணவர்கள் அப்புத்தகங்களை வாய்க்குள் ளாகவே படிக்க வேண்டும். ஒவ்வொரு குழுவிற்கும், தமிழ் அகராதி கொடுக்க வேண்டும். தெரியாத வார்த்தைகளுக்கு மாணவர்களே அகராதிகளைப் பார்த்துப் பொருள் தெரிந்து கொள்ள வேண்டும். இப்புத்தகங்களை மாணவர்கள் வீட்டிற்கும்

எடுத்துச் செல்லலாம். அடுத்த வகுப்பிற்கு வருவதற்குள் ஆசிரியர் கொடுத்த வினக்கள் அனைத்திற்கும் விடை எழுதி வருதல் வேண்டும். அடுத்த வகுப்பில் குழுவாரியாக ஆசிரியர், அவ்விடைகளை மாணவர்களைப் படிக்கும்படிச் செய்து பிழைகளைத் திருத்தலாம். இம்முறையால் தாய்மொழியில் மாணவர்களின் வாய்மொழிப் பயிற்சியும், எழுத்து மொழிப் பயிற்சியும் வளர்ச்சியடையும்.

வேறொரு வகையிலும் நூல் நிலையப் படிப்பில் பயிற்சி கொடுக்கலாம். ஒவ்வோர் ஆசிரியரும் மேற்கண்ட முறையில் குழுமுறைப் படிப்பிற்கும் புத்தகங்கள் தேர்ந்தெடுக்காமல், அவ்வகுப்பிற்குத் தகுதியான பல வகையான புத்தகங்களைப் பள்ளி நூலகத்திலிருந்து தேர்ந்தெடுத்து வகுப்பு நூல் நிலையத்தில் வைத்துக்கொள்ளலாம். முன் மாதிரி இல்லாமல் இப் புத்தகங்களில் ஒவ்வொன்றும் பல மாதிரியாக இருக்கும். இவ்வகையாக ஒவ்வொரு வகுப்பிற்கும் ஓர் ஆண்டிற்குச் சுமார் நூறு புத்தகங்களைத் தேர்ந்தெடுத்து வைத்துக்கொள்ளலாம். இம்மாதிரியாகப் பொறுக்கப்பட்ட புத்தகங்களிலும் பொருள் (Matter), நடை இரண்டும் ஒவ்வொரு வகுப்பிற்கும் பொருத்தமாக இருக்கவேண்டும். இப்புத்தகங்களையும் ஆசிரியர் முன்னரே நன்கு படித்திருக்க வேண்டும். மாணவர்களுக்கு விருப்பமில்லாத புத்தகங்களையோ, அழகான கட்டு அமைப்பு இல்லாத புத்தகங்களையோ தேர்ந்தெடுத்தல் கூடாது. இப்புத்தகங்கள் இரு வகையான புத்தகங்களாக இருக்கலாம். ஒருவகைப் புத்தகங்கள் கதைகளையும், கதைப் பாட்டுக்களையும், நல்ல படங்களையும், வரலாற்றுப் பகுதிகளையும் கொண்டவையாகவும் நகைச் சுவை கொண்டவையாகவும் இருக்கவேண்டும். இவை மாணவர்கள் ஓய்வு நேரத்தில் உற்சாகத்துடன் (Reading for enjoyment) படிக்கக்கூடிய புத்தகங்கள். இன்னொரு வகை உந்து வண்டிகளைப் (Motor Car) பற்றியும், மின் சக்தியைப் (Electricity) பற்றியும், கூட்டுறவைப் (Co-operation) பற்றியும், இன்னும் இவற்றைப்போன்று மாணவர்களுக்குப் புதிய பொருள்களைக் (New information) கொடுக்கக் கூடியனவாகவும் இருக்கவேண்டும்.

இப்புத்தகத்தில் மாணவர்களுக்குக் கொடுக்கும் பயிற்சிகள்

முன்மாதிரியே ஒரு வாரத்திலோ, அல்லது மாதம் இரு முறையோ இப்படிப்புக்கென வகுப்பு நேரத்திலேயே ஒரு காலம்

(Period) ஒதுக்கி வைக்கவேண்டும். வகுப்பு நூல் நிலையத்தில் முன்கூறியவாறு புத்தகங்கள் அழகாகவும், ஒழுங்காகவும் அடுக்கப்படல் வேண்டும். அப்புத்தகங்களைப் பார்த்த மாணவர்கள் தமக்கு வேண்டும் புத்தகங்களை எடுத்துக்கொள்ளலாம். வகுப்பிலேயே வாய்க்குள்ளாகவே படிக்க வேண்டும். வகுப்பில் முடிக்க முடியாவிட்டால் வீட்டிற்கும் எடுத்துச் செல்லலாம். இம் முறை குழுமுறை அல்ல; தனித்தனி மாணவர்கள் பயிலும் முறை. மாணவர்கள் அப்புத்தகங்களைப் படித்துக் கீழ்க்கண்ட முறையில், உரிய குறிப்புப் புத்தகத்தில் பயிற்சி எழுதிக்கொண்டு வரும்படிச் சொல்லவேண்டும்.

1. இம்மாதிரியாக எழுதிக்கொண்டு வந்தவற்றை அடுத்த வகுப்புக்களில் ஒவ்வொரு மாணவனையும் படிக்கும்படிச் செய்ய வேண்டும்.

2. நூல் நிலையப் புத்தகங்களில் மாணவனுக்குப் பிடித்தமாக இருந்த பகுதிகளின் கருத்துக்களை வகுப்பில் சொல்லும்படிச் செய்யலாம்.

3. ஒவ்வொரு வகுப்பிற்கும் நான்கு ஐந்து அகராதிகள் கொடுத்து அவற்றைப் பார்க்கும்படிப் பழக்கலாம். இங்ஙனம் பார்த்துத் தெரிந்துகொண்ட வார்த்தைகளை அகர வரிசையில் எழுதி அவற்றிற்குப் பொருளையும் எழுதும்படிச் செய்யலாம்.

4. சில புத்தகங்களின் அதிகார அகராதியையும், செய்யுள்களின் முதற்குறிப்பு அகராதியையும் (Index) எழுதும்படிச் செய்யலாம்.

5. எழுத்துப் பயிற்சிக் கட்டுரைகளின் (Written Composition) தலைப்புக்களைக் கொடுத்து அவற்றிற்கு வேண்டிய கருத்துக்கள் அடங்கிய புத்தகங்களின் பெயர்களையும் கொடுத்தால் மாணவர்கள், அக்கருத்துக்கள் கொண்ட புத்தகத்தை வகுப்பு நூல் நிலையத்திலிருந்து எடுத்து ஆவலுடன் படிப்பார்கள். இம் மாதிரியான சந்தர்ப்பங்களில் வகுப்பிலுள்ள சுமார் நாற்பது மாணவர்களுக்கும் ஒரே மாதிரியான நாற்பது புத்தகங்கள் இரா. ஒரு மாணவனை அப்புத்தகத்தைப் படிக்கச்சொல்லி, அடுத்த மாணவர்களைப் படித்தவற்றின் சுருக்கத்தைச் சொல்லும்படிச் சொல்லி, அச்சுருக்கத்தை ஆசிரியர் கரும்பலகையில் எழுதிப் போடலாம்.

6. உணர்ச்சி ததும்பிய பேச்சு ஏதாவது தாம் படித்த நூலில் காணப்பட்டால் அதை மனனம் செய்து ஒப்பிக்கும்படிச் சொல்லலாம். ஆனால் மாணவர்களை வற்புறுத்துதல் கூடாது. இம்மாதிரியான வேளைகளில் மாணவர்களுக்கு உற்சாகம் ஊட்டுவது ஆசிரியர்களின் கடமையாகும்.

7. செயல்முறைத் திட்டமுறையில் (Project Method) பாடம் நடந்தால் மாணவர்களைத் தங்களுக்கு வேண்டிய கருத்துக்களைக் (Matter) கொண்ட புத்தகங்களை எடுத்துப் படித்துப் பார்த்து அவற்றைக் குறிப்புப் புத்தகத்தில் எழுதும்படிச் செய்யலாம்.

8. சில சமயங்களில் நூல் நிலையப் படிப்பை, ஆழப் படிப்பிற்கு (Detailed Study) உறுதுணையாகவும் வைத்துக்கொள்ளலாம். எங்ஙனம் என்றால் ஆழப் படிப்பிற்கு உரிய பாடப் புத்தங்களில் நல்ல உரைநடை எழுதக்கூடிய ஆசிரியர்களின் கட்டுரைகள் அல்லது கதைகள் ஆகியவற்றின் ஒரு பகுதியே காணப்படும். அந்நடையில் பற்றுள்ள மாணவர்கள், அவ்வாசிரியர்கள் எழுதியுள்ள மற்றக் கட்டுரைகளையும், கதைகளையும் படிக்க விரும்புவார்கள். அப்படிப்பட்ட புத்தகங்களை நூல் நிலையங்களில் வைத்திருக்கவேண்டும். விருப்பமுள்ள மாணவர்கள் அப்புத்தகங்களை எடுத்துப் படித்து, அம்மாதிரியான நடையைத் தாங்களும் எழுதக் கற்றுக்கொள்ளுவார்கள்.

சில மாணவர்கள் சில கவிஞர்களின் செய்யுள்களைப் படித்துப் பார்த்த பின்னர் அக்கவிஞர்களின் முழு நூல்களையுங்கூடப் படிக்க விரும்புவார்கள். அச்சமயம் அவர்கள் விரும்பும் கவிஞர்கள் எழுதிய நூல்களை அம்மாணவர்களுக்குக் கொடுக்க வேண்டும். அவர்கள் அப்புத்தகங்களைப் படித்துத் தாங்களும் அம்மாதிரியான சிறுசிறு பாக்கள் எழுத முயலலாம். மாணவர்களுக்குள்ளே பொதிந்துள்ள ஆற்றல்கள் எல்லாம் தாய்மொழி மூலமாகவே வெளிவருவது இயற்கை. ஆகவே இம்மாதிரியான சந்தர்ப்பங்களில், தாய்மொழி பயிற்றும் ஆசிரியர்கள் மாணவர்களின் ஊக்கத்தையும், உற்சாகத்தையும் குறைக்காமல், நூல் நிலையப் படிப்பு மூலம் மாணவர்களின் வாய்மொழிப் பயிற்சியையும், எழுத்துப் பயிற்சியையும், சிந்தனை சக்தியையும் வளர்க்க வேண்டியது மிகவும் இன்றியமையாததாகும்.

புத்தக நிலையங்களுக்குப் புத்தகங்கள் தேர்ந்தெடுக்கும் காலத்தில் அனுசரிக்க வேண்டியவை

1. எந்த வகுப்பிற்குப் புத்தகங்களைத் தேர்ந்தெடுக்கின்றேமோ அந்த வகுப்பிலுள்ள மாணவர்களின் அறிவுத் தரத்திற்குத் தகுந்தாற் போல், அப்புத்தகங்களிலுள்ள நடையும், பொருளும் (Matter) இருக்கவேண்டும். இவை கடினமாக இருத்தல் கூடாது.

2. அவற்றில் மாணவர்களுக்கு விளங்காத இலக்கணச் சொற்களோ, புராண, இதிகாச வரலாற்றுப் பகுதிகளோ ஏராளமாக இருத்தல் கூடாது.

3. சொற்கள் சந்தி பிரித்து எழுதப்பட்டிருத்தல் வேண்டும்.

4. புத்தகங்களின் கட்டுக் கோப்பும், அட்டைகளும் நன்ருகவும் அழகாகவும் அமைந்திருத்தல் வேண்டும்.

5. அவற்றிலுள்ள படங்கள் தெளிவாகவும், அழகாகவும் இருக்கவேண்டும்.

6. அச்சுப் பிழைகள் இல்லாமலும், வரிகள் நெருக்கமாக இல்லாமலும் காகிதம் ஊருமலும் இருக்க வேண்டும். நிறுத்தக் குறிகளும் உரிய இடங்களில் குறிக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

மேற்கண்ட விதிகளுக்குப் பொருத்தமான புத்தகங்களையே தாய்மொழி ஆசிரியர்கள் தேர்ந்தெடுத்து, மாணவர்களுக்கு உரிய நூல் நிலையங்களில் வைக்கவேண்டும்.

அகலப் படிப்பும் பள்ளி வாசகசாலையும்

ஒவ்வொரு பள்ளியிலும் தனியான ஓர் அறை வாசகசாலையாக இருக்கவேண்டியது மிக அவசியமாகும். அவ்வறையில் நல்ல கண்ணுடிக் கதவுகள் உள்ள அலமாரிகளும், திறந்த அடுக்குத் தட்டுகளும் (Racks) இருக்க வேண்டும். அவற்றேடு மாணவர்கள் நின்றுகொண்டே வைத்துப் படிக்கக்கூடிய உயரமான சாய்வு மேசைகளும் இருக்கவேண்டும். அவ்வறையில் தினசரித் தாள்களும், வாரப் பத்திரிகைகளும், மாதப் பத்திரிகைகளும் இருக்க வேண்டும். தினசரிப் பத்திரிகைகள் இரண்டு விதமான கருத்துக்களைக் கொண்டனவாகவும் இருக்கலாம். வாரப் பத்திரிகைகளும் மாதப் பத்திரிகைகளும் மாணவர்களுக்குப் பொருத்

மானவையாகவே இருக்கவேண்டும். அவையெல்லாம் அத்தட்டுக்களில் (Racks) வைக்கப்பட்டிருத்தல் வேண்டும். காலையில் பள்ளிக்கூடம் ஆரம்பிப்பதற்கு முன்னரும், இடைவேளையிலும், மாலையில் பள்ளி முடித்த பின்னரும் அவ்வாசகசாலை திறந்து வைக்கப்பட்டிருத்தல் வேண்டும். ஒரு நாளைக்கு இரு மாணவர்கள் வீதம் அவ்வாசகசாலையின் பொறுப்பை ஏற்றுப் பார்த்துக் கொள்ளவேண்டும். மற்ற மாணவர்கள் வாசகசாலைக்குள்ளாகவே அவற்றைப் படித்துவிட்டு, அத்தட்டிலேயே வைத்துவிட்டுச் செல்லவேண்டும்.

தினம் ஒவ்வொரு வகுப்பு மாணவர் தலைவனையும் தினசரிப் பத்திரிகையின் தலைப்புச் செய்திகளை (Headlines) பள்ளி விளம்பரப் பலகையில் எழுதுமாறு செய்யவேண்டும். மற்ற மாணவர்கள் அனைவரும் அச்செய்திகளைத் தங்களுடைய குறிப்புப் புத்தகத்தில் எழுதிக் கொள்ளும்படிச் செய்யவேண்டும். தலைப்புச் செய்திகளை எழுதிக்கொண்ட மாணவர்கள் மேலும் அவற்றைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்று வாசகசாலைக்குள் சென்று தினசரித் தாள்களைப் படிப்பார்கள். இதனால் அவர்களுடைய உலகியல் அறிவு அதிகமாகும். ஒரே பொருளைச் சில சமயங்களில் இரண்டு பத்திரிகைகள் இரண்டு விதமாக எழுதுவதும் உண்டு. அம்முரண்பட்ட கருத்துக்களைப் படித்த மாணவர்கள் ஆசிரியர்களிடம் அவற்றைக் கேட்டு ஐயத்தைத் தீர்த்துக்கொள்ளுவார்கள். மாதம் ஒரு முறை திறமைமிக்க மாணவர்களைக் கொண்டு, மாணவர்கள் இலக்கிய மன்றத்தில் சில தலைப்புக்களைக் கொடுத்து விவாதிக்கும்படிச் செய்யலாம். இதனால் மாணவர்களுக்குத் தினசரித் தாள்களிலிருந்து செய்திகளைத் தெர்குக்கவும், தொகுத்தவற்றைப் பின்பு தலைப்புக்குத் தகுந்தாற்போல் வகுக்கவும் வேண்டிய எழுத்துப் பயிற்சி ஏற்படுகின்றது. அவற்றைப்பற்றி மாணவர் மன்றங்களில் விவாதிக்கும்பொழுது மாணவர்களின் வாய்மொழிப் பயிற்சியும் விருத்தி அடைகின்றது.

வார, மாத இதழ்களை மாணவர் வாசகசாலைக்கு அனுப்புவதற்கு முன்னர் அவற்றை ஆசிரியர்கள் ஒரு முறை மேலோட்டமாகவாவது படித்துப் பார்ப்பது மிக அவசியம். சிற்சில சமயங்களில் பத்திரிகைகளின் மேல் அட்டைகளிலுள்ள கண்கவர் படங்கள் மாணவர்களின் கருத்துக்களையும், உள்ளங்களையும் கெடுத்துவிடக் கூடியனவாக இருக்கின்றன. அப்பொழுது

அப்படங்களை மட்டும் நீக்கி விடுதல் நலம். சில சமயங்களில் மாணவர்களுக்கு வேண்டிய சிறப்பான கட்டுரைகள், கதைகள் இருப்பதை ஆசிரியர்கள் கீழ்க்கண்ட முறையில் விளம்பரப் பலகையில் எழுதிப் போடலாம்.

இவ்வாரக் கல்கியில் 10-ஆம் பக்கத்தைப் படித்துப் பார்க்க.

இதைப் பார்த்த மாணவர்கள் அப்பத்திரிகையில் அப்பக்கத்தை உடனே சென்று படிப்பார்கள். அப்பக்கத்தில் மாணவர்களுக்கு வேண்டிய கதையோ, கட்டுரையோ காணப்படலாம். அதைப் படித்துப் பார்த்த மாணவர்கள் அதைத் தமிழ்க் கட்டுரை எழுதுவதற்கோ, அல்லது மாணவர் மன்றத்தில் பேசவோ, விவாதிக்கவோ உபயோகப்படுத்திக் கொள்ளுவார்கள். ஒவ்வொரு வாரத்திலும் பத்திரிகைகளில் படித்தவற்றைப் பற்றிச் சொல்லுவதற்கென ஒரு காலத்தை (Period) ஒதுக்கி வைக்கலாம். அக்காலத்தில் மாணவர்கள் ஒவ்வொருவராகத் தாங்கள் பத்திரிகைகளில் படித்தவற்றை எடுத்துக் கூறலாம். ஒரு மாணவன் ருஷ்யாவைப் பற்றியும், மற்றொரு மாணவன் இந்தியாவைப் பற்றியும், இன்னொரு மாணவன் அமெரிக்காவைப் பற்றியும் கூறலாம். இவ்விதமான பயிற்சி கொடுப்பதால் மாணவர்களின் அறிவு விரிவடைவதுடன், அவர்களுக்குத் தெளிவாகத் தாய்மொழியில் பேசவும், விவாதிக்கவும் சந்தர்ப்பம் ஏற்படுகின்றது. இம்மாதிரியாக மாணவர்கள் பத்திரிகைகளிலும், தினசரித் தாள்களிலும் படித்தவற்றை, தினசரி காலையில் நடக்கும் வழிபாட்டுக் கூட்டத்தில் வாரம் ஒரு முறை சில நிமிட நேரங்களில் எடுத்து இயம்பும்படிச் சொல்லலாம்.

### பாடத் திட்டங்களில் தமிழ்ப்பாடப் புத்தகங்களின் இடம்

மாணவர்கள் தாய்மொழியில் நல்ல தேர்ச்சி அடைய வேண்டுமானால் நல்ல பாடப் புத்தகங்கள் வேண்டும் என்பது திண்ணம். சிலர் பாடப் புத்தகங்கள் இல்லாமலே மாணவர்களுக்குக் கல்வி பயிற்றலாம் என்று சொல்லுகின்றார்கள். கருவிலேயே திருவுடைய ஒரு சில அறிஞர் மட்டும்தான் இயற்கையையே ஒரு பாடப் புத்தகமாக வைத்துக்கொண்டு அறிவுடையவர்களாக ஆகமுடியுமே தவிர, சாதாரண மக்கள் பாடப் புத்தகங்கள் இல்லாமல் கல்வி பயில முடியாது. பாடத் திட்டங்களும், அவற்றைத் தழுவி எழுதப்பட்ட பாடப் புத்தகங்களும் ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் மிக இன்றியமையாதவை

யாகும். பாடப் புத்தகங்கள் இல்லாவிட்டால் ஆசிரியர்களும் எம் மாதத்தில் எந்தப் பாடங்களை முடிப்பது என்று தெரியாமலும், ஒரு வரையறை இல்லாமலும் கண்டவாறு பாடங்களை நடத்த நேரிடும். அம்மாதிரியான சமயத்தில் ஒரே வகுப்பில் இரண்டு மூன்று பிரிவுகள் இருந்துவிட்டால் நடைமுறையில் இன்னும் சிரமங்கள் அதிகமாகிவிடும். ஒரு வரையறையும் திட்டமும் இல்லாமல், ஒவ்வொரு பிரிவைச் சேர்ந்த ஒவ்வோர் ஆசிரியரும் தம் விருப்பம் போல் பாடப் புத்தகம் இன்றி, மாணவர்களுக்குத் தாய்மொழியைக் கற்பிப்பார்களானால், பிறகு எல்லாப் பிரிவுகளுக்கும் பொதுவான காலாண்டு, அரையாண்டு, முழு ஆண்டுத் தேர்வுகளுக்குக் கேள்விகள் கேட்க முடியாமல் போய்விடும். ஆகவே தற்காலத்தில் மாணவர்கள் கல்வி பயிலவும் ஆசிரியர் கற்பிக்கவும் பாடப் புத்தகங்கள் மிக அவசியமானவையே.

ஆனால் அதே சமயத்தில் ஆசிரியர்களும் மாணவர்களும் பாடப் புத்தகங்களுக்கு ஓர் அடிமையாக ஆகிவிடக் கூடாது. பிற்காலத்தில் மாணவன் ஒருவன் தன் வாழ்நாளில் தன் எண்ணங்களைத் தாய்மொழியில் தடையின்றியும், தெளிவாகப் பேசவும் எழுதவும், பல கருத்துக்கள் உடைய புத்தகங்களைப் படித்து அவற்றைத் தெரிந்து கொள்ளுவதற்காகவும், சிற்றிலக்கியங்களையும், பேரிலக்கியங்களையும் ஓய்வு நேரத்தில் படித்து இன்புறுவதற்காகவும் பாடப் புத்தகங்களை ஓர் ஏணியாகவும், ஒரு வழி காட்டியாகவும் வைத்துக் கொள்ள வேண்டும். அவையே எல்லாம் என எண்ணி அவற்றைப் படிப்பதோடு நின்றுவிடக் கூடாது. ஏணியில் ஏறிய ஒருவன் ஏணியிலேயே நின்றுவிட்டானானல் மேல் மாடிக்குச் செல்ல முடியாது அல்லவா? வேறு ஊருக்குச் செல்லும் ஒருவன் வழியிலேயே நின்றுவிட்டானால் தான் செல்லும் ஊருக்குப் போய்ச் சேரவே முடியாது அல்லவா? அங்ஙனமே ஆசிரியரும், மாணவர்களும் பாடப் புத்தகங்களுக்கு அடிமையாகி வேறு புத்தகங்களை விரித்தும் பார்ப்பதில்லை என்று இருந்து விட்டார்களானால், எந்த நோக்கம் கொண்டு மாணவர்கள் தாய்மொழியைப் பயிலுகின்றார்களோ அந்த நோக்கங்களே நிறைவேறாமற் போய்விடும்.

பாடப் புத்தகங்களில் காணப்படும் சில பாடங்களைப் படித்த மாணவர்களுக்கு அந்த உரைநடையையும், செய்யுள்களையும் எழுதிய ஆசிரியரின் மற்ற நூல்களையும் படிக்க விருப்பம் ஏற்படுவது இயற்கை. அங்ஙனம் விருப்பம் ஏற்படும் மாணவர்களுக்கு

அத்தகைய புலவர் நூல்களை அறிமுகப்படுத்தி அவற்றின் சில பகுதிகளையாவது பயிலுவதற்கு உறுதுணை புரியவேண்டியது ஆசிரியர்களின் கடமை ஆகும். அங்ஙனம் மாணவர்களுக்கு வேண்டிய ஊக்கமளிக்காவிட்டாலும், அவர்களுடைய ஊக்கம் குறையும் முறையில் ஆசிரியர்கள் அவர்களிடம் பேசினாலும் மாணவர்கள் மனம் மாறிப்போய் விடும். மனம் மாறிய மாணவர்களுக்கு ஆசிரியர்களிடமும் நூல்களிடமும் வெறுப்பு ஏற்பட்டு எதிர்கால வாழ்க்கையில் அம்மாணவர்கள் இலக்கிய இன்பம் இல்லாதவர்களாகவே ஆகிவிடுவார்கள் என்பது உறுதி.

பாடப் புத்தகங்கள் எங்ஙனம் இருக்க வேண்டும்?

(அ) பொருள்

*1.* பாடப் புத்தகங்களிலுள்ள பொருளும் (Matter) நடையும் (Style) வகுப்புக்களுக்கு உரிய தரத்தில் இருக்க வேண்டும். ஒரு பாடப் புத்தகம் புரிந்துகொள்ளாத முறையில் எழுதப்பட்டிருந்தாலும், மிகச் சுலபமான நடையில் எழுதப்பட்டிருந்தாலும், மாணவர்கள் அவற்றைப் படிப்பதில் ஊக்கம் காட்ட மாட்டார்கள். ஆகவே பாடப் புத்தகங்களின் முதல் அழகு, அவற்றில் எழுதப்பட்ட சொல்லும், பொருளும் உரிய வகுப்பிற்குப் பொருத்தமாக இருத்தலேயாகும்.

*2.* இரண்டாவதாகப் பாடப் புத்தகங்களிலுள்ள பாடங்கள் அளவோடு இருக்க வேண்டும். அங்ஙனமின்றிப் பாடங்கள் மிக நீண்டவையாகவும், புத்தகங்கள் வேண்டிய அளவிற்குமேல் மிகப் பெரியனவாகவும் இருந்தால் அவற்றைப் படிக்கும் மாணவர்களுக்கு மனச் சலிப்பு ஏற்பட்டுவிடும். இப்படி ஏற்படும் சலிப்பு நாளடைவில் வெறுப்பாக மாறி, மாணவர்கள் புத்தகங்களைக் கண்டாலே வெறுக்க ஆரம்பித்து விடுவார்கள். அங்ஙனமின்றிப் புத்தகங்களும், அவற்றிலுள்ள பாடங்களும் அளவோடு இருந்தால் மாணவர்கள் அவற்றை விரைவில் படித்து விடுவார்கள். அவற்றைப் படித்து முடித்து விட்டோம் என்னும் எண்ணம் அவர்களிடத்தில் ஒருவிதத் தன்னம்பிக்கையை உண்டாக்கும். அத்தன்னம்பிக்கையே மாணவர்களை மேன்மேலும் வேறு புத்தகங்களைப் படிப்பதற்குத் தூண்டிவிடும்.

*3.* சிறு வகுப்புக்களுக்கு உரிய பாடப் புத்தகங்களிலுள்ள பாடங்கள் மாணவர்கள் அறிந்துள்ளதும், அவர்கள் அண்மையில் உள்ளதுமான சூழ்நிலையில் காணப்படும் பொருள்களைப்

பற்றியே எழுதப்பட்டு உள்ளனவாக இருத்தல் வேண்டும். அங்ஙனமின்றிப் பொருள்கள் முற்றிலும் அவர்களுடைய அனுப வத்திற்கு அப்பாற்பட்டவையாக இருந்தால், சிறு மாணவர்கள் தாய்மொழியைக் கற்பது கடினமாகிவிடும்.

4. பாடப் புத்தகங்களிலுள்ள உரைநடைப் பகுதிகள் பலவிதமான கருத்துக்களைக் கொண்டனவாக இருக்க வேண் டும். உரையாடல்கள் சிறு நாடகங்கள், கடிதங்கள், சுயசரிதம், கதைப்பகுதிகள், சிந்தனைக் கட்டுரைகள், வாழ்க்கை வரலாறு, இடத்தையோ, பொருளையோ விவரித்துக் கூறுவன ஆகிய பல்வேறு துறைகளில் இருத்தல் வேண்டும்.

5. ஐந்தாவது வகுப்பு முடிய உள்ள பாடப் புத்தகங்களி லுள்ள உரைநடைப் பகுதிகள், பாடப் புத்தகங்கள் எழுதுகின்ற வர்களின் சொந்த நடையில் எழுதப்பட்டவையாக இருக்க வேண்டும். அதற்கு மேலுள்ள வகுப்புக்களுக்கு உரிய பாடப் புத்த கங்களில் பேராசிரியர்கள் நூல்களில் காணப்படும் பகுதிகளில் மாணவர்களுக்குப் பொருத்தமானவற்றை எடுத்து ஆங்காங்கே சேர்க்கலாம். அப்பொழுதுதான் மாணவர்களுக்கு இலக்கியங் களில் பற்றுதல் உண்டாகும்.

6. செய்யுட் பகுதியில் வாழ்த்து, அறவுரை, தொடர்நிலைச் செய்யுள், பல்சுவைப் பகுதிகள் ஆகிய செய்யுட்களைத் தேர்ந் தெடுத்துச் சேர்க்கவேண்டும். கீழ் வகுப்பிற்குரிய செய்யுட்கள் பெரும்பாலானவை அபிநயப் பாட்டுக்களாகவும், கதைப் பகுதிகளாகவும் இருக்க வேண்டும்.

7. பாடப் புத்தகங்களில் ஒவ்வொரு பாட முடிவிலும் வினாக்கள் குறிக்கப்படல் வேண்டும். வினாக்கள் அப்பாடப் பகுதியிலுள்ள பொருளை மாணவர்கள் நன்றாகப் புரிந்து கொண்டார்களா என்பதைப் பல கோணங்களிலிருந்தும் பரிசோ திக்கக்கூடியனவாக இருக்க வேண்டும். இலக்கணத்தைப் பற்றிய வினாக்களும் அரும்பத உரைகளும் சேர்க்கவேண்டும்.

8. துணைப்பாடப் புத்தகங்கள் எல்லாம் மாணவர்கள் தங்களுக்குத் தாங்களாகவே அகராதிகளின் துணைகொண்டு படித்து அறிந்து கொள்ளக்கூடிய அகலப் படிப்பிற்கு உரியவை. ஆகையால் அவற்றில் காணப்படும் பொருளும் (Matter), நடை யும், உரிய வகுப்பு மாணவர்களுக்குப் புரியும் தன்மையில் எழுதப் பட்டிருத்தல் வேண்டும்.

9. ஒரு பாடம் பல பத்திகளாகப் பிரித்து இருத்தல் வேண்டும். ஒவ்வொரு பத்தியின் ஆரம்பத்திலும் தலைப்பு எழுதப்பட்டிருத்தல் வேண்டும். அத்தலைப்பு அப்பத்தியில் காணப்படும் பொருளின் சுருக்கமாகவும், அப்பொருளை அறிமுகப்படுத்தி வைப்பதாகவும் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் மாணவர்கள் அப்பாடங்களை ஆவலுடன் படித்தறிந்து கொள்ள முயலுவார்கள்.

10. துணைப்பாடப் புத்தகங்களில் இடையிடையே செய்யுட் பகுதிகளைச் சேர்க்கக் கூடாது. அப்படி ஏதாவது அவசியமாகச் சேர்த்தால் அவற்றின் பொருளை அதன் பக்கத்திலேயே பிறைக்குள் (Brackets) எழுதிவிட வேண்டும்.

(ஆ) புத்தகத்தின் கட்டுக்கோப்பு ஆகியவை

1. கீழ் வகுப்புக்களுக்கு உரிய புத்தகங்களின் மேல் அட்டைகள் பருமனாக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவற்றைக் கையாளும் குழந்தைகள், அடிக்கடி புத்தகங்களைக் கெடுத்து வீணாக்கி விடுவார்கள். அதனால் ஆண்டு ஒன்றுக்குப் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்கு இரண்டு மூன்று பிரதிகள் வாங்கிக் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிடும்.

2. அட்டைகளின் வெளிப் பக்கங்களில் குழந்தைகளின் கண்களையும், கருத்துக்களையும் கவரக்கூடிய நல்ல வர்ணப் படங்கள் வரையப்பட்டிருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் குழந்தைகள் அப்புத்தகங்களை விரும்பிப் படிப்பார்கள்.

3. புத்தகங்கள் நல்ல, வழுவழுப்பான வெள்ளைக் காகிதங்களால் ஆக்கப்பட்டிருத்தல் வேண்டும். காகிதம் பழுப்பு நிறமாகவோ ஊறக் கூடியதாகவோ இருத்தல் கூடாது.

4. புத்தகங்களின் கட்டுக்கோப்பும் (Binding) உறுதியாக இருத்தல் வேண்டும்; அங்ஙனம் இருந்தால்தான் நீடித்த நாட்களுக்குப் பயன்படும்.

5. புத்தகங்களின் விலை சுமாராக இருத்தல் வேண்டும். புத்தகம் வெளியிடுவோர் இலாபம் ஒன்றையே கருதி வெளியிடக் கூடாது. அதிக விலை நிர்ணயிக்கப்பட்டால் ஏழை மாணவர்கள் அப்புத்தகங்களை வாங்க மிகச் சிரமப்படுவார்கள்.

6. சிறு வகுப்புக்களுக்கு உரிய பாடப் புத்தகங்களில் காணப்படும் பாடப் பொருளுக்குத் தக, ஒவ்வொரு பாடத்திலும்

படங்கள் இருக்கவேண்டும்; அப் படங்கள் பாடங்களை விளக்குவனவாக இருத்தல் வேண்டும். படங்கள் ஒரு பாடத்தின் தலைப்புக்குமேல் அச்சடிக்கப்பட வேண்டுமே தவிர, பாடத்தின் நடுவிலோ, அடியிலோ அச்சடித்தல் கூடாது. படம் சுத்தமாகவும், தெளிவாகவும் இருத்தல் வேண்டும்.

7. வரிகள் சுத்தமாக, ஒன்றின்மேல் ஒன்று ஏறிக்கொண்டு இல்லாமல் வார்த்தைகளுக்கு வார்த்தை இடம் விட்டு நன்ருகவும் தெளிவாகவும் அச்சடித்து இருத்தல் வேண்டும். நிறுத்தக் குறிகள், கொம்புகள் ஆகியவை தெளிவாக அச்சடிக்கப்பட்டிருத்தல் வேண்டும். ஒரு பத்தியின் முதல் வரி முதலிலிருந்தே ஆரம்பிக்காமல் நடுவிலிருந்து ஆரம்பிக்கப் பட்டிருத்தல் வேண்டும். ஒரு பத்திக்கும் இன்னொரு பத்திக்கும் இடைவெளி, வரிக்கு வரி இருப்பதைவிட அதிகமாக இருக்க வேண்டும்.

8. பக்க எண்கள் சுத்தமாகவும், பிழையின்றியும் அச்சடிக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

9. ஒவ்வொரு பாடத்தின் தலைப்பும் பெரிய எழுத்துக்களால் அச்சிடப்பட் டிருத்தல் வேண்டும்; அதைக் காட்டிலும் சிறிய எழுத்துக்களால் பத்தியின் தலைப்பும் அச்சிடப்பட்டிருத்தல் வேண்டும்.

10. தமிழ்ச் செய்யுட் பகுதியில் காணப்படும் பாக்கள் அடி பிறழாமலும், சீர் தவருமலும், உரிய முறையில் அச்சடித்திருத்தல் வேண்டும்.

11. ஒற்றுப் பிழைகளில்லாமலும் எழுத்துக்கள் விடாமலும் அச்சடிக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

பத்தாம் அத்தியாயம்

# இலக்கணம் சொல்லிக்கொடுக்கும் முறை

இலக்கணம் மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கவேண் டுமா, வேண்டாமா? சொல்லிக்கொடுக்க வேண்டுமானல் எப்படி எந்த வகுப்பிலிருந்து சொல்லிக் கொடுக்க வேண்டும்? இந்த வினக்களுக்கு விடை தருவதே இக்காலத்தில் பெரிய பிரச்சினை ஆகிவிட்டது. ஒரு சாரார், இலக்கணம் என்பது ஒரு பெரிய இரும்பு உலக்கை; அதை மாணவர்கள் காதுகளி லும் கருத்துக்களிலும் புகுத்துவது பெரிய சங்கடம்; ஆகவே இலக்கணமே மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டிய தில்லை; மாணவர்களிடமிருந்து இலக்கணப் புத்தகங்களையெல் லாம் பறித்து, அவற்றைச் சன்னல் வழியாக எறிந்துவிடவேண்டும் என வாதிக்கின்றனர்கள். இன்னொரு சாரார் இதற்கு நேர்மாருன கொள்கைகளைக் கொண்டவர்கள். அவர்கள், "இலக்கணப் படிப்பு மிக அவசியமானது; இலக்கணம் இல்லாவிட்டால் மொழியே அழிந்து போய்விடும்; ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது; ஆகவே இலக்கணத்தை மிக இளம் வயதிலிருந்து குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்துச் சூத்திரங்களை நெட் டுருப் போடச் செய்யவேண்டும்" என்று வாதிக்கின்றனர்கள். மூன்ருவது சாரார், "இலக்கணம் மிக அவசியந்தான். பொன் கத்தி என்ருல் கழுத்தை அறுத்துக்கொள்ளுவோமா? அதுபோல் நல்லதென்ருல் அதை மிகவும் இளைஞர்களாக இருக்கின்றவர் களுக்கு வற்புறுத்திச் சொல்லிக் கொடுக்க முடியுமா? அதை வயது வந்த மாணவர்களுக்கு நடைமுறை இலக்கணமாகத்தான் (Functional Grammar) சொல்லிக் கொடுக்கவேண்டும்" என்று வாதிக்கின்றனர்கள். பள்ளிக்கூடங்களில் தாய்மொழி சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்களோ; பாவம்! அவர்கள் என்னசெய்கின்ருர் கள் என்ருல் மேற்சொன்ன மூன்றுவிதக் கருத்துக்களையும் சிக்கல் களையும் புரிந்துகொள்ளமுடியாமல் தவிக்கின்றனர்கள். நடைமுறை இலக்கணம் (Functional Grammar) என்ருல் என்ன? விதி முறை இலக்கணம் (Formal Grammar) என்ருல் என்ன? முன்னதை எப்படிச் சொல்லிக் கொடுப்பது, பின்னதை எப்படிச் சொல்லிக் கொடுப்பது என்று தெரியாமல் விழிக்கின்றனர்கள். இம்

மாதிரியான குழப்பமான நிலையில் பெரும்பாலான தாய்மொழி ஆசிரியர்கள் 'என்ன செய்கின்றார்கள் என்றால், சென்ற ஆண்டு அரசாங்கத் தேர்வின் விடைத் தாள்களையோ, அல்லது ஆண்டு இறுதித் தேர்வின் தாள்களையோ எடுத்து அவற்றில் கண்டுள்ள கேள்விகளையும், இன்னும் அவை போன்ற கேள்விகளையும் பொறுக்கி அவற்றிற்கு விடையும் எழுதிக் கொடுத்து மாணவர்களை நெட்டுருப் போடும்படி வற்புறுத்தி, அவர்களைச் சோதனைக்குத் தயார் ஆக்குகின்றார்கள். இவ்வளவுதான் அவர்கள் கொடுக்கும் இலக்கணப் பயிற்சி.

எக்கொள்கையைப் பற்றுவது?

இம்மாதிரி சிக்கலான நிலையில் ஆசிரியர்கள் எக்கொள்கையைப் பின்பற்றி நின்று மாணவர்களுக்கு இலக்கணம் சொல்லிக் கொடுக்கவேண்டும் என்பதுதான் இப்பொழுது எழும் கேள்வி. எந்தச் சமயத்திலும் ஆசிரியர்கள் நடுவு நிலைமைக் கொள்கையை வகிப்பதே நல்லதாகும். 'இலக்கணமே சொல்லிக் கொடுக்க வேண்டாம்' என்ற கொள்கையும் வேண்டாம். 'இலக்கணத்திற்கே மாணவர்களை அடிமையாக்குவோம்' என்ற கொள்கையும் ஆசிரியர்களுக்கு வேண்டாம். இவை இரண்டிற்கும் பொதுவான கொள்கையைத் தாய்மொழி ஆசிரியர்கள் கடைப்பிடிப்பதே நலம்.

தாய்மொழி சொல்லிக் கொடுப்பதன் நோக்கம் என்ன? மாணவர்கள் தங்கள் உள்ளத்தில் தோன்றும் கருத்துக்களைப் பிழையறத் தாய்மொழியில் பிறருக்கு எடுத்துச் சொல்லவும் எழுதவும் நன்கு பயிற்சி பெற வேண்டும் என்பதே. இந்த நோக்கத்தை எப்படி நிறைவேற்ற வேண்டுமோ அதற்குத் தகுந்தாற்போல் இலக்கணத்தைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். அதுவே தாய்மொழி பயிற்றும் ஆசிரியர்களின் முக்கிய நோக்கமாக இருக்க வேண்டும்.

எவ்வகுப்புக்களிலிருந்து ஆரம்பிக்க வேண்டும்?

இந்நோக்கத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு எந்த வகுப்பிலிருந்து, எப்படி இலக்கணம் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்பதை ஆராய்வோம். "இலக்கியம் கண்டதற்குத் தான் இலக்கணம்." எள்ளுக்குப் பின்பு தான் எண்ணெய்; எள்ளுக்கு முன்பு கண்டிப்பாக எண்ணெய்

இருக்க முடியாது. அதுபோல மாணவர்கள் ஒரு சிறிதாவது மொழி அறிவு பெற்ற பின்புதான் அவர்களுக்கு இலக்கணம் சொல்லிக் கொடுக்க வேண்டும். மேலும் மக்கள் வாக்கியங்களாகவே ஒருவருக்கு ஒருவர் உரையாடுகின்றார்கள்; பெரியோர்களின் பேச்சைக் கேட்டு வளர்கின்ற குழந்தைகளும் அங்ஙனமே வாக்கியங்களாகத்தான் பேசக் கற்றுக் கொள்கின்றார்கள். அங்ஙனம் 5 வயது முடியக் கற்றுக்கொண்ட குழந்தைகள் 6-ஆம் வயது ஆரம்பத்தில் பள்ளிக்கு வருகின்றார்கள். அவர்கள் தங்களுடைய பெற்றோர்களிடத்தில் பேசுவதைப் போன்றே முழு வாக்கியங்களைத்தான் பேச முற்படுவார்கள். அம்மாதிரியான சந்தர்ப்பத்தில் ஆசிரியர்கள், ஒரு வாக்கியத்தை எடுத்துக் கொண்டு அதை எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் வேறாகவும், பெயர்ச் சொல், வினைச் சொல், இடைச் சொல், உரிச் சொல் வேறாகவும் பிரித்து அவற்றை மீண்டும் பொருத்திக் காட்டும்படியாகச் சொல்லிக் கொடுப்பது குழந்தைகளின் உள்ள நிலைக்கு ஒத்த முறையல்ல. ஆரம்ப நிலையில் முழு வாக்கியங்களை ஆசிரியர்கள் பிரித்துக் காட்டி, அதனால் வீட்டில் அவர்கள் வாக்கியங்களாகப் பேசிய முறைக்கு மாறுபட்டு இலக்கண விதிகளைப் புகுத்தினால் குழந்தைகள் தாய்மொழி கற்றுக் கொள்ளுவதில் ஊக்கங் குறைந்து அவர்கள் உள்ளங்களும் குன்றிப்போகும்.

முதல் நான்கு வகுப்புக்களில் விதிமுறை இலக்கணம் (Formal Grammar) மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டுவதே இல்லை. அதற்குப் பதிலாக நான்கு வகுப்புக்கள் முடியக் கீழ்க் கண்டபடி குழந்தைகளின் பேச்சு மொழியையும், எழுத்து மொழியையும் திருத்த வேண்டும். அங்ஙனம் திருத்தினால் மாணவர்கள் தாய்மொழியில் பேசுவதிலும், எழுதுவதிலும் நல்ல பயிற்சி பெற்று, ஐந்தாம் வகுப்பிலிருந்து இலக்கணம் படிப்பதற்குச் சிறந்த அடிப்படை அறிவைப் பெறுவார்கள்.

குழந்தைகள் ஐந்து வயது முடிந்து முதலாம் வகுப்பில் சேரும் பொழுது வீட்டில் பேசும் கொச்சை மொழியைத்தான் பேசுவார்கள். சில சமயங்களில் நம் சமூகத்தில் பல சூழ்நிலைகளிலிருந்து வரக்கூடிய குழந்தைகள் பல மாதிரியான கொச்சை மொழிகளைப் பேசுவதும் உண்டு. இக் கொச்சை மொழிகள் இடங்களுக்குத் தகுந்தாற்போல் மாறுவதும் உண்டு. உதாரணமாக ஒரு குழந்தை, "எங்கப்பா நவலாபுறத்திற்கு போயிட்டு நேத்து பொயிது எறங்க வந்துச்சு" என்று பேசும்.

இன்ஞெரு குழந்தை, "எங்காத்துலே இண்ணைக்கு சாத்தீர்த்தம் சாப்பிட்டா" எனப் பேசும். இன்ஞெரு குழந்தை, "எங்க அம்மாயி நாலேக்கு வாலப் பலம் வாங்கிட்டு வரும்" எனப் பேசும். இம்மாதிரியான கொச்சை மொழிகளைப் பேசும் குழந்தைகளை ஆசிரியர் மிக அன்புடனும், பண்புடனும், கூர்ந்து கவனித்து அவர்களிடம் கடுமையாகப் பேசாமலும், விரட்டாமலும் அக்கொச்சை மொழிகளை இலக்கண மொழிகளாகத் திருத்த வேண்டும். அங்ஙனம் திருத்துங் காலத்தில் ஒவ்வொரு வகையான கொச்சைச் சொற்களையும் சுமார் ஒரு வார காலம் கொடுத்துப் படிப்படியாக முதல் இரண்டு ஆண்டுகளில் வாய்மொழிப் பயிற்சியில் (oral drilling) திருத்த வேண்டும். உதாரணமாக முதலில் 'எங்காத்துலே' முதலிய கொச்சைச் சொற்களை "எங்கள் அகத்திலே" என்ற முறையில் திருத்திப் பேசச் சொல்லலாம்.

இம்மாதிரி முதல் வகுப்பு முழுவதிலும் திருத்தலாம். இரண்டாம் வகுப்பில் அவர்கள் பேசும் சொற்ஞெடர்களை எழுவாய், பயனிலே, செயப்படுபொருள் என்ற இலக்கணப் பெயர்களை அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்காமலேயே ஒரு சொற்ஞெடரில் அவை எந்த முறையில் அமைந்திருக்க வேண்டும் என்பதை வாய்மொழிப் பயிற்சியிலேயே சொல்லிக் கொடுக்கலாம். இம்மாதிரியான பயிற்சிகளும் ஆசிரியர் கொடுக்கக் கூடிய சொற்ஞெடர்களும் அவர்களின் பாடப் புத்தகங்களையும், சூழ்நிலேகளையும் ஒட்டியனவாக இருக்க வேண்டும். அங்ஙனமின்றி அச்சொற்ஞெடர் அவர்களுக்குப் பொருள் விளங்காததாகவோ, அவர்களுடைய அனுபவங்களுக்கு அப்பாற்பட்டதாகவோ இருந்தால் அவர்களின் ஊக்கம் குறைந்து போகும் என்பதை ஆசிரியர் அறியவேண்டும். மூன்ரும் வகுப்பில் 'ல,ள,ழ' இவற்றின் வேறுபாடுகளையும் 'ன', 'ண', 'ந', இவற்றின் வேறுபாடுகளையும், 'ற, ர' 'ங' ஞ' இவற்றின் வேறுபாடுகளையும் ஆசிரியர் வாய்மொழிப் பயிற்சி மூலம் நன்ருகவும், அழுத்தமாகவும், படிப்படியாகவும், திருப்பித் திருப்பியும் சொல்லிக் கொடுக்கவேண்டும். இவற்றைப் பிழையாக உச்சரிக்கும் மாணவர்களில் இருவகைகளைக் காணலாம். ஒரு வகை மாணவர்கள் இவ்வெழுத்துக்களைத் தனித் தனியாக உச்சரிக்கும் காலத்திலும் சரி, வார்த்தைகளில் வைத்து உச்சரிக்கும் காலத்திலும் சரி, அவர்களுக்கு அவற்றை நன்ருக உச்சரிக்கத் தெரிவதில்லே. இன்ஞெரு வகையான மாணவர்கள் அவ்வெழுத்துக்களைத் தனியாக உச்சரிக்கும் காலத்தில் சரியாக உச்சரிப்பார்கள்.

ஆனல் வார்த்தைகளோடு பொருத்திச் சொல்லும்பொழுது 'பலம்' என்று சொல்லவேண்டிய இடத்தில் 'பழம்'என்றும்,'வளம்' என்று சொல்லவேண்டிய இடத்தில்'வலம்'என்றும்,'மணம்'என்று சொல்ல வேண்டிய இடத்தில் 'மனம்' என்றும், 'மனம்' என்று சொல்ல வேண்டிய இடத்தில் 'மணம்' என்றும், 'பறவை' என்ற இடத்தில் 'பரவை' என்றும், 'பரவை' என்று சொல்லவேண்டிய இடத்தில் 'பறவை' என்றும் உச்சரிப்பார்கள். இம்மாதிரியான உச்சரிப்புப் பிழைகளைப் 10-ஆம் வகுப்பில் படிக்கும் மாணவர் களும்-ஏன், கல்லூரி படித்த பெரியோர்கள்கூடத் தாராளமாக, அவை பிழை அல்ல என்ற தப்பு எண்ணத்தாலேயே உச்சரிக் கின்றார்கள். கீழ் வகுப்புக்களில் சொல்லிக் கொடுக்கும்பொழுது இங்ஙனம் பிழைபட உச்சரிக்கின்றவர்களைக் கூர்ந்து கவனித்துப் பொறுமையுடன் அவர்களைத் திருத்தி, திரும்பத் திரும்ப அவர் களுக்குத் திருந்திய மொழியில் பயிற்சி கொடுக்க வேண்டும். நான்காம் வகுப்பு முடிய இம்மாதிரியான பிழைகளை நீக்க எழுத்துப் பயிற்சியைக் காட்டிலும், வாய்மொழிப் பயிற்சியே அதிகமாகக் கொடுக்க வேண்டும்.

குழந்தைகள் இன்னும் சில வகையான இலக்கணப் பிழை களும் கீழ் வகுப்புக்களில் செய்வார்கள். அவையாவன : பால் வித்தியாசங்களுக்குத் தகுந்தாற்போலும், எண் (ஒருமை, பன்மை) வித்தியாசங்களுக்குத் தகுந்தாற்போலும், தாங்கள் பேசும், எழுதும் வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள்களை அமைத்துப் பேசவோ, எழுதவோ தெரியாமலும் திணறுவார்கள். உதாரணமாக, "எங்க வீட்டு அம்மா வந்தது", "நேத்து பத்து மாட்டை ராமன் ஓட்டிக்கிட்டு போனன்" என்பன போன்ற வாக்கியங்களைச் சாதாரணமாக மாணவர்கள் கையாளுவதை நாம் நம்முடைய தினசரி வாழ்க்கையில் காண லாம். இம்மாதிரியான வாக்கியங்களிலுள்ள கொச்சை மொழிகளைத் திருத்துவதோடு, எழுவாய் ஆண்பாலாக இருந் தால், பயனிலையும் ஆண்பாலைக் குறிக்கக்கூடியதாக முடிய வேண்டும்; எழுவாய் பன்மையில் இருந்தால், பயனிலையும் பன்மையில் இருக்க வேண்டும். இம்மாதிரியான இலக்கணப் பிழைகளை இலக்கண வார்த்தைகளைக் (Terminology) கையாளாம லேயே மாணவர்களைத் திருத்தலாம். மேலும், மூன்று நான்கா வது வகுப்புக்களில், மற்றொரு வகையான இலக்கணப் பிழை களையும் ஆசிரியர்கள் திருத்தவேண்டும். தமிழ் மொழியில்

எங்கெங்கே ஒற்றுகள் மிகும் என்பதைத் தாய்மொழி பயிற்றும் ஆசிரியர்கள் முதலில் அறிந்துகொள்ளவேண்டும். நான்காவது, ஐந்தாவது வகுப்புக்களில் மாணவர்கள் இம்மாதிரியான பிழைகளைச் செய்யாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். உதாரணமாக, "கோட்டைக்குப் போனான்" என்று பெரும்பாலான மாணவர்கள் பேசுவதில்லை: "கோட்டைக்கு போனான்" என்றுதான் பேசுவார்கள்; "மாவட்ட கல்வி அதிகாரி" என்றுதான் பேசுவார்கள்; "மாவட்டக் கல்வி அதிகாரி" என்று எழுதுவதும் இல்லை, பேசுவதும் இல்லை. பேசுகின்றபடிதான் பின்னர் எழுத ஆரம்பிப்பார்கள். இம்மாதிரியான பிழைகள் பெரியோர்களுங்கூடச் செய்கின்றார்கள் என்றால் அவர்கள் கீழ் வகுப்புக்களில் தாய்மொழிப் பயிற்சி கொடுக்கும் திறமையான ஆசிரியர்களிடம் பயிலவில்லை என்றுதான் பொருள். இதுகாறும் சொல்லியவற்றால், முதல் நான்கு வகுப்புக்களில் தாய்மொழி பயிற்றும் ஆசிரியர்கள், மேற்சொல்லப்பட்ட பிழைகளையும், இன்னும் இவற்றைப் போன்ற இலக்கணப் பிழைகளையும் சிறப்பாக வாய்மொழிப் பயிற்சியாலும், பொதுவாக எழுத்துப் பயிற்சியாலும் நன்கு திருத்திவிட்டால், இளைஞர்கள் தாய்மொழியில் தங்கள் கருத்துக்களை நன்கு பேசவும் எழுதவும் நல்ல அடிப்படையைப் பெற்றுவிடுவார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? பின்னர் அவ்வடிப்படையின்மேல் எழுப்பப்பட்ட எந்த விதமான இலக்கணப் பயிற்சியும் நீடித்து நிற்கும் என்பது திண்ணம்.

எம்முறை கொண்டு இலக்கணம் கற்பிக்க வேண்டும்?

இலக்கணத்தில் எந்தப் பகுதியைச் சொல்லிக் கொடுக்க வேண்டுமோ அந்தப் பகுதியை விளக்கும் பல உதாரணங்களை முதலில் கரும்பலகையில் எழுதி அவற்றினின்றும் இலக்கண விதியை மாணவர்களிடமிருந்து வரவழைக்கும் 'விதி வரவழைக்கும் முறையே' (Inductive Method) இலக்கணம் சொல்லிக் கொடுக்க மிகச் சிறந்த முறை என்பது அறிஞர்களின் கருத்தாகும். உதாரணமாக, புதிய ஐந்தாம் வகுப்பிற்குச் சொற்களின் வகைகளைக் கீழ்க்கண்ட முறையில் விதி வரவழைக்கும் முறையில் சொல்லிக் கொடுக்கலாம் :—

முருகன்
ஆடு
கிளி
காடு

மரம்
மலை
கல்
காடு

மேற்கண்ட முறையில் கரும்பலகையில் எழுதிப் போட்டு மாணவர்களை அப்பெயர்களை வாசிக்கும்படிச் சொல்லவேண்டும். ஒவ்வொரு சொல்லும் எதைக் குறிக்கின்றது என்று கேட்க வேண்டும். மாணவர்கள் 'முருகன்' என்னும் சொல் மனிதன் பெயரைக் குறிக்கின்றதென்றும், 'ஆடு' மிருகத்தின் பெயரைக் குறிக்கின்றதென்றும் சொல்லிக்கொண்டே போவார்கள். இங்ஙனமே மாணவர்களைக் கேள்வி கேட்டுக்கொண்டே சென்றால் அவர்களாக இவையெல்லாம் பெயர்களைக் குறிப்பதால் இவை பெயர்ச்சொல் என்று சொல்லுவார்கள். இம்முறையிலேயே மற்ற 'வினை' 'இடை' 'உரி' முதலிய சொற்களையும் மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதோடு மற்ற இலக்கணப் பகுதிகளையும் சொல்லிக் கொடுக்கலாம். இங்ஙனமாகப் பல உதாரணங்களிலிருந்து ஒரு விதியை வரவழைப்பதற்கே 'விதி வரவழைக்கும் முறை' (Inductive Method) எனப் பெயர்.

இன்னொரு வகையான முறைக்கு 'விதிமுதல் விளக்கும் முறை' (Deductive Method) எனப் பெயர். இம்முறைப்படி முதலில் விதியை மாணவர்களுக்குச் சொல்லிவிட்டுப் பின்னர் அவ்விதியை விளக்கும் உதாரணங்களை மாணவர்களுக்கு எடுத்துக் காட்டுதல். உதாரணமாக, மக்கள், மிருகம், பறவை, மற்ற உயிருள்ள பிராணிகள், உயிரில்லாத நாற்காலி, கல் ஆகியவற்றைப் போன்றவற்றைக் குறிக்கும் சொற்களுக்குப் பெயர்ச்சொல் என உரைத்துவிட்டுப் பின்னர் அவற்றிற்கு உரிய உதாரணங்களை எடுத்துச் சொல்லுதல். முன்னால் இலக்கண விதியையோ அல்லது சூத்திரத்தையோ விளக்கிச் சொல்லிவிட்டுப் பின்னர் உதாரணங்களை எடுத்துக்காட்டும் முறைக்குத்தான் 'விதிமுதல் விளக்கும் முறை' (Deductive Method) எனப் பெயர்.

எம்முறை சிறந்தது ?

தாய்மொழி இலக்கணத்தை மாணவர்களுக்குக் கற்பிக்கும்பொழுது 5, 6, 7-ஆம் வகுப்புக்களில், முன்பு விளக்கப்பட்ட விதி

வரவழைக்கும் முறையைக் கையாளுவதே சிறப்பாகும். அதற்கு உரிய காரணங்கள் வருமாறு :—

1. முதலில் சுலபமான உதாரணங்களிலிருந்து பின்பு கடினமான விதிகளுக்கு மாணவர்களை அழைத்துச் செல்லுகின்றது. முதலில் கடினமானவற்றை மாணவர்களிடம் புகுத்தினால் இளைஞர்களுக்குப் பயம் ஏற்பட்டு எந்தப் பாடத்திலும் வெறுப்பு ஏற்பட்டுப் பின்னர் அதைக் கற்றுக்கொள்ள விரும்பமாட்டார்கள்.

2. எந்த முறை மாணவர்களைச் சிந்தித்துத் தாங்களே ஒரு முடிவுக்கு வரக்கூடிய முழுச் சந்தர்ப்பம் அளிக்கின்றதோ அந்த முறையே சிறந்தது. இம்முறையால் கற்பிக்கப்படும் எதுவும் மாணவர்களால் ஒருபொழுதும் மறக்கப்படமாட்டாது. முன்னர் உதாரணங்களைக் கொடுத்து, அவற்றைப் படித்துப் பார்த்து, பின்னர் அவற்றைப் பற்றிய ஒரு முடிவுக்கு வருவது, நினைத்துப் பார்ப்பதற்கு உரிய முழுச் சந்தர்ப்பத்தையும் அளிக்கின்றபடியால் விதி வரவழைக்கும் முறையே (Inductive Method) சிறந்தது.

3. இம்முறையே உள நூலுக்கும் (Psychology) ஒத்த முறை. மாணவர்கள் மகிழ்ச்சியுடன் தாங்களே சிந்தித்து உதாரணங்கள் கொடுப்பார்கள்; கொடுத்தவற்றிலும் தாங்களே ஒரு முடிவான விதியைக் கண்டுபிடிக்கின்றார்கள். ஆகையால் அவர்களுடைய உள நிலைக்கும் இம்முறையே ஒத்தது.

4. இம்முறையால் இலக்கணம் நடத்தினால் காலம் நீடிக்கும்; அதனால் பாடத் திட்டப்படி பாடங்களை முடிக்க முடியாது எனச் சிலர் வாதிக்கலாம். படிப்பதன் நோக்கம் மாணவர்கள் கற்பனவற்றை ஐயந்திரிபறக் கற்கவேண்டுமென்பதே. இஃதிங்ஙனமிருக்க மாணவர்கள் தெரிந்துகொண்டாலும் சரி, தெரிந்துகொள்ளாவிட்டாலும் சரி, நமது நோக்கம் பாடங்களை முடித்துவிடவேண்டியதுதான் என்பதை ஒருவரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

விதிமுதல் விளக்கும் முறையால் (Deductive Method) பாடங்களை வெகு விரைவாக முடித்துவிடலாம் என்பது உண்மையே. ஆனால் கடைசியில் அதனால் மாணவர்கள் புரிந்து கொண்ட இலக்கண விதிகள் மிகக் குறைவாகத்தான் இருக்கும். மெதுவாகச் சென்றாலும், அழுத்தமாகச் சொல்லிக் கொடுப்பதே மேல்.

5. விதி வரவழைக்கும் முறையைக் கையாளுவதால் மாணவர்கள் தங்கள் முயற்சியாலேயே விதிகளை வரவழைக்கின்றார்கள். அவர்களிடம் ஒரு தன்னம்பிக்கை ஏற்படுகின்றது. இத்தன்னம்பிக்கையை மேலும் வளர்த்துக்கொண்டே சென்றால் மாணவர்கள் கற்கவேண்டிய இலக்கண விதிகளை வெகு விரைவில், அழுத்தமாகக் கற்றுக்கொள்ளுவார்கள் என்பது திண்ணம்.

6. விதிமுதல் விளக்கும் முறையால் (Deductive Method) மாணவர்களுக்கு முதலில் இலக்கணம் சொல்லிக்கொடுக்க ஆரம்பித்தோமானால் வறட்சியான விதிகளை முதலில் புரிந்துகொள்ள இடர்ப்படுவார்கள்; அதனால் ஊக்கம் குறையும்; பின்பு தன்னம்பிக்கை குறையும்; இவற்றால் நாளடைவில் அவர்களுக்கு இலக்கணம் கற்பதில் வெறுப்புத் தட்டிவிடும்.

இலக்கணம் கற்பிக்கும்பொழுது ஆசிரியர்கள் அனுசரிக்க வேண்டிய சில நடைமுறை விதிகள் :

1. இலக்கணம் கற்பிக்கும் ஆசிரியர்கள் கற்பிக்கவேண்டிய பாடங்களைத் தாங்கள் முன்னர் நன்றாகப் படித்து, நல்ல முறையில் விதிவரு முறையில் (Inductive Method of Teaching) சொல்லிக்கொடுக்க வேண்டியதற்குத் தக்க பாடக் குறிப்புக்கள் எழுதிக்கொண்டு செல்லவேண்டும். அங்ஙனம் செய்யாமலும், பாடங்களைத் தாங்கள் முன்னரே தயார் செய்துகொள்ளாமலும், வகுப்பிற்குள் புகுந்து திடீரென அன்றைப் பாடங்களைச் சொல்லிக்கொடுக்க முயலுதல் கூடாது. இதனால் ஆசிரியர்களால் இலக்கண விதிகளைத் திறமையாகச் சொல்லிக்கொடுக்க முடியாது.

2. இலக்கண விதிகளை விளக்கவேண்டிய ஆசிரியர்கள் கரும்பலகையில் எழுதிப்போடும் அல்லது வாய்மூலம் சொல்லும் உதாரணச் சொற்கள், அல்லது சொற்றொடர்கள் மாணவர்களுடைய அனுபவத்திற்கு உட்பட்டனவாகவும், மாணவர்களுக்கு எளிதில் விளங்கக்கூடியனவாகவும் இருக்கவேண்டும். அங்ஙனம் இல்லாதிருந்தால் இலக்கண விதிகளைப் புரிந்து கொள்ளும் இடர்ப்பாட்டோடு, உதாரணங்களைப் புரிந்து கொள்ளும் இடர்ப்பாடும் சேர்ந்து மாணவர்களை மலைக்கச் செய்துவிடும்.

3. கொடுக்கப்பட்டுள்ள உதாரணங்களிலிருந்து, பொது விதிகளை மாணவர்களையே வரவழைக்கச் சொல்லவேண்டுமே தவிர, ஆசிரியர்கள் தாங்களே ஒருபொழுதும் சொல்லக்கூடாது.

4. ஆசிரியர் ஒன்று இரண்டு உதாரணங்கள் காட்டுவதோடு நின்றுவிடுதல் கூடாது. எவ்வளவு உதாரணங்கள் தங்களால் கொடுக்க முடியுமோ அவ்வளவு உதாரணங்களையும் வகுப்பி லேயே மாணவர்களுக்கு எடுத்துக் காட்டவேண்டும்.

5. விதி வரவழைக்கும் முறை (Inductive Method) மூலம் வருவிக்கப்பட்ட இலக்கண விதிகளை, உரைநடைப் பாடமும், கட்டுரையும் நடத்தும்பொழுதும் மாணவர்களை விதிமுதல் விளக்கும் முறைப்படி (Deductive Method) பயன்படுத்தி அப் பாடங்களில் அவ்விதிகளுக்குத் தக இருக்கும் உதாரணங்களை எடுத்து எழுதி அவ்விதிகளைப் பொருத்திக் காட்டும்படிச் செய்ய வேண்டும். இம்மாதிரியான வாய்மொழிப் பயிற்சியும், எழுத்துப் பயிற்சியும் உரைநடைப் பாடங்களிலும், கட்டுரை வகுப்புக்களி லும் அடிக்கடி கொடுத்து வந்தால் மாணவர்கள் தாங்கள் கற்றுக் கொண்ட விதிகளை ஒருபொழுதும் மறக்க மாட்டார்கள். கொடுக்கப்படும் பயிற்சிக் கட்டுரைகளைப் பின்னர் ஆசிரியர்கள் திருத்திப் பிழைகளை அவர்களுக்கு எடுத்துக் காட்டுதல் வேண்டும். அங்ஙனம் திருத்தாவிட்டால் மாணவர்கள் பிறகு ஆசிரியர் கொடுக்கும் வேலைகளையே செய்துகொண்டு வர மாட்டார்கள்.

6. புதிய ஏழாம் வகுப்புவரை மேற்கண்ட முறைகளில் இலக்கணம் சொல்லிக்கொடுத்தால் போதும். நன்னூல் சூத்தி ரங்களை நெட்டுருச் செய்ய வேண்டியதில்லை. அதற்குமேல் வகுப்புக்களில்கூடப் பெரும்பாலும் விதி வரவழைக்கும் முறையிலேயே (Inductive Method) இலக்கண விதிகளை மாணவர்களுக்குக் கற்பித்துவிட்டுப் பின்னர் நன்னூல் சூத்திரங் களை மனப்பாடம் செய்யச் சொல்லுவதே நலம். இம்முறைக்கு வராத பாடப்பகுதிகள் ஏதாவது மேல் வகுப்புக்களில் இருந் தால் அப்பகுதியைச் சொல்லிக் கொடுக்கும்பொழுது மட்டும் நேராக விதியைச் சொல்லியும் விளக்கலாம். அப்பொழுதும் உதாரணங்கள் அதிகமாகக் கொடுத்தல் நலம்.

7. இலக்கண வகுப்புக்களில் பாடம் நடத்தும்பொழுது மாணவர்கள் முற்றிலும் ஆசிரியர் சொல்லுவதையே கவனிக்கும் படிக் கற்பிக்க வேண்டும். அங்ஙனமின்றி மாணவர்கள் தங்களி டமுள்ள இலக்கணப் பாடப் புத்தகங்களைப் (Grammar Text Books) பார்த்துக்கொண்டோ, படித்துக்கொண்டோ இருக்க அனுமதித்தல் கூடாது. அங்ஙனம் அனுமதித்தால் ஆசிரியர்கள்

சொல்லுவதில் கவனம் இராது. வீட்டிற்குச் சென்றபிறகு வேண்டுமானால் அப்பாடப் புத்தகங்களை மாணவர்கள் படித்துக் கொள்ளலாம். இம்மாதிரியான கவனமின்மையைத் தடுப்பதற் காக ஆசிரியர் தாம் கரும்பலகையில் எழுதிப்போடும் உதா ரணங்களை மாணவர்கள் தங்கள் குறிப்புப் புத்தகத்தில் குறித் துக்கொள்ளும்படிச் செய்யவேண்டும்.

8. இலக்கணப் பாடத்தில் நுண்ணிய கருத்துக்களைக் கொண்ட விதிகளைச் சொல்லிக் கொடுக்கவேண்டும். ஆகையால் இடையிடையே நகைச் சுவையைக் கையாளுவது நலம். ஆனால் இந் நகைச் சுவை கையாளுவது அதிகமாக ஆகி வகுப்பின் ஒழுங்கும், அமைதியும் கெட்டுப் போகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

9. கால அட்டவணையில் (Time Table) இலக்கணம் சொல் லிக் கொடுக்கும் வகுப்புக்களைப் பெரும்பாலும் காலை முதல் அல்லது இரண்டாம் காலத்திலோ, அல்லது பிற்பகல் முதல் காலத்திலோ வைத்துக்கொள்ளுவது நலம். ஏனென்றால் அப் பொழுது மாணவர்களுடைய மனமும், உடலும் தளர்ச்சி அடை யாமல் நுணுக்கமானவற்றை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கும்.

10. புதிய பாடத் திட்டப்படி ஐந்தாம் வகுப்பிலிருந்தே ஆங்கிலம் சொல்லிக் கொடுக்கப்பட்டு வருகின்றது. அப்பாடத் திட்டப்படி ஐந்தாம் வகுப்பிலிருந்தே தமிழ் இலக்கணம் சொல் லிக் கொடுக்கப்படுவதற்கு உரிய பாடத் திட்டம் அரசாங்கத்தா ரால் கொடுக்கப்பட்டு உள்ளது. ஆகவே தாய்மொழி சொல் லிக்கொடுக்கும் ஆசிரியர்கள் ஆங்கில மொழியின் இலக்கணத் தையும் கற்றிருப்பது அவசியம். இதனால் இரு மொழிகளிலும் வரக்கூடிய விதிகளையும், உதாரணங்களையும் ஒத்துக் காட்டி (Correlate) ஒற்றுமைப்படுத்திச் சொல்லிக்கொடுக்கலாம். அங்ஙன ணம் சொல்லிக்கொடுத்தால் மாணவர்களுக்குள்ள அநேக ஐயங் கள் நீங்குவது திண்ணம். கீழ்க்கண்ட சில உதாரணங்கள் ஆசிரியர்களுக்கு வழிகாட்டியாகும்:

| | | |
|---|---|---|
| Noun | ... | பெயர்ச்சொல் |
| Verb | ... | வினைச் சொல் |
| Number | ... | எண் |
| Gender | ... | பால் |
| Person | ... | இடம் (தன்மை, முன்னிலை, படர்க்கை) |
| Subject | ... | எழுவாய் |

Predicate ... பயனிலை
Object ... செயப்படு பொருள்

மேற்கண்ட முறையில், உரிய பாடங்கள் வருங்காலத்தில் இருமொழிகளிலும் உள்ள இலக்கணச் சொற்களின் பொருள் களையும், அவற்றிடையே உள்ள ஒற்றுமைகளையும் ஆசிரியர் பொருத்திக்காட்ட வேண்டும். சிற்சில வேற்றுமைகள் வரும் பொழுது அவற்றையும் தகுந்த உதாரணங்களுடன் தாய்மொழி கற்பிக்கும் ஆசிரியர்கள் விளக்கிக் காட்டவேண்டும்.

மேற்கண்ட முறைகளில் இலக்கணம் சொல்லிக்கொடுக்கப் பட்டால் மாணவர்கள் இலக்கண விதிகளை நன்கு கற்று அவற்றை வேண்டிய இடங்களில் பொருத்தி அமைத்துத் தாங்கள் எண்ணும் கருத்துக்களைத் தாய்மொழியில் இலக்கணப் பிழை இன்றி எழுதவும் பேசவும் திறமை பெறுவார்கள் என்பது நிச்சயம்.

பதினோராம் அத்தியாயம்

# எழுத்துப் பயிற்சி

எழுத்துக்களுக்கு ஒலி வடிவம் என்றும் வரி வடிவம் என்றும் இரண்டு உருவங்கள் உண்டு என்பது யாவரும் அறிந்ததே. குழந்தைகள் பேச ஆரம்பித்ததிலிருந்து ஒலிவடிவத்தைப் பற்றித் தெரிந்துகொள்ளுகின்றார்கள். ஆனால் அவர்கள் 5 வயது முடிந்து பள்ளிக்கு வரும்வரையில் எழுத்துக்களின் வரி வடிவத்தைப் பற்றி ஒன்றும் அறியார்கள். எழுத்துக்கள் எழுதப் பழகிக் கொள்ளப் பயிற்சி பெற்றால்தான் தமது கருத்துக்களைத் தொலைவிலிருக்கின்றவர்களுக்கு எழுதவும், தாங்களே தங்கள் குறிப்புப் புத்தகத்தில் எழுதி வைத்துக்கொள்ளவும் இயலும். ஆகையால் குழந்தைகள் இளமையிலிருந்தே எழுதிப் பழக நல்ல பயிற்சி பெறவேண்டியது அவசியமாகின்றது.

எழுத்துப் பயிற்சியைக் கற்பிக்கும் வழிகள் :

சிறு குழந்தைகள் ஐந்து வயது வரையில் ஓடியும், ஆடியும் விளையாடப் பயின்றிருப்பார்கள்; கைகளால் பொம்மைகளை வைத்து விளையாடவும், சிற்றில் கட்டவும், அதை அழிக்கவும், மேளங் கொட்டவும், சிறுதேர் உருட்டவும், கண்ணாமூச்சு ஆடவும் பழகி இருப்பார்கள். ஆகையால் அவர்களுடைய கைகளிலும், விரல்களிலும் உள்ள நரம்புகளும், தசைகளும் முரட்டுத்தனமான வேலைகள் செய்து பழக்கப்பட்டிருக்குமே தவிர, பென்சிலையோ கரும்பலகையையோ (Slate) பிடித்து எழுதப் பழகி இரா. குழந்தைகள் பள்ளிக்கு வந்ததும் ஆசிரியர்கள் அவர்களுக்கு வாய்மொழி மூலம் பாடங்களைச் சொல்லிக் கொடுக்கின்றார்கள். அப்பாடங்களை உடனே எழுதச் சொன்னால் குழந்தைகள் எழுதுவதற்கு இடர்ப்படுவார்கள். ஆகவே முதல் வகுப்பில் சுமார் இரண்டு மாதங்கள் பாடங்களைப் படிப்பதற்குச் சொல்லிக் கொடுத்துக்கொண்டே, குழந்தைகளுக்கு எழுத்துப் பயிற்சி கொடுக்க வேண்டும். அங்ஙனம் கீழ்க்கண்ட முறையில் சுமார் இரண்டு மாதங்கள் பயிற்சிகள் கொடுத்த பின்னர், படிக்கும் பாடங்களை எழுதும்படிச் சொல்ல வேண்டும். எல்லாக் குழந்தைகளும் ஒரே சமயத்தில், ஒரே மாதிரி எழுதக் கற்றுக் கொள்ளு

வார்கள் என்பது முடியாத காரியம். பாடங்களைப் படிப்பதைப் போன்றே, எழுதப் பழகுவதிலும் சில குழந்தைகள் விரைவாக இருப்பார்கள்; சிலர் மந்தமாகத்தான் பழகிக் கொள்ளுவார்கள். இவ்வித வித்தியாசங்களைப் பார்த்து ஆசிரியர்கள் நடந்து கொள்ளுவது நலம்.

1. குழந்தைகளிடம் முதன்முதலில் வெள்ளைச் சுண்ணம்புத் துண்டோ, வர்ணச் சுண்ணம்புத் துண்டோ கொடுத்துச் சுவரில் தாழ்வாக உள்ள கரும்பலகையிலோ, அல்லது தரையில் கிடத்தப்பட்டுள்ள சிறு கரும்பலகைகளிலோ அவர்கள் விருப்பம்போல் கிறுக்கும்படிச் சொல்லலாம். இங்ஙனமே மாணவர்கள் தங்களுக்கென வைத்துள்ள சிறு கரும்பலகையிலும் (Slate) எழுதுகோலால் அங்ஙனமே கிறுக்கும்படிச் செய்யலாம். ஆரம்பத்தில் குழந்தைகள் பொருளில்லாமல், கண்டபடி கிறுக்குவார்கள். அப்பொழுது ஆசிரியர்கள் அவர்களைக் கண்டிக்கவோ, கோபிக்கவோ, மிரட்டவோ கூடாது.

2. அங்ஙனம் கண்டவாறு கிறுக்கிக் கொண்டு உள்ள குழந்தைகளுக்குக் கீழ்க்கண்டபடி சில நேர்க்கோடுகளும், படுக்கைக் கோடுகளும், வட்டங்களும் போடப் பழக்கிக் கொடுக்க வேண்டும். முதலில் ஆசிரியர் அவற்றைச் சுவரிலுள்ள கரும் பலகையில் வரைந்தால் பின்னல் அவற்றைப் போலவே சில குழந்தைகள் சுமாராகவும், சில குழந்தைகள் திருத்தமாகவும் வரைவார்கள். அங்ஙனம் திருத்தமாக வரையாத குழந்தைகளைக் கண்டிக்காது. மீண்டும் அதிகமான கோடுகளையும் வட்டங்களையும் வரையும்படி அதிகப் பயிற்சி கொடுத்தால் அவர்களும் நாளடைவில் நல்ல பயிற்சி பெற்றுவிடுவார்கள்.

3. மூன்ருவதாக, மாண்டிசாரி முறையிலும் குழந்தைகளுக்குப் பயிற்சி கொடுக்க வேண்டும். அதாவது ஓர் அகலமான அட்டையை எடுத்து அதில் வட்டமான கோடு வரைந்து அவ்வட்டத்தை மட்டும் வெட்டி எடுத்து விடவேண்டும்; இங்ஙனமே நீண்ட சதுரம், சமசதுரம், முக்கோணம், முக்கோணத்திலேயே பல விதமான முக்கோணங்கள் ஆகியவற்றை அட்டைகளில் வரைந்து முன்போலவே அப்பாகங்களை மட்டும் வெட்டி எடுத்துவிட வேண்டும். அங்ஙனம் வெட்டப்பட்ட அட்டைகளை வெள்ளைக் காகிதங்கள் மீது வைக்கவேண்டும். குழந்தைகளிடம் பலவிதமான வர்ண எழுதுகோல்களையும் சாதாரண எழுதுகோல்களையும் கொடுத்து, துவாரங்களைச் சுற்றி

அவற்றால் கோடுகள் வரையும்படிச் செய்யவேண்டும். பின்னர் அட்டைகளை எடுத்துவிட்டால் அவற்றின் கீழ் வைக்கப்பட்டிருந்த வெள்ளைக் காகிதத்தின்மேல் முக்கோணம் முதலான பல வகை வடிவங்கள் விழுந்திருக்கும்.

வேறொரு வெள்ளைக் காகிதத்தின் மீது ஏற்கனவே வெட்டப்பட்ட முக்கோணம், வடிவம் முதலிய பல துண்டுகளை ஒவ்வொன்றாக வைத்து, அதைச் சுற்றி எழுது கோல்களால் கோடுகள் வரையும்படிச் செய்து, அவ்வட்டைகளை எடுத்துவிட்டால் முன்மாதிரியே பல உருவங்கள் விழுந்திருக்கும். இம்மாதிரியாகப் பலவிதமான பயிற்சிகள் குழந்தைகளுக்குக் கொடுத்து வந்தால் அவை எழுதுகோல்களைப் பிடிக்கும் முறையையும், விரல்களை வளைக்கும் முறையையும், கோடுகளை நேராக வரையவும், சாய்த்து வரையவும், வளைத்து வரையவும் கற்றுக்கொள்ளுவார்கள்.

4. இம்மாதிரியான பயிற்சிகள் கொடுத்து முடிந்த பின்னர் முதலில் சுலபமான எழுத்துக்களை எழுதப் பயிற்சி கொடுக்க வேண்டும். எழுதும் சுலபத்தைக் கருதிக் கீழ்க்கண்ட முறையில் தமிழ் எழுத்துக்களை எழுதப் பயிற்சி கொடுக்கலாம்:

(1) ட, ப, ய, ம, ர, ஈ, எ, ஏ, வ, ள, ற

(2)ச, க, ந, த, ழ, ன, ங, ஞ

(3) அ, ஆ, இ, உ, ஊ, ஐ, ஒ, ஓ, ஔ, ல, ண

(4) ெ, ே, ா. தமிழ் எழுத்துக்கள் அனைத்தையும், அட்டையிலோ, கட்டையிலோ, உப்புக் காகிதத்திலோ, வெல்வெட் துணிகளிலோ வெட்டி, அவற்றையெல்லாம் மேற்கண்ட வரிசைகளில் மூன்று பலகைகளில் வச்சிரம் கொண்டு பலமாக ஒட்டி வைக்க வேண்டும். கட்டை எழுத்துக்களை ஒட்ட முடியாது. ஆகையால் அவற்றை அப்படியே வைத்துக் கொள்ளலாம். பின்பு குழந்தைகளை ஒவ்வொருவராக அழைத்து, அவர்களுடைய ஆள்காட்டி விரலை ஆசிரியர் பிடித்து அவ்வெழுத்துக்கள் மீது நகர்த்திச் செல்லவேண்டும். அங்ஙனம் விரலை நகர்த்தும்பொழுது ஆரம்பிக்கும் இடத்தையும், முடியும் இடத்தையும் ஆசிரியர்கள் அறிந்து நடந்துகொள்ள வேண்டும். தவறுதலான இடங்களில் ஆரம்பித்துத் தவறுதலான இடங்களில் முடிந்தால் பின்னர் அக் கெட்ட பழக்கத்தைக் குழந்தைகள் செய்துகொண்டே இருப்பார்கள். அப்புறம் அப்பழக்கத்தை மாற்றுவது எளிதல்ல. உதாரணமாக 'ட' எழுதும்பொழுது முதலில் மேலிருந்து கீழே இழுத்துப் பின்னர்ப் படுக்கைக் கோட்டை இழுக்க வேண்டும்.

இங்ஙனமே கொம்புகளேயும் (ெ, ே), கால்களேயும் (ா), சுழிகளே களேயும் (ல,ண), கோடுகளேயும் (கி, கீ) எங்ஙனம் ஆரம்பிக்க வேண்டும், முடிக்க வேண்டும் என்று ஆசிரியர்கள் பழக்க வேண்டும். பின்னர் இங்ஙனம் பழகிய மாணவர்களே மணலில் எழுதும்படிச் செய்யலாம்.

பின்னர் ஆசிரியர் எழுத்துக்களேத் தரையிலோ, தரையில் படுக்கப்போட்டுள்ள பலகைகளிலோ சுண்ணும்புக் கட்டியால் எழுதி அவற்றின்மேல் புளியங்கொட்டைகளேயோ, சிறு கற்களேயோ, துண்டு தட்டைக் குச்சிகளேயோ வைக்கும்படிப் பழக்கலாம். இங்ஙனம் சில நாட்களுக்குப் பழகிய பின்னர் ஆசிரியர் சுண்ணும்புக் கட்டியால் எழுதாமலே, அவ்வுதவிகளேக் (aids) கொண்டு மாணவர்களேத் தாங்களாகவே எழுத்துக்கள் போல் வைக்கும்படிச் செய்யவேண்டும்.

ஆசிரியர் கரும்பலகையில் இவ்வெழுத்துக்களே இலேசாக எழுதி, அவற்றின்மேல் மாணவர்களே அழுத்தி விளம்பும்படிச் செய்யலாம். மற்ருெரு கரும்பலகையில் அழிக்க முடியாத பலவித வண்ணங்களால் எழுத்துக்களே நிரந்தரமாக எழுதி வைத்து, அவற்றின்மேல் குழந்தைகளே வெள்ளேச் சுண்ணும்புத் துண்டால் வரையும்படிச் செய்யலாம். இவ்வெழுத்துக்களின்மேல் விளம்பப் பட்டவற்றை உடனுக்குடன் அழித்து விடலாம்; அடி வர்ண எழுத்துக்கள் மட்டும் எப்பொழுதும் அழியாமல் இருக்கும்; அவ்வெழுத்துக்களின்மேல் வேறு குழந்தைகளே விளம்பும்படிச் செய்யலாம். இங்ஙனம் குழந்தைகளேப் பழக்கினுல் அவர்கள் சுமார் மூன்று மாதங்களில் தமிழ் எழுத்துக்கள் அனைத்தும் எழுதுவதற்குக் கற்றுக்கொள்ளுவார்கள்.

5. அடுத்தபடியாகக் குழந்தைகளுக்கு வார்த்தைகள் எழுத ஆசிரியர் பழக்கிக் கொடுக்கவேண்டும். ஆங்கிலக் கையெழுத்தை எழுதும்பொழுது ஓர் எழுத்தோடு அடுத்த எழுத்தைக் கோத்து எழுதவேண்டும். ஆனுல் தமிழிலோ அவ்விதச் சிரமம் ஒன்றுமே இல்லே. எழுத்துக்கள் தனித்தனியாக ஒன்ருேடு ஒன்று சேராமல் எழுதுவது வெகு சுலபம். முதல் வகுப்பு மாணவர்களே அவர்களிடமுள்ள சிறு கரும்பலகையில் ஆணியால் மூன்று கோடுகள் வரைந்து கொடுத்து அதில் ஒன்று, இரண்டு சொற்களே எழுதிக் காட்டவேண்டும். அதைப் பின்பற்றியே மாணவர்களும் அதற்குக் கீழே மேலே ஆசிரியரால்

எழுதப்பட்ட வார்த்தைகளை எழுதிக்காட்ட வேண்டும். இங்ஙனம் மாணவர்கள் எழுதியவற்றை ஆசிரியர்கள் அவர்களுக்கு முன்னிலையிலேயே திருத்திக்காட்ட வேண்டும். வார்த்தைகளை மாணவர்கள் எழுதிப் பழகிய பின்னர், சிறு சிறு வாக்கியங்களாகவும் எழுதிக் கொடுத்துப் பழக்கலாம். இங்ஙனம் இரண்டாம் வகுப்பு முடியும்வரை மாணவர்களிடமுள்ள சிறு கரும்பலகையில்தான் இவ்விதமான எழுத்துப் பயிற்சி கொடுக்கவேண்டும்.

6. மூன்றுவது வகுப்பு மாணவர்களுக்கு இரட்டைக் கோடுகள் வரையப்பட்ட குறிப்புப் புத்தகத்தில் காகிதப் பென்சிலால் முன்மாதிரியே ஆசிரியர் சிறு வாக்கியத்தைத் தலைப்பில் எழுதி அதற்குக் கீழ் அம்மாதிரியே எழுதி வரும்படிச் செய்ய வேண்டும். 3, 4–ஆம் வகுப்புக்களில் காகிதப் பென்சிலாலேயே புத்தகத்தைப் பார்த்துத் தங்கள் பாடங்களிலுள்ள வாக்கியங்களை எழுதும்படிச் செய்யவேண்டும். இங்ஙனம் எழுதப்பட்டவை எல்லாவற்றையும் ஆசிரியர் நன்கு பார்த்து அவற்றிற்கு உரிய 'அ', 'ஆ', 'இ', 'ஈ' என்ற குறியீடுகளைக் (Marks) கொடுக்கலாம். 'அ' குறியீடு வாங்கிய மாணவர்களின் காப்பி குறிப்புப் புத்தகத்தில் சில ஏடுகளைத் தனியாக எடுத்து அட்டையில் ஒட்டி வகுப்புச் சுவர்களில் மாட்டி வைக்கலாம். அதை மாதிரியாக வைத்துக் கொண்டு எல்லோரும் 'அ' குறியீடு வாங்க முயலுவார்கள்.

7. ஐந்தாவது வகுப்பிலிருந்து மாணவர்களைக் கட்டைப் பேனுவை, மையில் தொட்டு ஒற்றைக் கோட்டில் தங்கள் பாடத்தைப் பார்த்துத் தினம் அரைப் பக்கமோ ஒரு பக்கமோ எழுதி வரும்படிச் செய்யவேண்டும். மேலே ஆறுவது விதியில் சொல்லிய மாதிரி சில மாதிரிக் கையெழுத்து ஏடுகளை இப்பொழுதும் சுவரில் தொங்கவிட ஏற்பாடு செய்யலாம். இம்மாதிரியே 6, 7–ஆம் வகுப்புக்களில் ஒவ்வொரு மாணவனையும் தினசரி அரைப் பக்கம் எழுதிக்கொண்டு வரும்படிச் செய்து, அதை ஆசிரியர் கவனமாகத் திருத்தித் தகுந்த மதிப்பீடு கொடுக்க வேண்டும்.

8. எழுத்தைத் திருத்தமாக எழுதப் பழக்குவதோடு வேகமாகவும் எழுத மாணவர்களைப் பழக்க வேண்டும். இதற்காக மூன்றும் வகுப்பிலிருந்தே ஆசிரியர்கள், மாணவர்களுக்குச்

'சொல்வது எழுதல் (Dictation) பழக்கத்தையும் கற்பிக்கவேண்டும். ஆசிரியர் புத்தகத்திலிருந்து ஒரு பக்கத்தைப் புரட்டி மெதுவாக வாசித்துக் கொண்டே போகவேண்டும். அதைக் கேட்ட மாணவர்கள் ஆசிரியரைப் பின்பற்றி எழுதிக்கொண்டே போகவேண்டும். மாணவர்கள் எழுதி முடித்த பின்னர் ஆசிரியர்கள் அவர்கள் கரும்பலகையிலோ அல்லது குறிப்புப் புத்தகத்திலோ எழுதப்பட்ட வாசகத்தை நன்கு படித்துத் தகுந்த குறியீடுகள் கொடுக்க வேண்டும். பிழையின்றி எழுதினதற்காக ஒரு குறியீடும், கையெழுத்திற்காக ஒரு குறியீடும், ஆக ஒவ்வொரு வாசகத்திற்கும் இரண்டு குறியீடுகள் கொடுக்கலாம். அப்பொழுதுதான் மாணவர்கள் பிழை எப்பாகத்தில் உள்ளது என்பதைப் புரிந்துகொண்டு அப்பாகத்தில் திருத்திக் கொள்ள முயலுவார்கள். இம் மாதிரியான பயிற்சி வாரம் ஒரு முறை, இரு முறை மாணவர்களுக்கு அளிப்பதால் அவர்கள் வேகமாக எழுதப் பழகிக் கொள்ளுவதோடு, திருத்தமாகவும் எழுதப் பழகிக் கொள்ளுவார்கள்.

### சிறு ஓவியப் பயிற்சி

ஒன்று முதல் மூன்று வகுப்புக்கள் முடிய உள்ள மாணவர்களின் கைகளிலுள்ள விரல்கள் எழுதுகோல்களை நன்றாகப் பிடிக்கப் பழகுவதற்காகவும், விரல்களிலும், உள்ளங்கையிலும், கையின் மற்றப் பாகங்களின் தசைகள் சொன்னபடி கேட்பதற்காகவும் சில சிறு ஓவியங்களைத் தங்கள் கரும்பலகைகளிலும், வகுப்பிலுள்ள கரும்பலகைகளிலும், மாணவர்களிடமுள்ள குறிப்புப் புத்தகங்களிலும் வரையும்படிச் செய்ய வேண்டும். அங்ஙனம் செய்தால் நாளடைவில் இளைஞர்களின் கைவிரல்களின் தசைகள் எழுத்துக்களை வேகமாகவும் தெளிவாகவும் எழுதப் பழகிவிடும். சித்திரமும் கைப்பழக்கம் அன்றோ? உதாரணம் கீழ் வருமாறு: 'மு' என்ற எழுத்தைச் சுண்ணாம்புக் கட்டியால் வரைந்து சில கோடுகளை அழித்துவிட்டால் மாங்காய் ஆகிவிடும். 'த' வரைந்து அதன் மூலம் சில கோடுகளைச் சேர்த்துக் காகத்தின் படத்தை வரவழைக்கலாம். இங்ஙனமே இன்னும் சில தமிழ் எழுத்துக்களிலிருந்து சில பறவைகளின் படத்தையும், சில பிராணிகளின் படத்தையும் வரையும்படி மாணவர்கள் பழக்கிக் கொள்ளலாம். இப்பயிற்சிகளை மாணவர்கள் வெகு ஊக்கமாகவும், மகிழ்ச்சியாகவும் செய்து முடிப்பர் என்பது திண்ணம்.

கீழ்க்கண்ட பயிற்சிகளையும் கொடுக்கலாம்

## முதல் வகுப்பிற்கு



இந்தப் படங்களை வரைய மாணவர் பயில வேண்டும்.

மாணவர்கள் எழுதும்பொழுது கவனிக்கப்பட வேண்டியவை

கீழே உட்கார்ந்து எழுதுவது என்றால் மாணவர்கள் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொள்ள வேண்டும். தனது கரும்பலகையை மாணவன் இடதுமுழங்காலில் வைத்துச் சிறிது பின்புறம் சாய்த்துப் பிடித்துக்கொள்ள வேண்டும். எழுதுகோலை மிக அண்மையிலும் மிகத் தொலைவிலும் பிடிக்காமலும் சம மத்தியில் பிடிக்க வேண்டும். எழுதுகோல் நடுவிரலில் நுனிப் பாகத்தில் படிய வேண்டும். பின்னர் அக் கோலை ஆள்காட்டி விரலால் வலப் பக்கமும், கட்டை விரலால் இடப் பக்கமும் அழுத்திப் பிடித்து எழுதவேண்டும். தரையில் குப்புறப் படுத்துக் கொண்டோ, மல்லாந்து ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டோ எழுதுதல் கூடாது. அப்பொழுது எழுத்துக்கள் திருத்தமாகவும், தெளிவாகவும் அமையா.

எழுதுவதற்குச் சாய்வு மேசையாக இருப்பது நலம். தரையில் உட்கார்ந்துகொண்டு சாய்வு மேசையில் வைத்து எழுதினாலும் பெஞ்சியின்மீது உட்கார்ந்துகொண்டு சாய்வு மேசைமீது வைத்து எழுதினாலும், மாணவர்கள் பாதி ஆசனத்தில் உட்கார்ந்து இடுப்பிலிருந்து முன்பக்கம் கொஞ்சம் வளைந்து, இடக் கையால் கரும்பலகையையோ, சுவடியையோ பிடித்துக்கொண்டு எழுத வேண்டும். கரும்பலகையையோ அல்லது கடிதத்தையோ சுமார் 25 டிகிரி வலக் கைப் பக்கம் திருப்பி வைத்துக்கொண்டால் போதும். அதிகமாகச் சாய்த்தால் வரிகள் நேராக இரா; கோணலாகவே அமையும்.

மேலும் மாணவர்களை அவர்கள் சாய்வு மேசைமீது கடிதங்களை வைத்து எழுதுங்காலத்தில் அடியில் ஓர் அட்டை வைத்து எழுதப் பழக்க வேண்டும். வெறும்பலகையில் கடிதத்தை வைத்து எழுதினால் எழுத்துக்கள் திருத்தமாக அமையா. மேலும் ஏழாம் வகுப்பு வரையிலும் ஒற்றைக் கோடுகள் வரையப்பட்ட காகிதங்களின் மேலேயே எழுதும்படி மாணவர்களைப் பழக்க வேண்டும். கோடுகள் இல்லாத காகிதங்களில் இளம் மாணவர்கள் எழுத ஆரம்பித்தால் வரிகள் கோணலாகப் போவதோடு, எழுத்துக்களும் ஒரு சீராக அமையா. ஒற்றைக் கோடுகள் வரையப்பட்ட காகிதங்கள் இல்லாவிட்டால், பட்டையான ஒற்றைக் கோடுகள் வரையப்பட்ட காகிதத்தை வெள்ளைக் காகிதங்களுக்கு அடியில் வைத்துக்கொண்டு அவற்றின் மேல் வரிசையாக எழுதப் பழக வேண்டும்.

முன்பு கூறிய மாதிரியே மாணவர்கள் மூன்றும் வகுப்பு முடியத் தங்கள் கரும்பலகையில் எழுதுகோலால் எழுதினுல் போதும். நான்காவது வகுப்பிலிருந்து குறிப்புப் புத்தகத்தில் பென்சிலால் எழுதப் பழக்கலாம். ஐந்தாம் வகுப்பின் பிற் பகுதியில் மைதொட்டுப் பேனுவால் எழுதப் பழக்கலாம். அங்ஙனம் மைதொட்டு எழுதுங்காலத்தில் மையைக் கண்டபடி மாணவர்கள் சிதறும்படி விடாமல் கவனித்துக்கொள்ள வேண்டும். மைபட்ட விரல்களைச் சட்டையில் அப்பிக்கொள் ளாமல் ஆசிரியர்கள் பார்த்துக் கொள்ள வேண்டும். சில மாண வர்கள் மூன்று அல்லது நான்காவது வகுப்பிலிருந்தே ஊற்றுப் பேனுவால் (Fountain pen) எழுத ஆரம்பித்து விடுகின்றுர்கள். இவ்வழக்கத்தை ஆசிரியர்கள் நிறுத்த வேண்டும். பெற்றோர்கள் வாங்கிக் கொடுத்தாலும், அதை ஆசிரியர்கள் அனுமதிக்கக் கூடாது. ஐந்தாவது முடிய, இன்னும் வேண்டுமானுல் ஆருவது முடியும் வரையிலும், மாணவர்கள் கட்டைப் பேனுவாலேயே எழுதப் பழக வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் எழுத் துக்களை அழுத்தமாகவும், திருத்தமாகவும் எழுதப் பழகிக் கொள்ள முடியும். ஆரம்ப நிலையில் அங்ஙனமாக எழுத்துப் பயிற்சி பெற ஊற்றுப் பேனு பயன்படாது. ஒருவாறு எழுது வதில் நல்ல பயிற்சி அடைந்த பின்னர் மாணவர்கள் ஏழாம் வகுப்பிலிருந்து ஊற்றுப் பேனுவால் எழுத முற்படலாம். தற் காலத்தில் மிக இளம் வயதிலேயே மாணவர்கள் ஊற்றுப் பேனுவால் எழுத முற்படுவதாலேயே பெரும்பாலானவர்கள் திருந்துவதில்லை. இக் கெட்ட பழக்கத்தை ஆசிரியர்கள் ஆரம்பத்திலேயே திருத்துதல் நலம்.

நல்ல கையெழுத்தின் தகுதிகள்

ஒரு மாணவன் நன்முக எழுதுகின்றுனு என்று பார்த்து மதிப்பிடுவதற்கு அவனிடம் கீழே கண்ட மூன்று தகுதிகள் இருக்கின்றனவா என்று ஆராய வேண்டும்: (1) விரைவு, (2) தெளிவு, (3) அழகும் அளவும்.

1. விரைவு: பார்த்து எழுதுதல் (Copying) மூலம் மாணவர் களின் விரைவை அதிகப்படுத்தலாம். பாடப் புத்தகங்களைப் பார்த்து, அவற்றிலுள்ள பகுதியையோ, ஒரு பக்கத்தையோ குறிப்பிட்ட கால வரம்பிற்குள் எழுதிக் கொடுக்க வேண்டு

மென்று உத்தரவிடலாம். எந்த மாணவர்கள் அக்கால வரம்பிற்குள் எழுதிக்கொண்டு வருகின்றார்களோ அவர்களுக்கு அதிகமான மதிப்பெண்களையும், அங்ஙனம் வராத மாணவர்களுக்குக் குறைவான மதிப்பெண்களையும் கொடுக்கலாம். இங்ஙனம் பயிற்சி கொடுத்தால் மந்தமாக எழுதும் மாணவர்களும் விரைவாக எழுதப் பழகிக் கொள்ளுவார்கள்.

கேட்டு எழுதுதல் (Dictation) மூலமும் மாணவர்களின் விரைவை அதிகப் படுத்தலாம். ஆசிரியர் ஒரு புத்தகத்திலிருந்து படிப்பதை மாணவர்கள் காதால் கேட்டுக்கொண்டே எழுத வேண்டும். இம்மாதிரியான பயிற்சி வார்த்தைகளிலும், வாக்கியங்களிலும், முழுப் பத்தியாக எழுதுவதிலும் கொடுக்கலாம். ஆசிரியர்கள், "எழுதுவதை நிறுத்து" என்றவுடனே, மாணவர்கள் நிறுத்திவிட வேண்டும். பிழையின்றி எழுதும் மாணவர்களுக்கு அதிக மதிப்பெண்களும், பிழைபட எழுதும் மாணவர்களுக்குக் குறைந்த மதிப்பெண்களும் கொடுக்க வேண்டும். இவ்விதமான பயிற்சியாலும் மாணவர்கள் விரைவாக எழுதுவதை அதிகப்படுத்தலாம்.

2. தெளிவு : மாணவர்களின் விரைவை அதிகப்படுத்த முயலும் காலத்தில் அவர்கள் தெளிவாக எழுதுகின்றார்களா இல்லையா என்பதையும் கவனிக்க வேண்டும். சில பெரியோர்கள் எழுதும் கடிதங்களையும், குறிப்புப் புத்தகங்களையும் யாராலுமே படித்துப் பார்க்க முடியாது. அவ்வளவு கிறுக்கலாக இருக்கும். இம்மாதிரி எழுதுவதால் ஒரு பயனும் இல்லை. நாம் எழுதுவதெல்லாம் பிறர் படித்துப் பார்த்துப் பொருளை அறிந்து கொள்ளுவதற்காகத் தானே? "நல்ல கையெழுத்து நல்ல வாழ்க்கைக்கு அறிகுறி" எனப் பெரியோர்கள் சொல்லுவார்கள். நன்றாக எழுதுபவர்களைத்தான் பிற்காலத்தில் நல்ல பதவிக்கு எடுத்துக் கொள்ளுவார்கள். ஒரு வேலைக்காக எழுதும் விண்ணப்பத்தைப் பார்த்தே இவருக்கு வேலை கொடுக்கலாம், வேலை கொடுக்கக் கூடாது என முன்னமே சில முதலாளிகள் தீர்மானித்து விடுவதுண்டு. ஆகவே தமிழ் எழுத்துக்களை எழுத்துக்கு எழுத்து இடம் விட்டு, வார்த்தைக்கு வார்த்தை இடம் விட்டு, வரிக்கு வரி இடம் விட்டு எழுத மாணவர்களைப் பழக்க வேண்டும். சில மாணவர்கள் இளமையிலிருந்து வார்த்தைக்கு வார்த்தை இடம் விடாமல் எழுத்துக்கு எழுத்து அதிக இடம் விட்டு எழுதுவார்கள்; இதனால் தெளிவு ஏற்படாது; இன்னும் சிலர் ஒரு வரியின் மேல் இன்னொரு வரியை

ஏற்றி எழுதிவிடுவார்கள். இதனாலும் தெளிவு ஏற்படாது. சிலர் தமிழ் எழுத்துக்களின் புள்ளிகளை எழுதாமல் விட்டுவிடுகின்றார்கள். இதனால் மற்றவர்கள் படிக்கும் காலத்தில் பொருள் விளங்காது தடுமாற நேரிடும். புள்ளிகளைக் கவனமாக எழுத வேண்டும்.

3. *அழகும் அளவும் :* தமிழ் எழுத்துக்களை அளவோடு எழுதினால் அழகு தன்னால் வரும். ஆங்கிலத்தைப் போன்றோ, இன்னும் வேறு சில மொழிகளைப் போன்றோ தமிழ் எழுத்துக்களை விரைவு கருதி ஒன்றோடு ஒன்று சேர்த்து எழுதவே கூடாது. முன்னால் சாய்த்தோ, பின்னால் சாய்த்தோ எழுதக் கூடாது. ஓர் எழுத்துப் பெரிதாகவும், அடுத்த எழுத்துச் சிறிதாகவும், அல்லது வார்த்தைகளையும், வரிகளையும் அங்ஙனமாகவோ சிறிது பெரிதாக எழுதக் கூடாது. அங்ஙனம் எழுதினால் கையெழுத்தின் அழகு குறையும். தமிழ் எழுத்துக்களை நேராக எழுதுதலே நலம். நேராக முத்துக்கோத்தாற்போன்று எழுத வேண்டும்.

முன்னர்க் கூறியவாறு முதலில் மூன்று கோடுகளிலும், பின்னர் இரண்டு கோடுகளிலும், பின்னர் ஒற்றைக் கோட்டிலும் எழுதப் பழக்க வேண்டும். எழுதும்பொழுது கொம்புகளையும், கீழ் விலங்கு, மேல் விலங்குகளையும் அளவோடு எழுதப் பழக்க வேண்டும். கால்களை அதன் முதல் எழுத்தோடு இணைத்து எழுதாமலும், மிகத் தூரத்தில் எழுதாமலும் அளவோடு எழுதப் பழக்க வேண்டும். சில மாணவர்கள் 'த' 'ற' 'ந' இவற்றின் அடிக்கோடுகளை முழுதும் நீட்டி எழுதாமல் கீழே இங்ஙனம்,

தறந | **தறந**
தறந |

தவறான முறை          சரியான முறை

கோடுகளை இழுத்தோ, அல்லது அடிக்கோடுகளை முறித்தோ எழுதுகின்றார்கள். அங்ஙனம் எழுதவிடாமல் எழுத்துக்களின் முழு அளவில் அவை எழுதப்படவேண்டும். சிலர் 'தி' என்ற எழுத்தை விரைவு கருதிப் பாம்பைப்போல வளைத்து எழுதி விடுகின்றார்கள்; சிலர் 'ரா' என்ற எழுத்துக்குமேல், கோடு இழுப்பார்கள். இம்மாதிரியெல்லாம் ஓர் அளவு

இல்லாமல் அவரவர்கள் விருப்பத்திற்குத் தமிழ் எழுத்துக்களை எழுதவிடாமல் சிறு வயதிலேயே அளவோடும், அழகாகவும் எழுத மாணவர்களைப் பழக்க வேண்டும். ஆகவே மாணவர்கள் தமிழ் எழுத்துக்களை எழுதும் காலத்தில் அவர்கள் விரைவாகவும், தெளிவாகவும், அழகாகவும், அளவோடும் எழுத இளமையி லேயே அவர்களைப் பழக்குவது ஆரம்ப நடுநிலை வகுப்பு ஆசிரி யர்களின் தலையாய கடமை ஆகும்.

பன்னிரண்டாம் அத்தியாயம்

# கட்டுரைப் பயிற்சி

## நோக்கம்

கட்டுரைப் பயிற்சிகளை இரண்டு வகைகளாகப் பிரித்துக் கொள்ள வேண்டும்; ஒன்று, வாய்மொழிக் கட்டுரைப் பயிற்சி; இரண்டாவது, எழுத்துக் கட்டுரைப் பயிற்சி. இரண்டு வகைகளான கட்டுரைப் பயிற்சி கொடுப்பதன் நோக்கங்கள் வருமாறு :—

1. கட்டுரைப் பயிற்சிகள் கொடுப்பதன் முதல் நோக்கம், மாணவர்கள் தாங்கள் சொல்லவேண்டிய கருத்துக்களைச் சுருக்கமாகவும், திருத்தமாகவும் சொல்லவோ எழுதவோ பழகுவதேயாகும். "சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்" என்றபடி மாணவர்கள் இளமையிலிருந்தே, தங்கள் எண்ணங்களை வழ வழ என்று எழுதாமலும், சுற்றிச் சுற்றி எழுதாமலும் நேரான முறைகளில் எழுதப் பழக வேண்டும். மாணவர்கள் எழுதும் கட்டுரைகளைப் படித்துப் பார்க்கும்பொழுது அநேக மாணவர்கள் நல்ல முறையில் எழுதப் பழகாமல் வீணான கருத்துக்களையும், வேண்டாத எண்ணங்களையும், தலைப்புக்குச் சிறிதும் பொருத்தமில்லாத பொருள்களையும் பக்கம் பக்கமாக எழுதித் தங்கள் காலத்தையும், ஆசிரியர் காலத்தையும் வீணாக்குகிறார்கள்; இம்மாதிரியான வேண்டாத நிலையை ஆரம்பத்திலிருந்தே ஆசிரியர்கள் தவிர்க்க வேண்டும்.

2. இரண்டாவதாக, மாணவர்கள் நாளுக்கு நாள் தங்களுடைய சொல்லாக்கத்தைப் பெருக்கிக்கொள்ள வேண்டும். இந்த நோக்கம் நிறைவேறும் முறையில் கட்டுரைப் பயிற்சிகள் கொடுக்கப்படல் வேண்டும். எங்ஙனம் ஒரு தொழிலாளிக்கு அவனுடைய கருவிகள் அவன் வேண்டும்பொழுது பயன்படுகின்றனவோ, அங்ஙனமே மாணவர்களுக்கும் சொற்களும், சொற்றொடர்களும் பயன்படவேண்டும். தச்சன் ஒன்றை நறுக்க வேண்டுமானால் உளியை உபயோகிக்கின்றான்; அறுக்க வேண்டுமானால் ரம்பத்தை உபயோகப்படுத்துகின்றான்; இழைக்க வேண்டுமானால் இழைப்புளியைக் கையாளுகின்றான்; செதுக்க

வேண்டுமானல் வாச்சியை வீசுகின்றான். அங்ஙனமே சொற்களும், சொற்றொடர்களும் மாணவர்களின் கருவிகளாக இருக்கவேண்டும். வேண்டும்பொழுது வேண்டிய கருத்துக்களை வெளிப்படுத்தக்கூடிய ஆயுதங்களாக அவை இருக்க வேண்டும். தகுந்த இடத்திற்குத் தகுந்த வார்த்தைகளை உபயோகப்படுத்தும் பழக்கத்தைக் கட்டுரைப் பயிற்சி மூலம் ஆசிரியர்கள் இளமையிலிருந்தே மாணவர்களுக்குக் கொடுக்க வேண்டும்.

3. கட்டுரைப் பயிற்சி மாணவர்களின் சிந்தனை சக்தியை வளர்க்கக்கூடியதாக இருக்கவேண்டும். கட்டுரை வகுப்புக்களில் இச் சக்தி வளர்வதற்கு உரிய சூழ்நிலையை ஆசிரியர்கள் வளர்க்க வேண்டும். ஆரம்ப வகுப்புக்களில் மாணவர்கள் அவர்களுடைய சூழ்நிலையிலுள்ள ஆடு, கோழி முதலியனவற்றைப் பற்றித் தெளிவாகப் பேசும்படிப் பழக்க வேண்டும். இன்னும் சிறு சம்பவங்கள் ஏதாவது நடந்திருந்தால் அவற்றைப் பற்றியும் சொல்லும்படியும் ஆசிரியர்கள் செய்ய வேண்டும். இம்மாதிரியான வாய்மொழிப் பயிற்சி மூலம் சிறுவர்களின் சிந்தனை சக்தி வளரும் என்பது திண்ணம்.

4. மாணவர்கள் எழுதும் கருத்துக்கள் இயற்கையாகப் பிறருக்கு எடுத்துச் சொல்லும் முறையில் இருக்க வேண்டும். ஒரு மாணவன் ஓர் உல்லாசப் பிரயாணம் சென்று வந்தவுடன், தான் பார்த்து அனுபவித்த அனைத்தையும் தன் வீட்டார்களுக்கோ, அல்லது நண்பர்களுக்கோ உண்மையாகவே எடுத்துச் சொல்லும் முறையில் மாணவர்கள் எழுதும் கட்டுரையும் அமைய வேண்டும். அக் கட்டுரையிலுள்ள சொற்களும், நடையும் செயற்கையாக அமைதல் கூடாது. பெரும்பாலான மாணவர்கள், கட்டுரை எழுதச் சொன்னவுடனேயே தங்களுடைய இயற்கைத் தன்மையை (Naturalness) மாற்றி, அவர்களுடைய நடைக்கும், சொற்களுக்கும் செயற்கை நிலையைக் (Artificialness) கொடுத்து விடுகின்றார்கள். ஆசிரியர்கள் இவ்வித நிலையை ஆரம்பத்திலிருந்தே தடுக்க வேண்டும்.

மேற்சொன்ன முறைகளில் மாணவர்கள் ஆரம்பத்திலிருந்தே கட்டுரை எழுதப் பழக்கப்படுவார்கள். ஆனல் அவர்கள் நாளடைவில் தங்களுக்கென ஒரு சொந்த நடையை எளிதில் கற்றுக் கொள்ளுவார்கள். இந்த நடை திடீரென வருவது எளிதல்ல. கட்டுரைப் பயிற்சி மூலம் மாணவர்கள் இந்நடையைப் பெற ஆசிரியர்கள் அவர்களைப் பழக்க வேண்டும். நடுநிலைப்

பள்ளிகளிலும் உயர்நிலைப் பள்ளிகளிலுமுள்ள மாணவர்களை திரு. மு. வ., திரு. வி. கல்யாண சுந்தரனர் போன்றோரின் கட்டுரைகளைப் பயிலும்படிச் செய்து, அவற்றைச் சுருக்கித் தரும் படியான கட்டுரைப் பயிற்சிகள் கொடுத்து வரலாம். அங்ஙனம் செய்யுங்காலத்தில் மாணவர்கள் அப்பெரியார்களின் கட்டுரை களில் அங்கொன்று, இங்கொன்றுமாக உள்ள சொற்களையோ, சொற்றொடர்களையோ திருடி எடுத்துக் கோவையும் பொருளும் இல்லாத கட்டுரைகளாக எழுத முற்படுவார்கள். அங்ஙனம் மாணவர்கள் செய்யும்பொழுது ஆசிரியர்கள் மாணவர்களைத் திருத்தித் தங்களுடைய சொந்த வார்த்தைகளில் எழுதும்படிப் பழக்க வேண்டும். அங்ஙனம் பழக்கினல் தங்களுக்கெனச் சொந்த நடை ஒன்றை எழுத மாணவர்கள் நாளடைவில் பழக்கிக் கொள்ளுவார்கள் என்பது திண்ணம்.

வாய்மொழிக் கட்டுரையின் இன்றியமையாமை :

கட்டுரைப் பயிற்சி என்ருல் அநேகர் எழுதும் பயிற்சியைப் பற்றியே நினைக்கின்ருர்கள்; வாய்மொழிப் பயிற்சியைப் பற்றிப் பெரும்பாலான ஆசிரியர்கள் நினைப்பதே இல்லை. சில ஆசிரியர் கள் ஆரம்ப நிலை வகுப்புக்களில்தான் வாய்மொழிப் பயிற்சி கொடுக்க வேண்டும் என்றும், நடுநிலை வகுப்புக்களிலோ, உயர் நிலை வகுப்புக்களிலோ வாய்மொழிப் பயிற்சி வேண்டுவது இல்லை என்றும் நினைக்கின்ருர்கள். இம்மாதிரியான தவருன கருத்துக் களை மாற்றிக்கொள்ளுவது நலம்.

ஆரம்ப வகுப்புக்களிலிருந்து உயர்நிலை வகுப்புக்கள் வரை எல்லா வகுப்புக்களிலும் வாய்மொழிக் கட்டுரையில் மாணவர் களுக்கு ஆழ்ந்த பயிற்சி கொடுக்க வேண்டும். ஒன்று முதல் மூன்று வகுப்புக்கள் முடிய வாய்மொழிப் பயிற்சிக் கட்டுரைகளே கொடுக்க வேண்டும். நான்காவது வகுப்பிலிருந்து எழுத்துக் கட்டுரைப் பயிற்சி கொடுக்கலாம். மூன்று வகுப்புக்கள் முடிய உள்ள வகுப்புக்களிலுள்ள குழந்தைகளுக்குச் சிறு தலைப்புக்கள் கொடுத்து அவற்றைப்பற்றி எடுத்துச் சொல்லும்படி அவர் களுக்குப் பயிற்சி கொடுக்கலாம். அத்தலைப்புக்கள் அவர்கள் வீட்டில் வளர்க்கும் பறவைகள், விலங்குகள், பொருள்களைப்பற்றி இருக்கலாம்; வீட்டில் நடந்த விசேடங்களைப்பற்றி இருக்கலாம்; பள்ளியில் நடக்கும் விளையாட்டு விழா, ஆண்டு விழாக்களைப் பற்றி இருக்கலாம். குழந்தைகளைச் சிறு உல்லாசப்

பிரயாணங்களுக்கு அழைத்துச் சென்றுவிட்டுத் திரும்பிய பின்னர், அவர்கள் கண்டவற்றைப்பற்றிப் பேசச் சொல்லலாம்.

மாணவர்களைச் சிறு உரையாடல்கள் நிகழ்த்தும்படிச் செய்யலாம். இவ்வுரையாடல்கள் பாடத்துடன் தொடர்புடையவையாகவும் இருக்கலாம்; அல்லது மேற்சொன்ன தலைப்புக்களைப் பற்றியும் இருக்கலாம். தமிழ்ப் பாடங்களைப் பற்றித்தான் இவ்வுரையாடல்கள் இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. சமூகப் பாடம், விஞ்ஞானம் முதலிய பாடங்களைச் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்களும் முன் சொல்லப்பட்ட மாதிரியில் மாணவர்களுக்கு வாய்மொழிப் பயிற்சி கொடுக்கலாம்.

4-ஆம் வகுப்பிலிருந்து எழுத்துக் கட்டுரைப் பயிற்சிகள் மாணவர்களுக்குக் கொடுக்கும் ஆசிரியர்கள் கீழ்க்கண்ட நடைமுறையை அனுசரித்தல் நலம். ஒரு கட்டுரையின் தலைப்பைப் பற்றி மாணவர்களை எழுதும்படிச் சொல்லுவதற்கு முன் அத்தலைப்புக்களைப் பற்றி மாணவர்களை வகுப்புக்களில் விவாதிக்கும்படிச் சொல்ல வேண்டும். இங்ஙனம் விவாதிக்கும் காலத்தில் ஒவ்வொரு மாணவனும் தனது உள்ளத்தில் எழும் கருத்துக்களைச் சொல்லுவான். அக்கருத்துக்களை எல்லாம் ஒவ்வொன்றாக ஆசிரியர் கரும்பலகையில் எழுதிப்போட வேண்டும். அப்பொழுது தலைப்புக்குப் பொருத்தம் இல்லாத கருத்துக்களையும் சில மாணவர்கள் சொல்லலாம். அம்மாதிரியான கருத்துக்களை ஆசிரியர்கள் நீக்கிவிடவேண்டும். இம்மாதிரியான கருத்துக்களை மாணவர்களைக் கொண்டே களையும்படிச் செய்தல் நலம். ஒரு மாணவன் சொன்ன கருத்தை மற்றொரு மாணவன் சொல்லலாம். அம்மாதிரியாகத் திரும்பிச் சொல்லுதலையும் (Repetition) ஆசிரியர் தவிர்க்க வேண்டும். மாணவர்கள் சொல்லும் கருத்துக்கள் எல்லாவற்றையும் கரும் பலகையில் எழுதிப்போட்ட பின்னர் அவற்றை எல்லாம் பத்திகளாகப் பிரிக்குமாறு சொல்லலாம். பத்திகளின் தலைப்புக்களையும் சொல்லும்படிச் செய்யவேண்டும். கரும்பலகையில் இங்ஙனம் எழுதப்பட்டவை சிறு குறிப்புக்களாக (hints) இருந்தாற்போதும். ஒரு காலம் (period) முழுவதும் இங்ஙனம் விவாதித்த பின்னர் இன்னொரு காலத்தில் (period) அக்கட்டுரையைக் குறிப்புப் புத்தகத்தில் எழுதும்படிச் செய்யவேண்டும். ஆசிரியர் கட்டுரைகளைத் திருத்திய பின்னர், அப்பிழைகளை மாணவர்களுக்கு இன்னொரு பிரிவு வேளையில் (period) எடுத்துக்

காட்ட வேண்டும். இங்ஙனமாக ஒரு கட்டுரைக்குச் சுமார் மூன்று காலங்கள், குறைந்தது இரண்டு காலங்களாவது செலவழித்தால் தான் மாணவர்கள் கட்டுரைகளால் அடைய வேண்டிய முழுப் பயன்களையும் அடைய முடியும்.

வாய்மொழிப் பயிற்சிக் கட்டுரையால் ஏற்படும் நன்மைகள் :

1. மாணவர்கள் சுத்தமாகவும், தெளிவாகவும், பிழையறவும் பேசப் பழகிக் கொள்ளலாம்.

2. பேசும்படிதான் மாணவர்கள் எழுதுவார்கள் ஆகையால், பேச்சில் ஏற்படும் 'ல'கர 'ள'கர முதலிய உச்சரிப்புப் பிழைகளை நீக்கிவிடலாம்.

3. மாணவர்கள் ஒரு தலைப்பைப்பற்றிச் சிந்திப்பதற்குத் தகுந்த சந்தர்ப்பம் வாய்மொழிக் கட்டுரை மூலம் ஏற்படுகின்றது. சிந்தித்த கருத்துக்களைப் பத்திகளாகத் தொகுப்பதற்கும் பயிற்சி ஏற்படுகின்றது.

4. ஒரு மாணவன் தனது கருத்துக்களைச் சொல்லும் பொழுது வேறொரு மாணவன் கவனிக்கின்றான். பொருத்தம் இல்லாதவற்றையும், திருப்பித் திருப்பியும் சொல்லுகின்றானா என்று கவனிப்பதற்கு வேண்டிய சந்தர்ப்பத்தையும், சூழ்நிலையையும் இப்பயிற்சி அளிக்கின்றது.

5. ஒவ்வொரு மாணவனும், 'நான் முன்னால்', 'நீ முன்னால்' என்று தனது கருத்துக்களைச் சொல்ல எழுகின்றான். இதனால் மாணவர்களுக்குள்ளாகவே ஒரு போட்டி மனப்பான்மை ஏற்படுகின்றது. இப்போட்டி மனப்பான்மை மாணவர்களுக்குள் நல்ல ஊக்கத்தையும், உற்சாகத்தையும் உண்டாக்குகின்றது.

6. வாய்மொழிப் பயிற்சி மூலம் மாணவர்கள் எப்பொழுதும் சுறுசுறுப்பாக இருப்பார்கள். இம்மாதிரியான சுறுசுறுப்பே வாழ்க்கையில் அவர்களை முன்னேறச் செய்கின்றது.

கட்டுரைகளின் வகைகள் :

மாணவர்கள் எழுத வேண்டிய கட்டுரைகளின் வகைகள் பல. அவற்றை ஒவ்வொன்றாக நோக்குவோம்.

1. கடிதங்கள் எழுதுதல் :

நான்காவது வகுப்பிலிருந்தே மாணவர்கள் கடிதங்கள் எழுதப் பழகிக்கொள்ள வேண்டும். நான்காவது ஐந்தாவது வகுப்பு

மாணவர்கள், ஆசிரியர்களுக்கு விடுமுறை விண்ணப்பங்கள், உறவினர்களுக்குத் தம் வீட்டுச் சம்பவங்களுக்கு வரும்படி அழைப்பு, வீட்டில் நடக்கும் சம்பவங்களைப் பற்றி உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் எழுதும் முறை ஆகியவற்றை எழுதச் சொல்லிக் கொடுக்க வேண்டும். எழுதும் கடிதங்களில் ஊர், தேதி, விளிப்பு, உடல் (Body of the Letter), முடிவு, அல்லது கையெழுத்து இடுதல், முகவரி இவை அனைத்தும் எங்ஙனம் எழுதவேண்டும் என்பதை ஆசிரியர் எடுத்துக் காட்டவேண்டும்.

6, 7-ஆம் வகுப்புக்களிலுள்ள மாணவர்களுக்கு வியாபார சம்பந்தமான கடிதங்கள், வேலைக்கு விண்ணப்பம் செய்து கொள்ளுதல், பள்ளிக்கூடத்தில் நடக்கும் விழாக்கள் முதலியனவற்றைப் பற்றிப் பத்திரிகை ஆசிரியர்களுக்கு அறிவிக்கும் கடிதங்கள், ஊர்களில் நடக்கும் குற்றங்களைப்பற்றி மேலதிகாரிக்குத் தெரிவிக்கும் கடிதங்கள் (Reports), தங்கள் ஊர்களுக்கு வேண்டிய தேவைகளைக் குறித்து உரிய அதிகாரிகளுக்கு எழுதும் வேண்டுகோள்கள் முதலியனவற்றை எழுதும்படிப் பயிற்சி கொடுக்கலாம்.

## 2. படக் கட்டுரை

கீழ் வகுப்பு மாணவர்களைப் படங்களைப் பார்த்து, அவற்றிலுள்ள கருத்துக்களை விவரித்து எழுதும்படிச் சொல்லலாம். படங்கள் நன்றாகவும் அழகாகவும் இருக்கவேண்டும். ஒரு பகுதியைப் பற்றியோ, அல்லது முழுக் கதையைப் பற்றியோ படங்கள் ஒன்றாகவும் இருக்கலாம்; அல்லது படங்கள் ஒன்றிற்கு மேற்பட்டனவாகவும் இருக்கலாம்; இம்மாதிரியான படங்களை மாணவர்கள் மிக ஆர்வத்தோடு உற்று நோக்குவார்கள். ஆகவே மாணவர்களிடையே இக்கட்டுரைப் பயிற்சியால் உற்றுநோக்கும் சக்தி அதிகமாகும். பின்பு படங்களில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்களை அறிந்துகொள்ளுவதற்காக ஆழ்ந்து சிந்திப்பார்கள். ஆகவே படக் கட்டுரைப் பயிற்சியால் மாணவர்களின் சிந்தனைகள் தூண்டப்படுகின்றன. படங்களில் தங்களுக்குத் தெரியாத கருத்துக்களைப்பற்றி ஆசிரியர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ள மாணவர்கள் ஆசிரியர்களைக் கேள்விகள் கேட்பார்கள். இதனால் அவர்களுடைய ஊக்கமும் உற்சாகமும் தூண்டப்படுகின்றன. இங்ஙனம் தாங்கள் சேகரித்துக்கொண்ட கருத்துக்களை எல்லாம் பின்பு கோவைப்படுத்தி எழுத்துக்களாக எழுதுவதற்கு முற்படுவார்கள்.

இப்படக் கட்டுரைப் பயிற்சி கொடுக்கும்பொழுது ஆசிரியர் கவனிக்க வேண்டியவை சில உள. அவையாவன:—ஒன்று, ஆசிரியர் படங்களை மாணவர்களுக்குத் திறந்து காண்பிப்பதற்கு முன்னர் அப்படங்களைப் பற்றி ஆயத்தமான (Preparatory) விவரங்கள் அனைத்தும் மாணவர்களுக்குச் சொல்லி அவர்களுடைய ஆர்வத்தைத் தட்டி எழுப்ப வேண்டும். அங்ஙனம் தட்டி எழுப்பிய பின்னரே படங்களை மாணவர்களுக்குக் காட்ட வேண்டும். அங்ஙனம் படங்களைக் காட்டிய பின்னரும் மாணவர்களைத் திடீரெனக் கேள்விகள் கேட்கும்படி அனுமதிக்கக் கூடாது. படங்களைச் சிறிது நேரம் அவர்கள் உற்று நோக்கிச் சிந்தித்த பின்னரே கேள்விகள் கேட்க மாணவர்களை அனுமதிக்க வேண்டும்.

இரண்டாவதாக, படங்களில் வெளிப்படையாகக் காணப் படும் கருத்துக்களே மாணவர்களுக்குப் புலப்படுமே தவிர அவர்களுக்குப் புலப்படாமல் மறைந்து நிற்கும் கருத்துக்களும் இருக்கலாம். அவ்விதக் கருத்துக்கள் வெளித் தோன்றும்படியான கேள்விகளை ஆசிரியர்கள் மாணவர்களைக் கேட்கவேண்டும்; அவ்வினாக்களுக்கு வேண்டிய விடைகள் மாணவர்களுக்குத் தெரியாவிட்டால் ஆசிரியரே அவ்விடைகளைச் சொல்லவேண்டும். இவ்விதமான வாய்மொழிப் பயிற்சி கொடுத்த பின்னரே படக் கட்டுரையை மாணவர்கள் எழுதவேண்டும்.

3. கதைக் கட்டுரை

கீழ்வகுப்பு மாணவர்கள் கதைகளை விரும்புவார்கள். பாடப் புத்தகங்களில் வந்துள்ள உரைநடைப் பகுதியிலும், செய்யுள் பகுதியிலுமுள்ள கதைகளை முன்னர் மாணவர்களைச் சொல்லும்படிச் செய்தல் வேண்டும். பின்னர்ப் புத்தகங்களைப் பார்க்காமல் அக்கதைகளை எழுதும்படிச் சொல்ல வேண்டும்.

இங்ஙனமே நூல் நிலையத்திலிருந்து எடுத்து மாணவர்கள் படிக்கும் புத்தகத்திலிருந்தும் கதைக் கட்டுரைகள் எழுதும்படிச் சொல்லலாம்.

புத்தகங்களில் இல்லாமல் ஆசிரியரே ஒரு கதையைச் சொல்லலாம். அதைக் கவனித்துக்கொண்டு இருந்த மாணவர்களை மீண்டும் அக்கதையைச் சொல்லும்படிச் செய்து பின்னர் எழுதும்படிச் சொல்லலாம்.

6, 7-ஆம் வகுப்பு மாணவர்களுக்கு ஒரு கதையைப்பற்றிய குறிப்புக்களை ஆசிரியர் கரும்பலகையில் எழுதிப்போட்டு, பின்னர் அவற்றை விரித்துக் கதை உருவத்தில் எழுதும்படிச் செய்ய லாம். ஒரு கதையின் தலைப்பை மட்டும் கொடுத்து அத்தலைப்புக் குறிக்கும் கதையை எழுதும்படிச் செய்யலாம்.

ஒரு கதையின் ஆரம்பத்தை மட்டுமோ, முடிவை மட்டுமோ குறிக்கும் சில வார்த்தைகளைக் கரும்பலகையில் எழுதிப்போட்டு, பின்னர் அக்கதைகளைப் பூர்த்திசெய்து எழுதும்படிச் சொல்ல லாம்.

4. பொதுக் கட்டுரை (Essays)

4, 5-ஆம் வகுப்பு மாணவர்கள் நாய், பூனை, ஆடு, மாடு, ஊர், வயல், 'அஞ்சல் நிலையம்' இவற்றைப்பற்றி எழுதலாம். 6, 7-ஆம் வகுப்பு மாணவர்கள் மதுரை ஆகிய நகரங்களைப் பற்றியும், 'கள் குடியாமை', 'தீண்டாமை' முதலிய தலைப்புக்களைப் பற்றி யும் கட்டுரைகள் எழுதலாம். 'நாங்கள் சென்ற உல்லாசப் பிரயாணம்' ஆகிய தலைப்புக்களைப் பற்றி எழுதலாம். வகுப்புக் களில் மாணவர்கள் பயிலும் கைத்தொழில்களைப் பற்றியும் கட்டு ரைகள் எழுதலாம். உதாரணமாக, 'காய்கறிகள் விளைவித்தல்', 'துணி செய்தல்', 'எழுதும் அட்டை செய்தல்', 'படம் ஒட்டி' (Album) தயாரித்தல் முதலிய தலைப்புக்களைப் பள்ளிகளில் நடக் கும் கைத்தொழில்களுக்குத் தகுந்தாற்போல் கொடுக்கலாம். இம்முறையால் தொழிற் பாடங்களுக்கும், தமிழ்ப் பாடங்களுக் கும் இணைப்பு (Correlation) ஏற்படும். இம்மாதிரியான பயிற் சிக் கட்டுரைகளைத் தொழில் ஆசிரியரும், தமிழ் ஆசிரியரும் கலந்து கொடுக்க வேண்டும்.

5. உரையாடல் கட்டுரை (Dialogues)

புத்தகத்திலுள்ள கதையைப் படித்து அறிந்த பின்னர் அப்பொருளை உரையாடல் முறையில் மாற்றி எழுதும்படிக் கட்டுரைப் பயிற்சி அளிக்கலாம். இம்மாதிரி கட்டுரைகள் 6, 7-ஆம் வகுப்புக்களில் எழுதப் பழகிக்கொண்டால் உயர்நிலை வகுப்புக்களில் படிக்கும்பொழுதும், பிற்கால வாழ்க்கையிலும் சிறு நாடகங்கள் எழுதுவதற்கு வசதியாக இருக்கும்.

6. சிந்தனைக் கட்டுரைகள்

அ. சுயசரிதைக் கட்டுரைகள்

'ரூபாயின் சுய சரிதை', 'துண்டுக் கடிதத்தின் (Card) சுய சரிதை', 'மாட்டின் சுய சரிதை', 'மாணவனின் சுய சரிதை' இம்மாதிரியான கட்டுரைகளை 6, 7-ஆம் வகுப்பு மாணவர்களை எழுதும்படிச் சொல்லலாம். இம்மாதிரியான கட்டுரைகள் எழுதுவதால் மாணவர்களின் சிந்தனைகள் தூண்டப்படும். பிற் காலங்களில் தங்களுடைய சுய சரிதங்களை எழுதிவைக்கும் பழக்கம் மாணவர்களுக்கு ஏற்படும்.

ஆ. "நான் இந்தியாவின் முதல் மந்திரியாக இருந்தால் என்ன செய்வேன்?"

இம்மாதிரியான தலைப்புக்களை 6, 7-ஆம் வகுப்பு மாணவர் களுக்குக் கொடுத்துக் கட்டுரை எழுதும்படிச் சொன்னால் அவர் களுடைய சிந்தனை தூண்டப்பட்டு விரிவடையும்.

7. மொழிப் பயிற்சிகள்

உரைநடைப் பகுதியிலுள்ள பாடங்களிலிருந்து சில மொழிப் பயிற்சிகள் கொடுக்கலாம். உதாரணமாக, எதிர்மறை வாக்கியங்களை உடன்பாடாகவும், உடன்பாட்டு வாக்கியங்களை எதிர்மறையாகவும், செய்வினை வாக்கியங்களைச் செயப்பாட்டு வினையாகவும், செயப்பாட்டு வினை வாக்கியங்களைச் செய்வினை யாகவும், இறந்தகால வினைகளை நிகழ்காலமாகவும்,எதிர்காலமாக வும், ஆண்பாலைப் பெண்பாலாகவும், பெண்பாலை ஆண்பாலாக வும், ஒருமை எழுவாய் பயனிலைகளைப் பன்மை எழுவாய் பயனிலை களாகவும் மாற்றும்படியான பயிற்சிகள் கொடுக்கலாம்.

8. சுருக்குதல் (Precis)

மாணவர்களுக்கு ஒரு கதையைக் கொடுத்து அதைச் சுருக்கி எழுதும்படிச் சொல்லலாம். சாதாரணமாக $\frac{1}{3}$ பாகமாகத்தான் சுருக்கிச் சொல்லுவது வழக்கம். இங்ஙனம் சுருக்கும்பொழுது சில மாணவர்கள் முக்கியக் கருத்துக்களையே விட்டுவிடுவார்கள். அங்ஙனம் விட்டுவிட்டால் சுருக்கம் தவறாக ஆகிவிடும். முக்கியம் அல்லாதன எவை என்பதை மாணவர்களுக்கு ஆசிரியர்கள்

எடுத்துக் காட்ட வேண்டும். 4, 5-ஆம் வகுப்பு மாணவர்களை அவர்கள் பாடப் புத்தகங்களில் படித்த கதைகளைச் சுருக்கும்படிக் கொடுக்கலாம். 6, 7-ஆம் வகுப்பு மாணவர்களுக்கு வியாசங்களைக் கொடுக்கலாம்.

9. பொருள் தெரிந்து விடை எழுதும் பயிற்சிகள் (Passages for Comprehension)

பாடப் புத்தகங்களிலிருந்தோ அல்லது நூல் நிலையப் புத்தகங்களிலிருந்தோ 6, 7-ஆம் வகுப்பு மாணவர்கள் புரிந்து கொள்ளக்கூடிய பகுதிகளை எடுத்து இம்மாதிரியான பயிற்சிகளாகக் கொடுக்கலாம். ஆசிரியர் கேட்கும் வினாக்கள் தெளிவாகவும், முன்பின் முரணில்லாமலும், ஊகித்துப் பதில்சொல்லக்கூடிய விடைகளை எதிர்பார்க்கக் கூடியனவாகவும், கேட்ட பொருளையே கேட்கக்கூடியனவாக இல்லாமலும் இருக்கவேண்டும். இம்மாதிரியான பயிற்சிக்குக் கொடுக்கப்படும் பகுதிகளை மாணவர்கள் இரண்டு மூன்று முறைகளுக்குக் குறையாமல் நன்கு மனத்துக்குள்ளாகவே படிக்கும்படிச் சொல்ல வேண்டும். அங்ஙனம் படித்து இன்ன கேள்விக்கு இன்ன பதில்தான் என முன்னரே புரிந்து கொண்ட பின்னரே மாணவர்கள் விடைகள் எழுத வேண்டும். சில மாணவர்கள் கொடுக்கப்பட்ட பகுதிகளை நன்கு ஆழ்ந்து படிக்காமல், மேலோட்டமாகவும் அவசரமாகவும் படித்துவிட்டு உடனே வினாக்களுக்கு விடைகள் எழுதப் புகுந்து விடுவார்கள். அங்ஙனம் எழுதும் காலத்தில் வினாக்களுக்குத் தகுந்த விடைகளை எழுதாமல், பெரும்பாலும் இந்த வினாவிற்கு இந்த விடைதான் இருக்கவேண்டும் என்று நினைத்து (Guess), வரிசையாக உள்ள வாக்கியங்களை அப்படியே எடுத்து எழுதிவிடுவார்கள். இம்மாதிரியான தவறுதல்களை ஆசிரியர் நீக்க வேண்டும். மேலும் வினாக்களுக்கு உரிய விடைகளைத் தங்கள் சொந்த மொழியில் எழுதப் பழக்க வேண்டும். அங்ஙனம் இன்றிக் கொடுக்கப்பட்ட உரைநடைப் பகுதியிலுள்ள வாக்கியங்களையே அப்படியே எடுத்து எழுத அனுமதிக்கக் கூடாது. இம்மாதிரியான பயிற்சிகளுக்குச் சுலபமாக விளங்கக் கூடிய செய்யுட் பகுதிகளையும் ஏழாம் வகுப்பு மாணவர்களுக்குக் கொடுக்கலாம்.

10. பொழிப்புரை எழுதுதல் (Paraphrasing)

பாடப் புத்தகங்களிலிருந்தோ, அல்லது வேறு புத்தகங்களிலிருந்தோ சுலபமாக விளங்கக் கூடிய செய்யுள் பகுதிகளை

எடுத்து அவற்றின் பொழிப்புரையை எழுதும்படிச் செய்ய லாம். மாணவர்கள் பொழிப்புரை எழுதும்பொழுது, மூலத்தில் இல்லாத வேண்டாத கருத்துக்களையும் சேர்த்துவிடுவார்கள். அங்ஙனம் சேர்க்காமல் ஆசிரியர்கள் பார்த்துக் கொள்ள வேண்டும்.

11. நாட்குறிப்பு எழுதுதல் (Diaries)

6, 7–ஆம் வகுப்பு மாணவர்களுக்கு நாட்குறிப்பு எங்ஙனம் எழுத வேண்டும் என்ற பயிற்சிக் கட்டுரைகளைக் கொடுக்கலாம். இம்மாதிரியான கட்டுரைகளை மாணவர்கள் எழுதும்பொழுது ஆநந்தரங்கம் பிள்ளை நாட்குறிப்பு (Diary) எங்ஙனம் அவர் காலத்து வரலாற்றுக் குறிப்புக்களைக் கொடுக்கின்றது என்பன போன்ற முக்கியத் தத்துவத்தை எடுத்துக் காட்டவேண்டும். நம் நாட்டிலும் முற்காலத்தில் படித்தவர்கள்கூட நாட்குறிப்பு வைத்துக் கொள்ளும் பழக்கம் இல்லாததால்தான் பழங்காலத்து வரலாற்றுக் குறிப்புக்கள், பழக்க வழக்கங்களைச் செய்யுள் நூல்கள் மூலம் ஒருவாறு தெரிந்துகொள்ள முடிகின்றதே தவிர, தெளிவாகவும் நுணுக்கமாகவும் அவற்றைக் கொடுக்கக் கூடியன ஒன்றும் இல்லை. இம்மாதிரியான குறையைத் தவிர்க்க வேண்டி மாணவர்களுக்கு இளமையிலிருந்தே நாட்குறிப்பு எழுதும் முறையில் பயிற்சி கொடுத்தல் நலம்.

12. விவாதிக்கும் கட்டுரைகள்

அகில இந்திய வானொலி நிலையத்தில் சில சமயங்களில் சில தலைப்புக்களை எடுத்துக்கொண்டு இருவரோ அதற்கு மேற்பட்டவரோ அத்தலைப்பைப் பற்றி விவாதிக்கிறார்கள். அப்பொழுது அத்தலைப்பைப் பற்றி ஒட்டிய கருத்துக்களையும், அதற்கு மறுதலையான கருத்துக்களையும் எடுத்துச் சொல்லி ஒரு முடிவுக்கு வருகின்றார்கள். இம்மாதிரியான கட்டுரைகளும் 6, 7–ஆம் வகுப்பு மாணவர்களுக்குக் கொடுக்கலாம்.

13. பத்திரிகைக் கட்டுரைகள்

மாணவர்களின் ஆக்க வேலைகளை ஊக்குவிப்பதில் பள்ளிப் பத்திரிகையும் ஒன்று. ஒவ்வொரு பள்ளியிலும் ஆண்டு ஒன்றுக்கு, ஒன்று அல்லது இரண்டு தடவைகள் கையெழுத்துப் பிரதியோ, அல்லது அச்சுப் பிரதியோ தயார் செய்தல் அவசியம். பள்ளிப் பத்திரிகைக்கு எழுதும் முறையில் சில கட்டுரைகளை, கட்டுரை

குறிப்புப் புத்தகத்தில் எழுதும்படிச் சொல்லலாம். இம்மாதிரியான கட்டுரைகளின் தலைப்புக்களை மாணவர்களே தங்களுக்கு எனத் தேர்ந்து எடுத்துக் கொள்ளலாம். அல்லது ஆசிரியர்கள் பொதுவான சில கருத்துக்களைக் கொடுத்து வழியும் காட்டலாம். இங்ஙனம் எழுதும் கட்டுரைகளில் சிறந்தவற்றை எழுத்துப் பள்ளிப் பத்திரிகையில் சேர்ப்போம் என்று ஆசிரியர்கள் மாணவர்களுக்கு அறிவித்துவிட்டால், அவர்கள் அம்மாதிரியான கட்டுரைகளை வெகு ஊக்கமாக எழுத ஆரம்பித்துவிடுவார்கள்.

இங்ஙனம் ஊக்குவிக்கும் காலத்தில் சில மாணவர்கள் தங்களுக்குத் தெரிந்த எளிய முறையில் சிறு நிகழ்ச்சிகளைப் பற்றிச் சிறு செய்யுட்கள்கூட எழுதலாம். இவ்விதச் சமயத்தில் ஆசிரியர்கள், அவற்றில் பிழை காணுதும், எள்ளி நகையாடாமலும், கருணைக் கண் கொண்டு, தாய்மை உணர்ச்சியோடு நோக்கியும் அவ்விளங் கவிஞர்களைத் தட்டி எழுப்பினுல் பிற்காலத்தில் அவர்கள் கவிஞர்களாகலாம். விளையும் பயிர் முளையிலே அல்லவா?

ஆசிரியர்கள் மாணவர்கள் எழுதிய கட்டுரைகளைத் திருத்துவது எங்ஙனம்?

மாணவர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட கட்டுரைப் பயிற்சிகளை எவ்வளவு கவனமாக எழுதினபோதிலும், ஆசிரியர்கள் அக்கட்டுரைகளை முழு மனத்தோடு திருத்தினுல்தான், மாணவர்கள் கட்டுரை எழுதிய முழுப் பயனையும் அடைய முடியும். அநேக ஆசிரியர்கள் கட்டுரைகள் திருத்துவதைப் பெருஞ் சுமையாக நினைக்கின்றுர்கள். அங்ஙனம் ஒரு பொழுதும் நினைத்தல் கூடாது.

ஒரு வகுப்பிற்கு எத்தனை கட்டுரைப் பயிற்சிகள் கொடுக்க வேண்டும் என்ற வினவை அநேக ஆசிரியர்கள் எழுப்புகின்றுர்கள். ஒரு மாணவன் ஓர் ஆண்டில் எத்தனை பயிற்சிகள் (Exercises) எழுத வேண்டும் என்பது அதிக முக்கியம் அல்ல; ஆனுல் எது முக்கியம் என்ருல் கட்டுரை எழுதுவதால் அம்மாணவன் தன்னிடத்தில் தோன்றும் கருத்துக்களை எவ்வளவு தூரம் தெளிவாகவும், பிழையறவும் நல்ல தமிழில் பிறருக்குப் புரியும்படி எழுதப் பழகிக் கொள்ளுகின்றுன் என்பதே முக்கியம். ஆனுல் சில சோம்பேறி ஆசிரியர்கள் தமக்குரிய வேலைகளைத் தட்டிக் கழிப்பதற்காக ஆண்டு ஒன்றுக்கு இரண்டு மூன்றுக்குமேல்

கட்டுரைப் பயிற்சி கொடுப்பதில்லை. இம்மூன்றிலும் ஒன்றிற்கு மேல் திருத்துவதே இல்லை. அவ்வொன்றின் பிழைகளையும் மாணவர்களுக்கு எடுத்துக் காட்டுவதே இல்லை. இப்படிப்பட்ட ஆசிரியர்களிடம் மாணவர்கள் நன்மதிப்புக் காட்டுவதே அரிதாகிவிடும்.

பெரும்பாலும் தமிழ் ஆசிரியர்கள் மூன்று பிரிவுகளுக்கோ (Sections) அல்லது வகுப்புக்களுக்கோ (Classes) குறையாமல் பாடங்கள் சொல்லிக் கொடுக்க வேண்டி இருக்கும். அவ்வகுப்புக்களின் கட்டுரை குறிப்புப் புத்தகங்களை எல்லாம் அவரே திருத்த வேண்டி இருக்கும். ஆகையால் ஆண்டு ஒன்றுக்கு ஒரு வகுப்பிற்குப் பதினைந்துக்குக் குறையாமலும் இருபதுக்கு மேற்படாமலும் பயிற்சிகள் கொடுத்தல் சாலப் பொருத்தமாகும். அங்ஙனம் கொடுத்தால் ஆசிரியர்களும் மாணவர்களால் எழுதப்பட்ட கட்டுரைகளைச் சுமையாக நினையாமல் முழு மனத்துடனும், உற்சாகத்துடனும் திருத்துவார்கள் என்பது நிச்சயம்.

மாணவர்கள் தமிழ்க் கட்டுரைப் பயிற்சிகளுக்கு எனத் தனிக் குறிப்புப் புத்தகங்கள் அச்சிடப்படல் வேண்டும். ஒவ்வொரு குறிப்புப் புத்தகத்தின் முதல் பக்கத்திலும் எழுதப்பட்ட கட்டுரைகளின் வரிசைக் குறிப்புக்களை (index) எழுதுவதற்காகக் கட்டங்கள் வரைந்து இருத்தல் வேண்டும். அவற்றை ஒவ்வொரு மாணவனும் உடனுக்குடன் பூர்த்தி செய்யவேண்டும். அங்ஙனம் செய்துள்ளானா என அநேக ஆசிரியர்கள் கவனிப்பதே இல்லை. அங்ஙனம் செய்யாத மாணவர்களை அவ்வப்பொழுது செய்யும்படிக் கண்டிக்க வேண்டும்.

மாணவர்கள் தாங்கள் எழுதும் கட்டுரைகளைக் குறிப்புப் புத்தகங்களின் இடது பக்கங்களில் (Left-hand pages) எழுதுதல் நலம். ஆசிரியர் காட்டும் திருத்தங்களை வலது புறப் பக்கங்களில் திருத்தல் நலம். இம்முறையைச் சிலர் மாற்றியும் கொள்ளுகின்றனர்கள். பொதுவாக ஒரே விதமான முறையை எல்லா வகுப்புக்களிலும் கையாளுவது நலம். எம்முறையைக் கடைப்பிடித்தாலும், அம்முறை எல்லா வகுப்பு ஆசிரியர்களும் கடைப்பிடிக்கப்பட வேண்டுவது மிக அவசியமாகும்.

ஒவ்வொரு கட்டுரைக்கும் தலைப்பு மிக இன்றியமையாதது. அநேக மாணவர்கள் தலைப்பை எழுதுவதே இல்லை. இங்ஙனம் செய்யாத மாணவர்களுக்கு மதிப்பு எண்கள் (marks) குறைக்கவேண்டும்.

இடது ஓர வெளியில் ஒவ்வொரு பயிற்சியும் எழுதும் தேதியையும், அப்பயிற்சியின் வரிசை எண்ணையும் மாணவர்கள் குறிக்க வேண்டும்.

மாணவர்கள் எழுதியுள்ள கட்டுரைகளுக்கு ஆரம்பம், உடல், முடிவு சரியாக இருக்கின்றனவா என ஆசிரியர் கவனிக்க வேண்டும். பத்திகள் சரியாகப் பிரிக்கப் பட்டிருக்கின்றனவா என்றும், ஒவ்வொரு பத்தியும் ஒரு கருத்தைக் கொண்டு இருக்கின்றதா என்றும், முன் பத்திக்கும் அடுத்த பத்திக்கும் தொடர்பு இருக்கின்றதா என்றும் ஆசிரியர் கவனிக்கவேண்டும். பத்திகள் பெரும்பாலும் அளவில் சிறியவையாக இருத்தல் நலம். ஆனால் ஓரிரண்டு பத்திகள் அளவில் நீண்டவையாக இருந்தாலும் பரவாயில்லை.

ஒரு கட்டுரையின் முழு அளவு எவ்வளவு இருக்கவேண்டும் என்பது அக்கட்டுரையின் வகையைப் (kind) பொறுத்துள்ளது. சாதாரணமாக ஒரு கட்டுரை கால் பக்க அளவில் மூன்றுக்கு மிகாமல் இருக்கலாம்.

மாணவர்கள் சொல்ல வேண்டிய கருத்துக்களைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்திருக்கின்றார்களா என்றும், வேண்டாத கருத்துக்களையும், கூறியது கூறலையும் நிரப்பியிருக்கிறார்களா என்றும் கவனித்துத் திருத்துதல் வேண்டும்.

ஆசிரியர்கள் சிவப்பு மை பேனாவாலேயே திருத்துதல் நலம்.

ஆசிரியர்கள் பிழைகளைத் திருத்தும்பொழுது இரண்டு முறைகளைக் கையாளலாம். ஒன்று, பிழைகள் அனைத்தையும் திருத்தி, திருத்தங்களைப் பிழைகளுக்கு மேலேயே எழுதுவது; இன்னொன்று, திருத்தங்களைப் பிழைகளுக்கு மேல் எழுதாமல் சில குறியீடுகளால் (Symbols) அவற்றை எடுத்துக் காட்டுவது. இக்குறியீடுகளை ஆசிரியர் முன்னரே கரும்பலகையில் எழுதிப் போட்டு அவை எவற்றைக் குறிக்கின்றன என்பதையும் மாணவர்கள் தங்கள் குறிப்புப் புத்தகங்களில் எழுதி வைத்துக்கொள்ளும் படிச் செய்யவேண்டும். அங்ஙனம் ஏற்கனவே எழுதிக்கொண்ட மாணவர்கள், ஆசிரியர் தமது கட்டுரைப் புத்தகத்தில் எடுத்துக்காட்டியுள்ள குறியீடுகளின் முழுப் பொருளையும் அறிந்து அவற்றிற்குத் த்க்கபடி திருத்தச் செய்யவேண்டும்.

இவ்விரு முறையிலும் எது சிறந்தது என்ற வினா எழலாம். முதல் முறையில் ஆசிரியர் ஒவ்வொரு பிழைக்கு மேலும் திருத்.

தங்களை எழுதுவது சிறிது சிரமமாக இருக்கும். ஆகவே குறியீடு களை அங்கங்கே குறித்துவிட்டால் ஆசிரியருக்குத் திருத்தும் வேலையிலுள்ள சிரமம் குறையலாம். மேலும் முன் முறையை ஆசிரியர் பின்பற்றினுல், கட்டுரைப் பயிற்சிக் குறிப் புப் புத்தகங்களைத் திரும்ப மாணவர்கள் ஆசிரியரிடம் பெற்ற வுடனே எம்மாதிரிப் பிழைகள் நேர்ந்துள்ளன என்று சிந்திப்ப தற்கு அவர்களுக்கு இடமே இல்லை. நேரடியாக ஆசிரியரால் எழுதப்பட்ட திருத்தங்களை எடுத்து எழுத ஆரம்பித்துவிடுவார் கள். ஆனுல் குறியீட்டு முறைப்படி திருத்தினுல் மாணவர்கள் குறிப்புப் புத்தகங்களைப் பெற்றதும் எப்பிழைகள் நேர்ந்துள்ளன என்பதைப்பற்றி ஆலோசிப்பார்கள். ஆலோசித்த பிறகும் தங்க ளுக்கு விளங்காவிட்டால் ஆசிரியர்களை அணுகி ஐயங்களைக் கேட்டுக் கொள்வார்கள்.ஆகவே கட்டுரைப் பயிற்சிகளை ஆசிரி யர்கள் திருத்துங்காலத்தில் முன்சொன்ன முறையை (திருத்தங் களை வரிக்கு மேல் எழுதும் முறை) 4, 5-ஆம் வகுப்பு மாணவர் கள்பாலும், குறியீட்டு முறையை 6, 7-ஆம் வகுப்பு மாணவர்கள் பாலும் பின்பற்றலாம். கீழ்க்கண்ட குறியீடுகளைக் காண்க :

| | | |
|---|---|---|
| 1. | இ. பி. | இலக்கணப் பிழை |
| 2. | எ. பி. | எழுத்துப் பிழை |
| 3. | வி. | விடு (Omit) |
| 4. | ந. இ. | நடை நன்ருக இல்லை |
| 5. | நி. த. | நிறுத்தக் குறித் தவறு |
| 6. | பொ. இ. | பொருத்தம் இல்லாதவை |

மாணவர்கள் தமிழ்க் கட்டுரைகளில் நிறுத்தக் குறிகளையே சரியாக எடுத்தாள்வதில்லை. இப்பிழையைப் பல ஆசிரியர்கள் எடுத்துக் காட்டுவதும் இல்லை. இதனுல் மாணவர்களுக்கு எந்த நிறுத்தக் குறியை எங்கே குறிப்பது என்றே தெரிவதில்லை. இக்குறிகளைக் குறிக்காமல் விடுவதாலும், தவருகக் குறிப்ப தாலும் பொருளே மாறுபட்டுவிடும். ஆகவே ஆசிரியர்கள் இப்பிழைகளை எடுத்துக் காட்ட வேண்டியது மிக அவசிய மாகும்.

மாணவர்கள் பிழைகளை வலது பக்கத்தில் திருத்த வேண்டும். அவ்வாறு திருத்தும்பொழுது ஒவ்வோர் எழுத்துப் பிழையையும் 5 தடவைகளுக்குக் குறையாமல் திருத்த வேண்டும். பின்னர் அதற்குக் கீழ் ஒரு திருத்தத்தையும் விடாமல் திருத்துவதோடு கட்டுரை முழுவதையும் திருப்பி எழுதுவதே

நலம். அங்ஙனம் இன்றிப் பிழைகளை மட்டும் திருத்தச் சொன்னால் சில சமயங்களில் சில மாணவர்கள் பிழைகளைத் திருத்துவதன் நோக்கத்தையே புரிந்துகொள்ளாமல் கடமைக் காகத் திருத்துகின்றார்கள். இம்மாதிரி கடமைக்காகத் திருத்து வதைச் சில ஆசிரியர்களும் கவனிப்பதில்லை. அதனால் கட்டுரைப் பயிற்சி மாணவர்களுக்குக் கொடுக்கப்படுவதன் அடிப்படை நோக்கமே நிறைவேறாது 'தவறிவிடுகின்றது. உதாரணமாக, "போரில் குதிரைகள் இறந்தது' என மாணவன் எழுதியிருக் கிறான். 'இறந்தன' என்று அந்த வார்த்தையை மட்டும் திருத் தினால் போதாது. ஏனென்றால் அப்பொழுது குதிரைகள் என்ற பன்மை எழுவாய்க்குப் பொருத்தமாகப் பயனிலையும் இறந்தன எனப் பன்மையில் இருக்கவேண்டும் என்ற இலக்கண விதியை அறிந்து கொள்ள முடியாது. அம்முழு வாக்கியத்தையும் திருப்பி எழுதினால்தான் அப் பிழையைப் புரிந்துகொள்ள முடியும். ஆகவே இம்மாதிரியான பிழைகளைத் தடுக்கவேண்டி முழுக் கட்டுரையையும் திருப்பி எழுதுவதே நலம். அல்லது முழு வாக்கியங்களையாவது திருத் தும்படிச் சொல்ல வேண்டும்.

மாணவர்கள் எழுதிய கட்டுரையை ஆசிரியர்கள் சுறுசுறுப் பாகத் திருத்திக் குறிப்பிட்ட காலத்தில் மாணவர்களிடம் குறிப் புப் புத்தகங்களைத் திருப்பித் தரவேண்டும். அடுத்த கட்டுரையை மாணவர்கள் எழுதுவதற்கு முன்னரே, அதற்கு முன்னர் எழுதப் பட்ட கட்டுரையை ஆசிரியர் திருத்திக் கொடுக்கவேண்டும். அங்ஙனம் இன்றி இரண்டு மூன்று கட்டுரைகளைச் சேர்ந்தாற் போல் ஆசிரியர் திருத்தி மாணவர்களிடம் குறிப்புப் புத்தகங் களைத் திருப்பிக் கொடுத்தால் மாணவர்கள் புதிய கட்டுரைகள் எழுதுவதிலுள்ள ஊக்கம் குறையும். மேலும் அத்தகைய ஆசிரி யர்களிடத்தில் மாணவர்கள் உள்ளூற மதிப்பும் காட்ட மாட் டார்கள் என்பது திண்ணம்.

பழைய கட்டுரையில் ஆசிரியர் எடுத்துக் காட்டிய பிழைகள் அனைத்தையும் மாணவன் திருத்தியுள்ளானா என முன்னர் அறிய வேண்டும். அங்ஙனம் பிழைகள் அனைத்தும் மாணவனால் திருத் தப் பட்டிருந்தால்தான் ஆசிரியர் அவன் எழுதிய புதிய கட்டு ரையைத் திருத்த வேண்டும். இல்லாவிட்டால் புதிய கட்டுரையை ஆசிரியர் திருத்தாது விடுதல் நலம். அங்ஙனம் செய்தால் அம் மாணவன் கண்டிப்பாகப் பின்பு பிழைகளை ஒழுங்காகத் திருத்தி விடுவான்.

ஆசிரியர் "பொதுப்பிழை குறிப்புப் புத்தகம்" (The Common Error Note Book) என ஒன்று, ஒவ்வொரு வகுப்பிற்கும் தனித் தனியாகத் தயாரித்து வைத்துக்கொள்ளுதல் நலம். ஆசிரியர் மாணவர்களின் கட்டுரைகளைத் திருத்தும்பொழுதே அவற்றில் காணப்படும் பொதுப் பிழைகள் சிலவற்றை வகைகளாகப் பிரித்துத் தமது 'பொதுப் பிழை குறிப்புப் புத்தகத்தில்' குறித்துக்கொள்ள வேண்டும். ஆசிரியர் கட்டுரைச் சுவடிகளை மாணவர்களிடம் திருப்பிக் கொடுப்பதற்கு முன்னரே, தமது குறிப்புப் புத்தகத்திலுள்ள ஒவ்வொரு பிழையையும் கரும் பலகையில் எழுதிப்போட வேண்டும். வகுப்பு முழுவதையும் பொதுவாக நோக்கி அதிலுள்ள பிழையை எடுத்துக் காட்டும்படி மாணவர்களுக்கு அறிவிக்க வேண்டும். ஒவ்வொரு மாணவனும் 'நான் முன்னல், நீ முன்னல்' என எழுந்திருப்பான். இங்ஙனம் எல்லாப் பிழை திருத்தங்களையும் எடுத்துக் காட்டிய பின்னரே கட்டுரை குறிப்புப் புத்தகங்களை மாணவர்களிடம் திருப்பித் தரவேண்டும். ஒவ்வொரு மாணவனும் வெகு ஆவலாகத் தனக்கு என்ன மதிப்பெண் கொடுக்கப்பட்டிருக்கின்றது என்றும், அடுத்தவனுக்கு எவ்வளவு கொடுக்கப்பட்டிருக்கின்றது என்றும் ஒப்பிட்டுக் காண்பான். அங்ஙனம் ஒப்புநோக்கும் போது ஆசிரியர் தனக்கும், தன் நண்பர்களுக்கும் கொடுத்துள்ள மதிப்பெண்கள் சரிதானு எனச் சீர்தூக்கிப் பார்ப்பான். அச்சமயம் ஆசிரியர் வகுப்பிற்குள் சுற்றிப் பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும். ஒரு சிறிது சலசலப்பு மாணவர்களிடையே ஏற்பட்டாலும், அதிக சப்தம் இல்லாமல் இருக்கும்படிப் பார்த்துக்கொள்ள வேண்டும். மேலும் தவறு காரணமாக மதிப்பெண்கள் குறைபடுவதை ஆசிரியர் எடுத்துக் காட்டலாம். இங்ஙனம் சில மாணவர்கள் சில நிமிட நேரம் கழிப்பார்கள். இது இயற்கையும், தவிர்க்க முடியாததும் ஆகும்.

அதன் பின்னர் மாணவர்கள் தங்களுக்கு விளங்காத பிழை திருத்தங்களை ஆசிரியரிடம் கேட்பார்கள். சுற்றிக்கொண்டு வரும் ஆசிரியர் அவ்வப்பொழுது இம்மாதிரியாக எழும் ஐயங்களைத் தீர்த்துவிட வேண்டும். இம்மாதிரியாக ஒரு கட்டுரை எழுதுவதற்குச் சுமாராக மூன்று அல்லது இரண்டு காலங்களை யாவது (Period) ஆசிரியர் செலவழித்தல் நலம். ஒரு வகுப்பில் முன் எடுத்துக் காட்டிய மாதிரி மாணவர்களோடு வாய்மொழி மூலம் (Oral discussion) ஆயத்தம் செய்ய வேண்டும். வாய்

மொழிப் பயிற்சி கொடுத்த அதே வகுப்பிலோ அல்லது மறு வகுப்பிலோ மாணவர்கள் கட்டுரைகளை ஆசிரியர் மேற்பார்வையில் எழுத வேண்டும்; அப்பயிற்சியைத் திருத்திய பின்னர் மற்றொரு வகுப்பில் முன்காட்டப்பட்ட மாதிரி பிழை திருத்தங்களை எடுத்துக் காட்டவேண்டும். இம்மாதிரியாகக் கட்டுரை எழுதும் பயிற்சி கொடுத்தால் கண்டிப்பாக அநேக மாணவர்கள் வெகு விரைவில் தங்கள் கருத்துக்களை நல்ல தமிழில் எழுதக் கற்றுக்கொள்ளுவார்கள் என்பது திண்ணம்.

சில ஆசிரியர்கள் இம்மாதிரியாகச் செய்வதற்குக் காலம் போதாது என்று வாதாடலாம். பள்ளி நேரத்தில் காலம் போதாவிட்டால், விடுமுறைகளிலோ அல்லது வகுப்புக்கள் தொடங்கு முன் காலையிலோ, விட்டபின் மாலையிலோ ½ மணிக்குக் குறையாமல் இம்மாதிரியான பிழைகளை எடுத்துக் காட்டலாம். ஆசிரியர்கள் மாணவர்களின் நன்மைக்காக, இங்ஙனம் அதிக வகுப்புக்கள் நடத்துவது நலம்.

மாணவர்கள் தங்கள் கட்டுரை குறிப்புப் புத்தகங்களை ஒழுங்காக வைத்துக்கொள்கிறார்களா என்று ஆசிரியர் கவனித்தல் வேண்டும். மாணவர்கள், அட்டைகளின்மீது கண்டவற்றை எழுதுவார்கள்; தோன்றியவற்றைக் கிறுக்குவார்கள். இவற்றை ஆசிரியர் எடுத்துக்காட்டி அவர்களைத் திருத்துவது நலம். கட்டுரை குறிப்புப் புத்தகங்கள் மாணவர்களுக்கு வேண்டாத சமயங்களில் ஆசிரியர் அவற்றை எல்லாம் வாங்கித் தாமே வைத்திருந்து, வேண்டும்பொழுது அவர்களுக்குக் கொடுக்கும் வழக்கம் மேற் காட்டப்பட்ட நன்மையைப் பயக்கும். ஆண்டின் இறுதியில் அவற்றை மாணவர்களுக்கே ஆசிரியர் திருப்பித் தந்து விடலாம்.

**வினாத் தாள்கள் :**

# T. S. L. C. EXAMINATION

*MARCH 1960*

**Elementary Grade**

## Methods of Teaching Language—Texts and Methods

**TAMIL**

**Time—Two hours and a half.** **Maximum Marks 100**

அ. பிரிவு—பாடநூலும் இலக்கணமும்

*மதிப்பு எண்கள் 60*

குறிப்பு : 1. IIIம் வினாவிற்குச் செய்யுளிலேயே விடை எழுதுக.

2. ஏனைய வினாக்களுக்கு நும் நடையிலேயே விடை எழுதுக.

I. பின்வரும் வினாக்களுக்குள் எவையேனும் ஆறனுக்கு விடை எழுதுக : 18

(1) "தரத்தருணம் இதுவே" என இராமலிங்க அடிகளார் எதை இறைவனிடம் வேண்டுகின்றார்?

(2) இடுக்கணழியாமை பற்றி வள்ளுவர் வகுப்பது யாது?

(3) தேவர் இமையாது நின்ற நிலைக்குக் காரணமாக எதை அறநெறிச் சாரம் கூறுகின்றது?

(4) கோசலை கோயில் புக்க இராமனின் தோற்றம் எவ்வாறிருந்தது?

(5) "தம்மரசைப் பிறன் ஆள விட்டுவிட்டுக் குண்டினபுரத்து வாழ்தல் இழுக்கன்றோ?" என்று கேட்ட நளனுக்கு அவன்றன் மக்கள் கூறிய விடை யாது?

(6) பெருங் கோப் பெண்டு ஒருங்குடன் மாய்ந்த செய்தி யைச் சாத்தனர் எங்ஙனம் செங்குட்டுவனுக்குக் கூறினர்?

(7) மழைக் குறிகளாக முக்கூடற் பள்ளில் கூறப் பெறுவன யாவை?

(8) இளவேனிற்றிருமகள் எவ்வாறு சிறந்தாள் என்று அதிவீரராம பாண்டியர் கூறுகின்றார்?

II. அடியிற் காண்பனவற்றுள் எவையேனும் இரண்ட னுக்கு நிகழிடமும் பொழுதும் காட்டி விளக்கவுரை வரைக: 6

(1) செல்வத்துப் பயனேயீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே.

(2) "என்று நீ அன்று நான் உன்னடிமை யல்லவோ"

(3) "புனைந்திலன் மௌலி குஞ்சி மஞ்சனப் புனித நீரால்
நனைந்திலன் என் கொல்"

III. நுமது நினைவிலிருந்து ஈங்கு என்று முடியும் நாலடி யார் பாட்டை அடி பிறழாது எழுதுக. 6

IV. (1) அடியில் வரும் கீழ்க்கோடிட்ட பகுதிகளுள் எவை யேனும் ஐந்தனுக்கு இலக்கணக் குறிப்பெழுதுக: 5

<u>ஒறுத்தாரை</u> ஒன்றாக

வறியார்க் கொன்றீவ<u>தே</u> (ஏ)

<u>பெய்வளை</u> தளிரால்

மக்களை முன் <u>காணு</u>

என் மக்கள் <u>போல்கின்றீர்</u>

தம்முள் <u>குழீஇ</u>

(2) கீழ்க்காணும் தொடர்களைப் புணர்ச்சி பிரித் தெழுதுக:— 5

நானிலம், பூண்டளிக்கும், மறப்பறியா, செருவுள்ளம் பற்றார் (இருவகையாக)

V. பின்வருவனவற்றுள் எவையேனும் ஐந்தனுக்கு விடை எழுதுக:— 20

(1) வடக்கிருந்த கோப்பெருஞ் சோழன், பிசிராந்தை யார் உறுதியாக அங்கு வருவார் என்று சான்றோ ருக்கு எவ்வாறு அறுதியிட்டுக் கூறி நிறுவினன்?

(2) திருக்குறள் குலப் பொது நூலாயிருப்பதைச் சான்று காட்டி விளக்குக.

(3) இயற்கைக் கல்வி பற்றி திரு. வி. க. கூறுவதென்ன?

(4) புலவர் பேசும் முறையில் நகைச் சுவை அமைந்துள்ளதைப் புலப்படுத்துக.

(5) தமிழிற் பிறமொழிச் சொற்கள் புகுவது பற்றிப் பாரதியார் பகர்வது என்ன?

(6) இராவணன் செங்கோலனுகத் திகழ்ந்தது எவ்வாறு விளக்கப்படுகிறது?

(7) உரிமை உணர்ச்சி, கடமையுணர்ச்சிகளைப்பற்றி மு. வ. கூறுவதென்ன?

ஆ. பிரிவு—முறைகள்

மதிப்பு எண்கள் 40

குறிப்பு: I வினாவிற்கும் ஏனையவற்றுள் எவையேனும் இரண்டனுக்கும் விடை எழுதுக.

I. முதல் வகுப்பு மாணவர்களுக்குப் படிக்கக் கற்பிக்கு முன்னரே படிப்பில் ஒரு பற்றுண்டாக்குவதில், அவர்களிடையுள்ள படிப்பில் ஆயத்தத்தை (Readiness to read) எவ்வாறு பயன்படுத்திக்கொள்வீர் என விளக்குக. 16

II. தொடக்க நிலைப் பள்ளிகளில் செய்யுள் கற்பிக்கும் நோக்கங்களுக்கும் உரைநடை கற்பிக்கும் நோக்கங்களுக்குமுள்ள அடிப்படை வேற்றுமைகள் யாவை? 12

III. ஐந்தாம் வகுப்புக்குக் கடிதம் எழுதும் பயிற்சி ஒன்றை எவ்வாறு நடத்துவீர்? உமது விடையை ஓர் எடுத்துக்காட்டால் விளக்குக. 12

IV. தொடக்க நிலைப்பள்ளி மாணவர்களின் பேச்சில் நீர் கண்ட குறைகள் யாவை? அவற்றை எவ்வாறு போக்குவீர்? 12

# T. S. L. C. EXAMINATION

*MARCH 1960*

## Secondary Grade

LANGUAGE-TEXTS AND METHODS-TAMIL

Time : Two hours and a half] [Maximum Marks : 100

அ. பிரிவு—பாடநூலும் இலக்கணமும்.

குறிப்பு : (1) III ம் வினாவிற்குச் செய்யுளிலேயே விடை எழுதுக.

(2) ஏனைய வினாக்களுக்கு நும் நடையிலேயே விடை எழுதுக.

I. கீழ்வருவனவற்றுள் எவையேனும் ஆறனுக்கு விடை எழுதுக : 18

(1) 'உயிர்க்குயிராய்த் தழைத்தது', 'எதிர் வழக்கிடவும் நின்றது' என்று கடவுளைத் தாயுமான அடிகளார் விளக்குவது எவ்வாறு?

(2) தமிழ்ச் சுவையோடு ஒப்பிட்டுப் பார்க்கப் பாரதி தாசனர் எடுத்துக் கூறும் நான்கு பொருள்களைக் கூறி விளக்குக.

(3) பேரறிவாளன் திருவை விளக்க வள்ளுவர் வழங்கும் உவமை யாது? அதனைப் பொருளொடு பொருத்தி (உவமேயத்தோடு) காட்டுக.

(4) காற்றெழில் மேற்றெழில்கள் பற்றி நாலடியார் நவிலுவது யாது?

(5) கண்ணகியின் குணமேம்பாட்டைக் கவுந்தியடிகள் மாதரிக்கு எவ்வாறு எடுத்துரைத்தார்?

(6) கைகேயியின் மனத்தை மாற்ற மந்தரை "எங்ஙனம் வாழ்தி!" என்றும், "கெடுத்தொழிந்தனை உனக்கரும் புதல்வனை" என்றும் கூறி இடித்துரைத்ததென்ன?

(7) சோழனது "நாமவேலின் திறன்", "பகல் வெய்யோன் அருள்" ஆகியவற்றின் மேலேற்றிக் காவிரியின் சிறப்பை இளங்கோவடிகள் வழிநின்று விளக்குக.

(8) சிவகதி விளையுமாற்றைத் திருநாவுக்கரசர் எடுத்துக் கூறுவ தெங்ஙனம்?

II. அடியில் வருவனவற்றுள் எவையேனும் இரண்டனுக்கு நிகழிடமும் பொழுதும் காட்டி விளக்கவுரை வரைக: 8

(1) அணி யெல்லாம் ஆடையின் பின்.

(2) வருந்துமோர் மிடியன் சேம வைப்பெதிர் பெற்றாற் போலும்.

(3) அல்லும் பகலும் அலைந்து வந்தேன் எங்கள் ஆழி இறைவனைக் காண வந்தேன்.

III. நுமது நினைவிலிருந்து "பால் நினைந்து" என்று தொடங்கும் திருவாசகப் பாடலை அடி பிறழாது எழுதுக. 4

IV. (1) அடியில் வரும் கீழ்க்கோடிட்ட பகுதிகளுள் எவையேனும் ஆறனுக்கு இலக்கணக் குறிப்பு எழுதுக: 6

உன்னைத் துணைக் கொடு

சிறைப்புள் ஓதிமம்

காதகரே (ஏ)

கேடு இல் வாயிலும்

போய் அழைத்திடுமின்

விரும்பினன் நோக்கி

தூமடி உடீஇ

(2) கீழ்க்கண்ட தொடர்களைப் புணர்ச்சி பிரித்தெழுதுக: 6

விற்றுக்கோட்டக்கது, காற்றொழிலென்று, கண்ணனை துளவம், வண்டினுற்றாண் கெடல், கணிச்சித்திருக்கையான் (இருவகையாக)

V. அடியில் வருவனவற்றுள் எவையேனும் ஆறனுக்கு விடை எழுதுக: 18

(1) தாம் கற்றுத் தெளிந்தவற்றை வெளியிடுவதற்குச் சிறிதும் அஞ்சுதல் செய்யார் மறைமலையடிகளார் என்பதை ஒரு சான்று கொண்டு நிறுவுக.

(2) சோழனது களிறு புறங்கடை நின்ற காட்சியை எடுத்துக் கூறுக.

(3) திரு. வி. க. வைப் பின்பற்றிச் சமய நெறியையும் அந்நெறி நிற்றலையும் விளக்குக.

(4) பழந்தமிழ்ப் புலவர் செய்ந்நன்றி யறிபவர் என்பதை ஓர் எடுத்துக்காட்டால் விளக்குக.

(5) நச்சு மரத்தால் திருவள்ளுவர் அறிவுறுத்தும் உண்மை யாது?

(6) தாய்மொழியில் உயர்தரக் கல்வியைப் பரப்புதற் குரிய வழிகளில் கலைச்சொல்லாக்கம் பற்றிப் பாரதியார் பகர்வதென்ன?

(7) கபிலர் பாட்டிலிருந்து பாரி வள்ளலின் படைவீரமும் கொடைவீரமும் விளங்குதலை எடுத்துக் காட்டுக.

ஆ. பிரிவு—முறைகள்

மதிப்பு எண்கள்: 40.

குறிப்பு: I வினாவிற்கும் ஏனையவற்றுள் எவையேனும் இரண்டனுக்கும் விடை எழுதுக.

I. செய்யுளைச் சிதைத்துக் கற்பித்தலை ஏன் தவிர்க்க வேண்டும்? சிதைத்துக் கற்பித்தலை எவ்வாறு தடுப்பீர்? மூன்றும் அமைப்புக்கு (Form III) ஏற்ற ஒரு செய்யுளை இம்முறையில் எவ்வாறு கற்பிப்பீர் எனப் பாடக்குறிப்புகள் எழுதிக் காட்டி உமது விடையை விளக்குக. 16

II. ஓர் உரைநடைப் பாடம் நடத்தும்போது கற்பித்தல் முறையாக, நடித்துக்காட்டலை எவ்வாறு மேற்கொள்வீர்? முதலாம் அமைப்புக்கு ஏற்ற ஒரு செய்திப்பகுதியை ஒரு நாடகக் காட்சியாக மாற்றி எழுதுவதற்குரிய குறிப்புக்களைத் தருக. 12

III. வாய்மொழி வெளியீட்டில் ஏழாம் வகுப்பில் உரையாடல் (Conversation) எவ்விடத்தைப் பெற்றிருக்கிறதென மதிப்பிடுக. அவ் வகுப்புக்கு உரையாடலுக்கு ஏற்ற ஒரு பொருளைத் தேர்ந்தெடுத்து அதுபற்றிய உரையாடல் வகுப்பை எவ்வாறு நடத்துவீர் எனவும் கூறுக. 12

IV. இடைநிலை மாணவர்களிடை நிலவும் சொற்களஞ்சியத் தொகுதியை எவ்வாறு வளர்ப்பீர்? எடுத்துக்காட்டுகள் கொண்டு உமது விடையை விளக்குக. 12

# T. S. L. C. EXAMINATION

*SEPTEMBER 1959*

## Secondary Grade

LANGUAGE-TEXTS AND METHODS-TAMIL

Time: Two hours and a half]  [Maximum Marks: 100

### SECTION A—TEXTS AND GRAMMAR

A பிரிவு—பாடநூலும் இலக்கணமும்

Marks *60*

குறிப்பு : *1.* III ம் வினாவிற்குச் செய்யுளிலேயே விடை எழுதுக.

2. ஏனைய வினாக்களுக்கு நும் நடையிலேயே விடைகள் எழுதுக.

I. கீழ்க் காண்பவற்றுள் எவையேனும் ஆறனுக்கு விடை எழுதுக :

(*1*) செந்தமிழ்ச் செல்வியீன்ற புலமைச் செல்வர்கள் யார்? அச்செல்வியிடம் புலவர் வேண்டுவது யாது?

(2) அன்புடைமை பற்றி வள்ளுவர் என்ன வகுத்துள்ளார்?

(*3*) பாதிரிப்பூ எதை விளக்க உவமையாக வந்துள்ளது? உவமைப் பொருத்தத்தைப் புலப்படுத்துக.

(4) குகனைக் கோசலைக்கும் கோசலையைக் குகனுக்கும் பரதன் எவ்வாறு அறிமுகப்படுத்தினான்?

(5) தாயிடம் காந்தியார் உரைத்துச் சென்ற சூளுரை யாது?

(*6*) கருவூர் தேவர் எதை, என்றும் புறக்கேன் என்கின்றார்?

(7) கார்ப்பெயச் செழிக்கும் கழனி பரமனை வழிபடும் பக்தன் எவ்வாறு அறிமுகப்படுத்தினான்?

II. அடியில் வருவனவற்றுள் எவையேனும் இரண்டனுக்கு நிகழிடமும் பொழுதுங்காட்டி விளக்கவுரை வரைக:

(1) மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்களெல்லாம் உன் புகழ் ஆக்கிக்கொண்டாய் உயர்குணத் துரவுத் தோளாய்.

(2) தேமொழி யுரைத்தது செவ்வை நன்மொழி.

(3) பின்னரும் பெற்றுப் பெயர்த்து மெழிலியாய் வந்திவணடைந்து மற்றிராப்பகல் மறந்து நிரந்தர முழைக் குமிந் நிலைமையர் யாவர்?

III. நுமது நினைவிலிருந்து "அல்லையாண்டு" என்று தொடங்கும் கம்பராமாயணப் பாடலை அடி பிறழாது எழுதுக.

IV. (1) அடியில் வரும் கீழ்க்கோடிட்ட பகுதிகளுள் எவையேனும் ஆறனுக்கு இலக்கணக் குறிப்பு எழுதுக:

செந்நெல் மாற்றிய

வென்று விடல்

ஆவின் கடைமணி

கேட்டனன் கிராதர் வேந்தன்

வார்சிலைத் தடக்கை

நாவென்ன நாவே (ஏ)

வழிபடூஉம் பத்தன்

(2) கீழ்க்கண்ட தொடர்களைப் புணர்ச்சி பிரித்து எழுதுக:

ஒண்ணிறம், புன்கண்டீர்த்தோன், பிறக்கலாற்றுறந்த, உறவுக்கோனட்டு, விறகிற்றீ, இன்னடம்பயிலும்.

V. அடியிற் காண்பனவற்றுள் எவையேனும் ஆறனுக்கு விடை எழுதுக:

(1) குற்றாலத்தில் குறத்தி வாயிலாகக் கூறுவதுபோல் நிறைகள் சிலவற்றைப் புலவர் எவ்வாறு கூறுகின்றார்?

(2) பண்டைத் தமிழ்ப் புலவருக்கும் புரவலருக்கும் இடையே என்ன தொடர்பு அமைந்திருந்தது?

(3) அகடு முகடுகள் யாவை?

(4) இசையில் உயிர்கள் எல்லாம் எவ்வாறு ஈடுபடுகின்றன?

(5) சக்தியைச் சிதறவிடாமல் ஒருமுகப்படுத்த வேண்டுவதை ஆசிரியர் எவ்வாறு விளக்குகின்றார்?

(6) தேசீய இனத்தையும் குடும்பத்தையும் ஆசிரியர் ஒப்பிடும் முறை என்ன?

(7) கனி என்னும் சொல் ஆசிரியரால் எவ்வாறு விளக்கப்படுகிறது?

## SECTION B—METHODS

### B பிரிவு—முறைகள்.

(Marks 40)

குறிப்பு: இரண்டாம் வினாவிற்கும் ஏனையவற்றுள் எவையேனும் இரண்டனுக்கும் விடை எழுதுக.

I. இடைநிலைப்பள்ளி மாணவர்களிடை, தாய்மொழியில் கருத்துக்களை வெளியிடும் ஆற்றலை எவ்வழிகளில் வளர்ப்பீர்? அவற்றுள் ஒன்றை வகுப்பில் எவ்வாறு செயல்முறையில் நடத்துவீர் என விளக்குக.

II. விதி வரு முறையில் (Inductive Method) இலக்கணத்தை மூன்றும் அமைப்புக்கு (Form III) எவ்வாறு நடத்துவீர்? அவ்வகுப்புக்கு ஏற்ற ஓர் இலக்கணப் பாடத்துக்குப் பாடக் குறிப்புக்கள் எழுதிக் காட்டி உமது விடையை விளக்குக.

III. இடைநிலைப் பள்ளி மாணவர்களின் தாய்மொழிப் பாடநூல்களில் உரைநடைப் பாடங்கள் ஏன் சேர்க்கப்பட்டிருக்கின்றன? எவ்வகைப் பாடங்களை இரண்டாம் அமைப்புக்குரிய (II Form) தமிழ்ப் பாட நூலில் பொதுப்பகுதியில் (முதற்பிரிவு) நீர் சேர்த்துக்கொள்வீர்? பாடத் தலைப்புக்களைக் கூறுக.

IV. முதலாம் அமைப்பு மாணவர்களிடைப் பொதுவாக நீர் காணக்கூடிய எழுத்துக் கூட்டுப் (Spelling) பிழைகள் யாவை? அவற்றை எவ்வாறு போக்கலாம்?

# T. S. L. C. EXAMINATION

## SEPTEMBER 1959

## Elementary Grade

METHODS OF TEACHING LANGUAGE–
TEXTS AND METHODS–TAMIL

Time: Two hours and a half] [Maximum Marks: 100

SECTON A—TEXTS AND GRAMMAR

A பிரிவு-பாடநூலும் இலக்கணமும்

Marks 60

*குறிப்பு:* (*1*) III ஆம் *வினாவிற்குச் செய்யுளிலேயே விடை எழுதுக.*

(*2*) *ஏனைய வினாக்களுக்கு நும் நடையிலேயே விடை எழுதுக.*

I. *பின் வருவனவற்றுள் எவையேனும் ஆறனுக்கு விடை எழுதுக:*

(*1*) *கோத்தும்பியரைப் பார்த்துப் புலவர் வேண்டுவது யாது?*

(*2*) *கல்விபற்றித் திருக்குறள் வகுப்பது யாது?*

(*3*) *நாகம் இடிக்கஞ்சுதல் என்னும் உவமை எதை விளக்க வந்தது? உவமைப் பொருத்தத்தைப் புலப் படுத்துக.*

(*4*) *வயல்வழிச் சென்றால் விளையும் இன்னல்களைக் கவுந்தியடிகள் கூறியவை யாவை?*

(5) *திருநாவுக்கரசர்பால் அப்பூதியடிகள் வைத்திருந்த அன்பின் திறத்தைக் கூறுக.*

(*6*) *கைகேயியின் வரங்கள் கேட்டு வருந்திய மன்னவன் எவ்வாறு வெய்துயிர்த்து அலக்கண் எய்தி நின்றான்?*

(7) கோசலநாட்டு வளத்தைப் பல்சுவைப் பகுதியில் கம்பர் எவ்வாறு வர்ணிக்கின்றார்?

(8) ஞாயிறு வானில் எவ்வாறு கூத்தாடுகின்றது?

II. அடியிற் காண்பவற்றுள் எவையேனும் இரண்டினுக்கு நிகழிடமும் பொழுதுங் காட்டி விளக்கவுரையும் வரைக :

(1) "தெளிவளர் பளிங்கின் றிரள்மணிக் குன்றே
சித்தத்துட் டித்திக்கும் தேனே "

(2) "..................நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகு நறுஞ்சுவையே"

(3) "வெம்மை மொழியான் கேட்க விளம்பினீர்"

III. நுமது நினைவிலிருந்து நாட்டு வாழ்த்துப் பாடலை அடி பிறழாது எழுதுக.

IV. (1) அடியில் வரும் கீழ்க்கோடிட்ட பகுதிகளுள் எவையேனும் ஐந்தனுக்கு இலக்கணக் குறிப்பு எழுதுக:

பைந்தமிழ் நன்னாடு

அழுக்காறு உடையான்கண்

உவப்பத்தலைக்கூடி

விளைநிலத்து நெல்லின்

சொல்லற்க

மெல்லியல் கொண்டு

ஒரு மூன்றில்

(2) கீழ்க்காணும் தொடர்களைப் புணர்ச்சி பிரித் தெழுதுக :

சேனின்றும், கொடியாடனுவின், பிரான்றமர், அரிவை யம்பாகத்தான் (இருவகையாக).

V. பின்வருவனவற்றுள் எவையேனும் ஐந்தனுக்கு விடை எழுதுக :—

(1) இங்கிலாந்தில் கூட்டுறவுப் பண்டகசாலைகள் செய்யும் அலுவல்கள் யாவை?

(2) இளந்தத்தர் எவ்வாறு காப்பாற்றப்பெற்றார்?

(3) காந்தியடிகள் காலந்தவறாதவர் என்பதை ஒரு சான்று காட்டி நிறுவுக.

(4) தமிழ்நாட்டில் பண்டைய உள்நாட்டு வணிகத்தைப் பற்றிச் சுருக்கி வரைக.

(5) ஒளி எவ்வாறு உண்டாகிறது?

(6) ஏறுதழுவுதலை விளக்குக.

(7) காவிரிப்பூம்பட்டினத் தொழில்களையும் தொழி லாளர்களையும் பற்றி நீர் அறிவதென்ன?

## SECTION B—METHODS

### B பிரிவு—முறைகள்

(Marks 40)

குறிப்பு : முதல் வினவிற்கும் ஏனையவற்றுள் எவையேனும் இரண்டனுக்கும் விடை எழுதுக.

I. இரண்டாம் வகுப்பு மாணவர்களுக்கு எத்தகைய படிப்புக் குறிப்பேடுகளை (Reading Charts) நீர் ஆயத்தம் செய்வீர்? உமது பயிற்சிக் காலத்தில் நீர் ஆயத்தம் செய்யும் சில ஏடுகளைக் கூறி அவற்றுள் ஒன்றை விளக்கி அதை வகுப்பில் எவ்வாறு பயன்படுத்தினீர் எனவும் வரைக.

II. நான்காம் ஐந்தாம் வகுப்பு மாணவர்களின் சொற் களஞ்சியத்தை (Vocabulary) எவ்வாறு விரிவடையச் செய்வீர்? வகுப்பறையுள் அவற்றுள் ஒன்றை எவ்வாறு நடத்திக்காட்டுவீர் என எடுத்துக்காட்டுகள் தந்து விளக்குக.

III. பார்த்தெழுதும் பயிற்சிகளைக் கொடுப்பதால் விளையும் நன்மைகள் எவை? வகுப்புக்களுக்கு இவற்றைக் கொடுப்பீர், ஏன்?

IV. தொடக்கநிலைப்பள்ளி மாணவர்கள் செய்யும் ஒப்பு விப்பதால் (Recitation of poems) விளையும் நற்பயன்கள் யாவை? மூன்றும் வகுப்புக்கு அத்தகைய ஒரு பாடத்தை எவ்வாறு நடத்துவீர் எனக் கூறுக.

# B. T. S. L. C. Examination—March 1960

## Methods of Teaching and General Language

## GENERAL METHODS—SENIOR GRADE

### I. மிகச் சிறந்த விடையைத் தேர்ந்தெடுத்தல் :

1. ஆசிரியரது முக்கியமான வேலை, குழந்தைகளுக்குத் துணையாக இருந்து,

(a) *அறிவைத் தேடிக்கொள்ள உதவுவதாகும்.* (b) *ஆளுமையைப் பெருக்கிக் கொள்ள உதவுவதாகும்.* (c) *நல்ல பழக்கங்களை வளர்த்துக் கொள்ள உதவுவதாகும்.* (d) *பயனுள்ள திறன்களைக் கை வரப்பெற உதவுவதாகும்.* (b)

2. படிப்பினை மிகவும் பயனுடையதாகச் செய்யவேண்டுமெனின் ஆசிரியர்,

(a) *குழந்தைகள் தங்களைத் தாங்களே அறிந்து கொள்ள வழி காட்டியாக இருக்க வேண்டும்.* (b) *குழந்தைகளுக்கு முழு விடுதலை அளிக்க வேண்டும்.* (c) *போதனைக் கருவிகளை வேண்டிய அளவு பயன்படுத்த வேண்டும்.* (d) *குழந்தைகளைத் தூண்டக் கூடிய சூழ்நிலையில் இருக்கச் செய்ய வேண்டும்.* (a)

3. சிறந்த ஆசிரியர் எனப்படுபவர் குழந்தைகளுக்குப் படிப்பினை

(a) *எளிதாகச் செய்பவர் ஆவர்.* (b) *ஓரளவு கடினமானதாகச் செய்பவர் ஆவர்.* (c) *கவர்ச்சியுடையதாகச் செய்பவர் ஆவர்.* (d) *தமக்கும் குழந்தைக்கும் கவர்ச்சியுடையதாகச் செய்பவர் ஆவர்.* (d)

4. 'பிராஜக்டு' முறைத் திட்டம் என்பது முக்கியமாக

(a) *உற்பத்தித் தொழில் மூலம் கற்றலாகும்.* (b) *நோக்குடைய செயல் மூலம் கற்றலாகும்.* (c) *கூட்டுறவுத் திட்டம் மூலம் கற்றலாகும்.* (d) *குழுச் செயல் திட்டம் மூலம் கற்றலாகும்.* (b)

5. புதிய பாடமொன்றைத் தொடங்குமுன் வினவுதலின் நோக்கமாவது

(a) *பழைய பாடத்தை நன்கு கற்றுப் பயனடைந்துள்ளனரா என்பதைக் காண்பதற்கே.* (b) *புதுப் பாடத்தைக் கற்க வேண்டும்*

என்னும் ஆவலையும் ஆர்வத்தையும் தூண்டுவதற்காகும். (c) குழந்தைகள் புதுப் பாடத்தைப் படிப்பதற்கு ஏற்ற ஆயத்தத்துடன் வந்துள்ளனரா என்பதைக் காண்பதற்காகும். (d) இந்தப் பாடத்தைப் பற்றிக் குழந்தைகள் முன்பே எவ்வளவு அறிந்துள்ளனர் என்பதைக் காண்பதற்காகும். (b)

6. பள்ளிகளில் நாடகங்கள் அமைப்பதன் முக்கியமான நோக்கமாவது

(a) அரங்கு அச்சத்தைப் போக்குவதாகும். (b) பெற்றோர்க்கும் ஆசிரியர்களுக்கும் மகிழ்ச்சியூட்டுவதற்காகும். (c) குழந்தைகளின் ஆளுமையை வளர்ப்பதற்காகும். (d) தாய்மொழிப்பற்றை வளர்ப்பதற்காகும். (c)

7. 'பொம்மலாட்டம்' என்பது ஒரு நல்ல கல்விப் போதனைக் கருவியாவது எவ்வாறு எனின்

(a) குழந்தைகளுக்கு அது பொழுதுபோக்காகும். (b) அது குழந்தைகளுக்கு அறிவைப் புகட்டுகிறது. (c) அது குழந்தைகளின் கைத்தொழில் திறனை வளர்ப்பதற்குப் பயிற்சி அளிக்கிறது. (d) அது குழந்தைகளைக் கூட்டுறவு முறையில் குழுவாக அமைந்துவேலை செய்ய ஊக்குவிக்கின்றது. (d)

8. இயைபு போதனை பயனுடையதாக இருப்பது எவ்வாறெனின்

(a) பலவகை அறிவும் ஒன்றோடொன்று தொடர்புடையன ஆதலின். (b) ஒரே ஆசிரியர் எல்லாப் பாடங்களையும் கற்பிக்க முடியுமாதலின். (c) குழந்தை தான் செய்யும் வேலையில் பற்றுடையதாதலின். (d) இவ்விதமான போதனைக்குக் குறைந்த காலமே போதுமாதலின். (c)

9. சிறந்த இயைபு போதனா முறை

(a) ஒரு முகமாக அமைவது. (b) இணை முகமாக அமைவது. (c) பன்முகமாக அமைவது. (d) இயற்கையாக அமைவது. (d)

10. கைத்திறனை விரைவாகவும் நன்றாகவும் பெற வேண்டுமெனின் முக்கியமாக

(a) குழந்தைகள் அடிக்கடி திரும்பத் திரும்பச் செய்து பயிற்சி பெறுதல் வேண்டும். (b) ஆசிரியர்கள் நன்றாகச் செய்து காட்டல் வேண்டும். (c) துணைக் கருவிகள் சிறந்தவையாக இருத்தல் வேண்டும். (d) ஒழுங்காகச் செய்யவேண்டும் என்ற உணர்ச்சி குழந்தைகளிடம் அமைதல் வேண்டும். (d)

## II. முடித்தல் மாதிரி :

(1) ஒத்த தரம் உடைய பிள்ளைகள் ஒரே வகையாகக் கற்பிக்கப் பெற்றாலும் அவர்கள் எல்லாரும் அதே———கற்பதில்லை. (வேகத்தில்)

(2) நாம் எதை——அதையே கற்கிறோம். (செய்கிறோமோ)

(3) சோதனைச் சாலை முறை————வேலைக்கு வழி செய்கிறது. (தனியாள்)

(4) மெய்ம்மை என்பது பிறர் சொல்லி அறிவதன்று; மற்று அதனை———பொழுது அறிவதாகும். (கண்டுபிடிக்கும்)

(5) பள்ளி அரங்குகளில் நிகழும் விவாதங்களின் ஒரு நோக்கமாவது குழந்தைகள் தங்கள் உணர்ச்சிகளை———இன்றி———வெளியிடும் வகையில் ஊக்குவிப்பதாகும். (தடங்கல், நேரிடையாக)

(6) எல்லாவற்றையும்————அனுபவத்தின் மூலம் அறிவதென்பது இயலாததாகும். (பயத்தின்)

(7) ஆசிரியர் கற்பிக்கும் பொருளைச் சுருக்கிக் கூறி மாணவர்களை எழுதிக் கொள்ளச் செய்வது தீமை பயப்பது. அது மாணவர்களை———விடுவதில்லை. (சிந்திக்க)

(8) நாடாவில் பதிவு செய்தல் மாணவர்கள் தங்கள் குரலைத் தாங்களே———உரிய சிறந்த வழியாகும். (மதிப்பிடுதற்கு)

(9) மாணவர்கள் தினசரிச் செய்தியைப் படிப்பதற்கு ஆசிரியரது திறமையான———தேவையாகும். (வழி காட்டுதலும்)

(10) கைத் தொழில் மூலம் இயைபு படுத்துவது என்பது ————அறிந்த ஆசிரியரால்தான் இயலும். (தொழிலை நன்கு)

(11) ஆதாரப் பள்ளிகளில் இயைபுபோதனை என்பது கைத்தொழிலோடு தொடர்புடையது மட்டுமின்றி———, ———என்றவற்றுடனும் தொடர்புடையதுமாகும். (இயற்கைச் சூழ்நிலை, சமூகச் சூழ்நிலை)

(12) கல்விப்பயன் தருவதான ஒரு செயல் திட்டத்தை ஆசிரியர் திட்டமிடு முன்னர் குழந்தைகள் அச் செயல் திட்டத்தின்——உணரும்படிச் செய்ய வேண்டும். (நோக்கத்தை)

(13) மாணவர்கள் ஒரு கல்விப்பயன் தரும் செயலைச் செய்து முடிப்பதில் பங்கு கொள்வதன்றி அச்செயல் பற்றிய———பங்கு கொள்ள வேண்டும். (திட்டமிடுதலிலும்)

(14) இயைபு கற்றல் என்பது செயல் திட்டத்தின் முடிவில் நிகழ்வதன்றியும் செயல் திட்டத்தின்——நிகழ்வதாகும். (பொழுதே)

(15) குழந்தைகள் தாங்கள் செய்யும் செயல்களைப் பற்றிய ————ஒன்றினைத் தயார் செய்து கொள்வார்களானால் இயைபு படுத்துதல் மிக எளிதாகும். (பதிவுகள்)

(16) ஆதாரப் பள்ளிகளில் புத்தகங்களுக்கு இடம்——. (உண்டு)

(17) ஓர் ஆண்டிற்காகத் தேர்ந்தெடுக்கும் செயல்கள் குழந்தைகளுடைய————ஏற்றதாக அமைதல் வேண்டும். (தேவைகளுக்கு-வாழ்க்கைக்கு)

(18) ஆட்சி முறையினை————தொடர்புடைய செயல்களால் நன்கு கற்பிக்கக்கூடும். (பள்ளி ஆட்சிமன்றத்தன்னாட்சி)

(19) நூற்றல் என்பது————கற்பிப்பதற்குப் பெருமளவு வாய்ப்புக்களைத் தருவதாகும். (கலைக்கு)

(20) எந்தச் செயலோடும் இயைபு படுத்தக் கூடிய பாடமாவது————ஆகும். (மொழி)

## III. சுருக்க விடை அளித்தல் வகை:

1. தனி போதனையைக் காட்டிலும் வகுப்புப்போதனையால் ஏற்படக்கூடிய முக்கியமான நன்மைகள் இரண்டினைக் குறிப்பிடுக.

குழு வேலைக்குதவுகிறது; கூட்டுறவு மனப்பான்மை வளருகிறது; நேரமும் சக்தியும் சிக்கனமாகின்றது.

2. வேலையைப் போல விளையாட்டும் எவ்வெவ் வகையில் கல்விப் பயனுள்ளதாக அமைந்துள்ளது?

விளையாட்டும் ஒருவகைச் செயலே. தனியாகவும் குழு முறையிலும் விளையாட்டை ஏற்பாடு செய்யலாம்.

3. ஆதாரக் கல்வியிலும் டால்டன் திட்டத்தின் அம்சங்கள் காணக்கூடும். அவை யாவை ?

தன்னம்பிக்கையை வளர்த்தல்; திட்டமிட்ட செயல்கள்.

4. குழுச் செயல்களில் குழந்தைகள் ஈடுபடுதல் வேண்டும் என்பது ஏன்?

தனித்திறமைகளின் வெளியீட்டிற்கும் பிறரிடமிருந்து கற்றலுக்கும்.

5. நடித்துக் காட்டலின் மூலம் கல்வி ஏற்பாட்டில் கற்பிக்கக் கூடிய இரண்டு பாடப் பொருள்களைக் குறிப்பிடுக.

*மொழி, இலக்கியம்; சரித்திரம்.*

6. வகுப்புப் புத்தக நிலையங்களைக் குழந்தைகளே கண் காணித்து வருவதால் விளையும் நன்மைகள் யாவை?

*புத்தகங்களை அதிகமாக எடுத்துப் படிக்க வாய்ப்பு.அவற்றைப் படித்து இன்புற ஆர்வம்.*

7. நான்காம் வகுப்பிற்கு வரைப்படப் பாடத்தினை எத்தகைய செயல் மூலம் கற்பிப்பாய்?

*நூற்பின் மூலம்—தொழிற் பதிவேடுகள் மூலம்.*

8. குழந்தைகள் தாமாகவே தொகுத்த கையெழுத்துப் பத்திரிகையால் விளையும் இரண்டு கல்விப் பயன்களைக் குறிப்பிடுக.

*ஆக்க மொழித்திறன் வெளியீடு, சித்திரம் வரைவதில் பயிற்சி, கூட்டுறவு மனப்பான்மை.*

9. குழந்தைகள் தம் கருத்தை வெளியிடுவதற்கு எத்தகைய நிலையில் விளக்கப் படங்களைப் பயன்படுத்த அவர்களுக்கு நீங்கள் உதவக் கூடும்?

*செய்த செயலை யொட்டிய பதிவுகள் வைத்தல்.*

10. எல்லாவற்றையும் குழந்தைகள் ஆதாரத் தொழில் மூலமாகவே கற்க வேண்டுமெனின் அதனால் உண்டாகும் விளைவுகள் என்னவாக இருக்கும்?

*செயற்கையான (உண்மையற்ற) இணைப்புப் போதனையாக இருக்கும்.*

11. ஆதாரப் பள்ளியின் கைத்தொழிலானது குழந்தைகளைப் பள்ளிச் சமுதாயத்திற்குத் தொண்டாற்றும் வகையில் எவ்வாறு ஈடுபடுத்துகிறது?

*தொழிலில் கிடைக்கும் நிகர வருமானம் மதிய உணவிற்கும் குழந்தைகளுக்கு உடை வழங்குவதற்கும் பயன்படுத்தப் படலாம்.*

12. நூற்றலும் நெய்தலுமே ஆதாரக் கைத்தொழிலாக அமைந்துள்ள பள்ளிகளில் நெய்தற்ருெழிலைக் கூடிய அளவில் விரைந்து கற்பிக்க வேண்டியதன் அவசியம் என்ன?

*திறமையாக நூற்றலின் அவசியத்தைக் குழந்தை உணரும்.*

13. தனிப்பட்ட குழந்தையானது எந்த வகுப்பில் தன்னுடைய கைத்தொழில் பற்றிய முழுமையான குறிப்புப் புத்தகத்தை மேற்கொள்கிறது?

*நான்கு அல்லது ஐந்தாவது வகுப்பிலிருந்து.*

14. கல்விப்பயன் அளிக்கும் திட்டத்தின் வளர்ச்சியில் செயல் முடித்தல் ஒரு முக்கியமான படியாக அமைந்துள்ளமையை விளக்க வல்ல ஓர் எடுத்துக் காட்டு தருக.

*செயல் முடிந்தபின் வகுப்பறையைச் சுத்தம் செய்தல், செயலுக்குப் பயன்படுத்திய கருவிகளை அதனதன் இடத்தில் சேர்ப்பித்தல்.*

15. ஒரு செயல் திட்டத்தில் பதிவு செய்தல் என்பது அதன் முழு விவரத்தையும் எழுத்து மூலமாகவேதான் அமைய வேண்டும் என்பதில்லை. உதாரணங்காட்டி விளக்குக.

*வாய்மொழி அறிக்கைகள், உரையாடல்கள், படவிளக்கங்கள் மூலமாகவும் அமையலாம்.*

16. பொதுத் துப்புரவுத் திட்டம் ஒன்றினை மேற்கொள்வதற்கு முன் குழந்தைகள் மனத்தைத் தயார் செய்வது எப்படி?

*துப்புரவு செய்யவேண்டியதன் அவசியத்தை அவர்கள் உணர வேண்டும். துப்புரவு செய்யும் ஆர்வத்தைத் தூண்ட வேண்டும்.*

17. சிறந்த புத்தகங்களைவிடக் கல்விப் பயணம் கல்விப் பயனுடையதாக விளங்கும் வழிகளுள் இரண்டினைக் குறிப்பிடு.

*நேரடி அனுபவம், செயல் நிகழ்ச்சி.*

18. ஆதாரப் பள்ளியில் கால அட்டவணை என்பது தலைவனாக அல்லாமல் தொண்டனைப் போலவே துணை செய்யும் என்பது எதனால் ?

*அப்படியே கால அட்டவணையைப் பின்பற்ற இயலாது. செயலைப் பொறுத்தும் மாணவர்களின் விருப்பத்தை யொட்டியும் மாற்றிக் கொள்ளலாம்.*

19. ஓர் ஆண்டிற்கான பாடங்களை ஆசிரியர் முன் பாகவே திட்டமிட வேண்டும் என்பது ஏன்?

*வாழ்க்கையை யொட்டிச் செயல்கள் தேர்ந்தெடுக்கவும் இணைப் புப் பாட போதனை முறை சிறப்புற அமையவும்.*

20. ஆசிரியர்கள் தங்கள் வேலைபற்றிய மாதாந்திர அறிக்கையை எழுதுவதன் நோக்கம் யாது?

*சுய மதிப்பீட்டிற்கு வழி செய்கிறது. பிற்கால வேலையைத் திறமையாகச் செய்ய உதவுகிறது. தவறான முறைகளைத் திருத்திக் கொள்ள உதவுகிறது.*

## IV. பொருத்துக

| | | |
|---|---|---|
| (a) *பொதுத்துப்புரவு செய்தல்* | (1) *உணவுச்சுய தேவைப்பூர்த்தி* | (b) |
| (b) *தோட்ட வேலை* | (2) *உழைப்பின் உயர்வு* | (a) |
| (c) *கொடி வணக்கம்* | (3) *உற்பத்திப் பெருக்கச்செயல்* | (d) |
| (d) *தக்ளி நூற்றல்* | (4) *குடிமைப் பயிற்சி* | (c) |
| (e) *பள்ளிக் கல்விப் பயணம்* | | |
| (f) *செய்தி வாசித்தல்* | (5) *பொழுது போக்கு* | (g) |
| (g) *குழுப்பாடல்* | | |

## V. பத்தியைப் படித்து விடையளி:

*இப்புதுக் கல்வித்திட்டத்தின் நோக்கமாவது, சிறப்பாக எந்திரம் போல் தொழிற்பயிற்சி செய்யும் தொழிலாளர்களைப் பெருக்குவதன்று; மற்று கைத்தொழிலால் மறைந்து கிடக்கும் வாய்ப்பு வளங்களைப் பயன்படுத்தி அவைகளைக் கல்விப் பயனுடையவையாகச் செய்வதற்குரிய வழிகளைக் காண்பதேயாகும். எனவே, உற்பத்திப் பெருக்கத் தொழிலால் அமைந்துள்ள தொழிற் பகுதி பள்ளிக் கல்வி ஏற்பாட்டில் இடம் பெறுவதுடன் பிற பாடப் பொருள்களையும் போதனை செய்வதற்குரிய முறைகளையும் தூண்டுவதாக அமைதல் வேண்டும். இத் திட்டத்தில் முக்கியமாக வற்புறுத்த வேண்டியவை கூட்டுறவுச் செயல்முறை, திட்டமிடும் பயிற்சி, திருத்தமாக எதையும் செய்யும் பழக்கம், தன்னூக்கம், கற்றலில் தனிப்பொறுப்பு, ஏற்றல் என்பன ஆகும்.*

1. இப்பகுதிக்கு ஏற்ற தலைப்பு ஒன்றினைக் குறிப்பிடுக.

*'வேலை மூலம் கல்வி.'*

2. இக்கல்வித் திட்டத்தின்படி ஒரு மாணவன் சிறந்த கைத்தொழிலில் வல்லவனுவான் என எதிர்பார்க்கப் படுகிறதா ?

ஆம்.

3. கைத்தொழில் மூலம் நிறைவேறக் கூடிய கல்வியின் நோக்கம் ஒன்றினைக் கூறுக.

*நல்ல பழக்கங்கள், செயலாற்றுவதில் தன்னூக்கம்.*

4. கூட்டுறவுச் செயல் முறைத் தத்துவத்தைக் கைத் தொழில் அல்லாத வேறு ஏதாவது ஒரு பாடத்தின் மூலம் பயன்படுத்தும் வகையினை உதாரணத்தின் மூலம் விளக்குக.

*மொழிப்படிப்பு—சமூகப்பாடம்—விஞ்ஞானம்.*

5. யாதேனும் ஒரு பள்ளிப் பாடத்தைக் கற்றலில் தனிப் பொறுப்பேற்றல் அமையுமாற்றை உதாரணந் தந்து விளக்குக.

*தட்ப வெப்ப நிலைகளைப் பதிவு செய்தல்—தொழிற் பதிவுகளை எழுதுதல்.*

# B. T. S. L. C. Examination—March 1960

## General Methods—Junior Grade

## I. மிகச் சிறந்த விடை மாதிரி :

**1. கற்றல் சிறப்பாக நிகழ்வது**

(a) குழந்தைகட்குச் சிக்கல் தோன்றும் போதாகும். (b) ஆசிரியருக்குச் சிக்கல் தேன்றும் போதாகும். (c) குழந்தை சொற்படி நடக்கும் போதாகும். (d) ஆசிரியர் பாடத்தை நன்றாகத் தயார் செய்துகொண்டு வரும் போதாகும். (a)

**2. நல்ல போதனைக் கலையானது**

(a) ஏற்ற அறிவுறுத்தலைச் செய்தலில் அடங்கியுள்ளது. (b) குழந்தையின் அனுபவத்தில் பங்கு கொள்வதில் அடங்கியுள்ளது. (c) சரியான மாதிரிக் கேள்வி கேட்டலில் அடங்கியுள்ளது. (d) அது எல்லாப் பருவத்தினருக்கும் ஏற்றதாகும். (b)

**3. விளையாட்டுமுறை சிறந்த முறையாவது எதனால் எனின்**

(a) அது ஆசிரியருக்கு மிகுதியான ஓய்வினைத் தருகிறது. (b) அது குழந்தைகட்கு மிகுதியான மகிழ்ச்சியைத் தருகிறது. (c) அது தற்காலச் சிறந்த கல்வி முறைகளில் ஒன்று ஆதலின். (d) அது எல்லாப் பருவத்தினருக்கும் ஏற்றதாகும். (b)

**4. கல்வியில் முக்கியமான அம்சமாவது**

(a) சரியான முறையாகும். (b) விருப்பத்திற்குரிய ஆசிரியராவர். (c) விருப்பமுள்ள குழந்தை ஆகும். (d) நல்ல பள்ளிக் கூடக் கட்டிடம் ஆகும். (b)

**5. நிழலாட்டங்கள் மூலம் குழந்தைகளை**

(a) நாடகம் நடிப்பதில் ஆர்வமுடையவராகச் செய்யலாம். (b) சித்திரம் வரைவதிலும் அட்டை வேலைகளிலும் ஆர்வமுடையவராகச் செய்யலாம். (c) வரலாற்றில் ஆர்வமுடையவராகச் செய்யலாம். (d) தமிழ் இயக்கத்தில் ஆர்வமுடையவராகச் செய்யலாம். (a)

6. மாணவர்கள் எண்ணிக்கையில் அதிகமாகப் பங்கு கொள்வது

(a) வகுப்பறையில் கற்கும் போதாம். (b) வகுப்புக்களுக் கிடையே நிகழும் விவாதப் போட்டிகளிலாகும். (c) பள்ளிப் பேரவைகளிலாகும். (d) குழுவாக உரையாடலின் போதாகும். (c)

7. இயைபு படுத்திக் கற்பித்தல் விரும்பத்தக்கதாக இருத்தற்குக் காரணம்

(a) அது ஆசிரியரை மையமாக உடையது. (b) அது கைத் தொழிலை மையமாக உடையது. (c) அது வாழ்க்கையை மைய மாக உடையது. (d) அது குழந்தையை மையமாக உடையது. (c)

8. ஆதாரக் கல்வியானது புத்தகத்தை மையமாக உடையது அன்று எனினும்

(a) ஆதாரப் பள்ளிகளுக்குப் பாடப் புத்தகங்கள் வைக்கப் படலாம். (b) வாசித்தற்கான பல புத்தகங்கள் உபயோகிக்கப் படலாம். (c) மெய்ம்மைகளைப் போதிப்பதற்குப் புத்தகங்களைப் பயன் படுத்தலாகாது. (d) புத்தகங்கள் ஆசிரியர்களால் மட்டும் உபயோகப் படுத்தப் படலாம். (b)

9. சிறந்த கல்விப் பயன்கள்

(a) குழுச் செயலால் உண்டாகும். (b) சரியான எதிர்ப்பா லும் போட்டியாலும் உண்டாகும். (c) ஆசிரியர் தூண்டத் தக்க எடுத்துக் காட்டாக அமைவதால் உண்டாகும். (d) ஒவ்வொரு குழந்தையையும் தனித் தனியாகக் கவனித்தலால் உண்டாகும். (d)

10. குழந்தைகளைக் கற்கும்படிச் செய்வதற்கான சிறந்த வழியாவது

(a) பாராட்டுச் சொற்கள். (b) தவறு செய்பவர்களைத் தண் டித்தலாகும். (c) பரிசளித்தலாகும். (d) கற்றற்கான நிலைகளை அமைத்தலாகும். (d)

## II. முடிக்கும் மாதிரி :

(1) பாடத்திட்டம்————ஆக அமையவேண்டுமேயன்றிக் கொடுங்கோலனாக அமைதலாகாது. (துணைவன்)

(2) பள்ளியில் செயல் திட்டங்கள் அமைக்கப்படும் போது அது ஒரு———ஆகின்றது. (சமூகம் (அ) செயல்முறைப் பாடசாலை)

(3) ஆதாரக் கைத் தொழில்———அனுபவத்திற்கு வழி செய்கிறது. (நேரடி)

(4) கைத் தொழிற்றிறனைக் கற்பதில் ஆசிரியருடைய——— முக்கியமான அம்சமாக விளங்கும். (முன் மாதிரி) (அ) (செய்து காட்டும் திறன்)

(5) ———முறை குழந்தைகளுக்கு விடுதலையளிக்கிறது. (மாண்டிசோரி)

(6) ஒரு வேலையைச் செய்தவுடன் அதை———இருத்தலாகாது. (முடிக்காமல்)

(7) ஒரு செயலை மதிப்பிடுதலின் ஒரு பயனாவது அடுத்த தடவை————செய்வதாகும். (மேலும் நன்றாக)

(8) ஒரு குழந்தையின் கேள்விக்கு ஆசிரியர் பதில் கூற இயலவில்லையெனின் அவர்——வேண்டும். (ஒப்புக்கொள்ள

(9) ஆசிரியர் குழந்தைகளைச் செயல் பற்றித் திட்டமிடுதலில் மட்டுமின்றி அதற்கான———பங்கு கொள்ள விடுதல் வேண்டும். (தயாரிப்பிலும்)

(10) ஆதாரக் கல்வியானது செயலை மையமாக வுடையது. எனினும் அதில்————சிறந்த இடமுண்டு. (புத்தகங்களுக்கு)

(11) குழுப்படிப்பில் ஒரு பங்கு————கும் உண்டு. (ஆசிரியர்)

(12) கல்வித் திரைப்படங்கள் குழந்தைகளின்——ஏற்றவையாக இருக்கவேண்டும். (வயதிற்கு)

(13) குழந்தைகளுக்குத் தெரியாத மெய்ம்மையினைப் போதிக்க விரும்பும்போது ஆசிரியர்———வினாக்களைக் கேட்கக் கூடாது. (விடை எதிர்பார்த்த)

(14) குழந்தைகள்————விரும்புவதால் சொற்பொழிவு முறை அவர்களுக்கு ஏற்றதன்று. (செயலை)

(15) நற்பழக்கத்தை வளர்க்க இடைவிடாத———வேண்டும். (பாடப் பயிற்சி)

(16) செயற் குறிப்பெழுதல்————ஒரு துணையாகும். (இணைப்பிற்கு)

(17) ஒரு மெய்ம்மையினைக் கற்றற்குரிய சிறந்த வழியாவது அதனைக் குழந்தை தானே————ஆகும். (கண்டறிவது)

(18) ஒரு————கற்றலுக்குப் பல முறை கூறலும் பயிலலும் இன்றியமையாதனவாகும். (திறனைக்)

(19) குழந்தையானது————சூழ்நிலை அடிப்படை விஞ்ஞானத்தைக் கற்றற்குரிய வாய்ப்புகளைத் தரும். (இயற்கைச்)

(20) குழந்தையின் சமுதாயச் சூழ்நிலை————கற்றுக்கொள்வதற்குரிய வாய்ப்புகளைத் தரும். (சமூகப்பாடம்)

## III. குறுகிய விடை மாதிரி:

1. சுயநோக்க முறை (Project Method) ஆதாரக் கல்வியோடு எவ்வகையில் தொடர்புடையதாகும்?

*அதுவும் செயலை மையமாகக் கொண்டுள்ளது.*

2. விளையாட்டு வழி என்பது ஒரு பொருள் அன்று. மற்று அது ஒரு போதனு முறையாகும். ஓர் உதாரணம் தருக.

*கணக்கு அல்லது சங்கீதம் இந்த முறைப்படிக் கற்றுத்தரப் படலாம்.*

3. ஒரு திறனைக் கற்கும்போது தொடக்க நிலையில் தவறுகள் நிகழாவண்ணம் காக்க வேண்டுவதன் முக்கியத்துவம் யாது?

*தவருன பழக்கத்தால் திறனைக் கற்க முடியாது.*

4. ரேடியோவை ஒரு போதனைத் துணைக் கருவியாக உபயோகிக்கும்பொழுது எத்தகைய முன்னெச்சரிக்கையை மேற்கொள்ள வேண்டும்?

*சரியான நிகழ்ச்சிகளைத் தேர்ந்தெடுத்தல், நல்ல முன் தயாரிப்பு, நிகழ்ச்சி முடிந்த பிறகு அதை யொட்டிய பின்பற்றல்* (follow up)

5. குழந்தைகளது ஒழுக்கத்தை வளர்ப்பதில் ஆசிரியர் மேற்கொள்ளும் பங்கு யாது?

*ஆசிரியர் முன் மாதிரியாக இருந்து வழி காட்டவேண்டும்.*

6. சில ஆசிரியர்கட்கு இயைபு போதனை கடினமான முறையாகத் தோன்றுவது ஏன்?

*பாட விஷயங்கள் போதுமான அளவு சேகரிக்காதது; செயல் சரியான முறையில் நடைபெருதது.*

7. ஒரு வகுப்பிற்குக் குறிப்புகள் தருவதால் வரும் கேடு யாது?

*சுய சிந்தனையைக் கெடுக்கிறது. வளர்ப்பதில்லை.*

8. பகட்டு அணிவகுப்பு (Pageant) மூலம் எந்தப் பாடப் பொருளை நன்கு கற்பிக்கக் கூடும்?

*சரித்திரம் (அ) சமூகப் பாடம்.*

9. பாடமுடிவில் வினவுதலின் நோக்கம் யாது?

*புதிய பாடத்தை மாணவர்கள் எவ்வளவுக்குப் புரிந்துகொண்டார்கள் என்பதை அறிய.*

10. குழந்தைகளின் வீட்டுச் சூழ்நிலையை ஆசிரியர் ஒரு வகையாக அறிந்து கொள்வதற்கான இரு வழிகளைக் குறிப்பிடுக.

*குழந்தைகளின் வீடுகளுக்குச் செல்லுதல்; குழந்தைகள் வாய்மொழியான அல்லது எழுதிய தினசரிக் குறிப்பு.*

11. கைவேலை மூலம் ஒரு மனப்பான்மை வளர்க்கப்படுகிறது என்பதை விளக்குக.

*ஆசிரியருடைய எடுத்துக் காட்டும், மாணவர்களின் திறன் பெறுதலும்.*

12. ஆண்டு முழுவதற்குமான செயல் திட்டத் தொகுதிகளைத் தேர்ந்தெடுப்பதில் மிக முக்கியமாகக் கவனிக்கத் தகுந்தது யாது ?

*இயற்கை, சமூகம், தொழில் இம் மூன்று சூழ்நிலைகளிலிருந்தும் வாழ்க்கைக்குரிய செயல் நிகழ்ச்சிகள்.*

13. குழந்தைகளது உள்ளத்தைச் செயல் திட்டத்தைத் தொடங்குமுன்னர் எங்ஙனம் தயார் செய்வீர்கள்?

*நோக்கம், திட்டமிடல், தயாரித்தல், முறைகள் இவற்றை மாணவருடன் சேர்ந்து விவாதித்தலால்.*

14. ஆதாரப் பள்ளியில் எப்படிச் சமூகப் பழக்கத்தை வளர்க்கக் கூடும் என்பதற்கு ஓர் உதாரணம் தருக.

*தன் முறை வரும்வரை காத்திருத்தல்.*

15. "ஒரு செயலைப் பதிவு செய்தல் என்பது அதனைப் பற்றி விவரமாக எழுதிவைத்தல் மட்டுமன்று."—இதனை இனிது விளக்குக.

*மாணவர்கள் செய்த செயலை வாய்மொழியாகத் தொடர்ச்சியாகக் கூறச் செய்யலாம். அல்லது செயலை யொட்டிச் சிறு உரையாடல் நடத்தலாம்.*

16. கால அட்டவணையிலிருந்து ஆசிரியர் எப்போது வழுவக் கூடும்?

மாணவர்களின் விருப்பப்படி ஒன்றைக் கற்கும் பொழுதாவது, செய்யும் செயல் நிகழ்ச்சியைப் பொறுத்தாவது.

17. ஒரு செயலுக்குத் திட்டமிடுவதற்குத் தேவையான ஐந்து நிலைகள் அல்லது நிபந்தனைகள் யாவை?

நேரம், இடம், ஆட்கள், மூலப்பொருட்கள், கருவிகள்.

18. கைவேலைக்குரிய கருவிகளையும் பொருள்களையும் தக்கபடி அமைத்துக் கொள்வதில் குழந்தைகள் பங்கு கொள்வதால் உண்டாகும் நன்மைகள் யாவை?

நல்ல முறையில் கருவிகளைப் பாதுகாத்துக் கொள்வர். அவற்றை நன்கு பயன்படுத்துவர். தொழில் விருத்தியடையும்.

19. ஆதாரப் பள்ளியின் வேலைக்கு அடிப்படையாக அமைந்துள்ள கவர்ச்சியுடைய ஐந்து வகையான வாழ்க்கைத் துறைகளைக் குறிப்பிடுக.

துப்புரவு ஆரோக்கியம்; தன்னம்பிக்கை பெறுதல்; தொழில்; குடிமையும் சமூகப் பயிற்சியும்; ஆக்கக் கலைகள்.

20. விளையாட்டு மூலம் எத்தகைய இயைபு போதனை நிகழக் கூடும்?

பாட்டு, மொழி, கணக்கு முதலியன.

## IV. பின்வருவனவற்றில் I, II ஐ, பொருத்துக:

| I | II | விடை |
|---|---|---|
| (a) கேள்வி காட்சிக் கல்வி | (1) நாடகம் | (d) |
| (b) காட்சிக் கல்வி | (2) சொற்போர் | (f) |
| (c) கேட்டுக் கற்றல் | (3) தொலைக்காட்சி | (a) |
| (d) செய்து கற்றல் | (4) ரேடியோ | (c) |
| (e) வாசித்துக் கற்றல் | | |
| (f) பேசிக் கற்றல் | | |
| (g) எழுதிக் கற்றல் | (5) திரைப்படம் | (b) |

V. பின்வரும் பகுதியை நன்கு படித்துப் பின்வரும் வினாக்களுக்கு ஏற்ற விடையினைத் தருக:—

சரியான கல்விக் கண்ணோட்டத்தோடு பார்க்குமிடத்துச் சிறப்பான கைத்தொழிலைக் கல்விக்கு அடிப்படையாகக் கொள்ளின்

குழந்தைகள் பெறக்கூடிய அறிவு மிகுதியும் உண்மையுடையதாக வும் மெய்ம்மை யுடையதாகவும் அமையும். எனவே அறிவு வாழ்க்கையோடு தொடர்புடையதாகும். அதனது பலவான அம்சங்களை ஒன்றோடொன்று இணைத்துக் காட்டலாம். தேர்ந்தெடுக்கப் பெற்ற கைத்தொழில் அல்லது உற்பத்திப் பெருக்க வேலை கற்றற் குரிய வாய்ப்பு வளங்களை மிகுதியாகக் கொண்டு இருத்தல் வேண்டும். முக்கியமான மனிதச் செயல்களுடனும் ஆர்வங்களுடனும் அது இயற்கையாக இணைக்கப்படுவதுடன் பள்ளிக் கல்வி ஏற்பாடு முழுவதையும் தழுவுவதாக அமைதல் வேண்டும்.

## கேள்விகள் :

1. மேற்கண்ட பகுதிக்கேற்ற தலைப்பினைத் தருக.

*(i) தொழில் மூலம் கல்வி—ஏன்? (ii) ஆதாரக் கல்வி ஏன்?*

2. கைவேலையினைச் செய்வதன் மூலம் அறிவினைப் பெறக் கூடுமா?

*முடியும். தொழில் மூலம் குழந்தை அறிவு பெற வாய்ப்புக்கள் உண்டு.*

3. அம் முறையில் அறிவினைப் பெறுதலால் ஆகும் நன்மை என்ன?

*இவ்வாறு பெற்ற அறிவு உண்மையானதாகவும், வாழ்க்கையோடு ஒட்டியதாகவும் நிரந்தரமாகவும் இருக்கும்.*

4. மேற்குறித்த நோக்கத்திற்கேற்ப ஆதாரக் கைவேலையினைத் தேர்ந்தெடுக்கும்போது கருத்தில் கொள்ளவேண்டுவது யாது?

*கல்விப்பயன் நிறைந்ததாக இருக்கவேண்டும். இயற்கையான இணைப்பிற்கு உதவவேண்டும். பாடத்திட்டத்தை நிறைவேற்ற உதவவேண்டும்.*

[illegible] வேலையுடன் இணைக்கக் கூடிய இரண்டு முக்கிய [illegible] மனிதச் செயல்களையும் ஆர்வங்களையும் குறிப்பிடுக.

*தூய வாழ்க்கை [illegible] அன்றாடத் தேவைகளான துணி, உணவு முதலியன உற்பத்தி [illegible] செய்தல், சமூக வாழ்க்கை, ஓய்வு நேர வேலை.*

